# அருள்திரு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

## பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர் !
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர் !
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனை வழிபட வாரீர் !
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர் !

முடிகாணிக்கை தரத் தனியிடம் !
தங்குவதற்கேற்ற வசதிகள் !
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல இழுவை ரயில் வசதி !
பொங்கியெழும் பேரழகினைத் தாங்கிவரும் தங்கரதம் காண வசதிகள்!
தங்கமயில் மீது பவனி வரும் முருகனுக்கு அர்ச்சனை, அபிஷேகத்தின் விசேஷ கவனம்.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக்கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. பழனியாண்டவர் செந்தமிழ் கல்லூரி
6. செவிடர் பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்பு இல்லம்
10. முதியோர் இல்லம்.
11. குழந்தைகள் காப்பகம்.
12. மருத்துவமனை
13. சித்த வைத்தியசாலை
14. நடமாடும் வைத்தியசாலை.

பழனித்திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக ஒருகோடியே ஐந்து லட்ச ரூபாய் செலவில் மாபெரும் திருப்பணி திட்டம் செயல்பட உள்ளது. இந்த ஆலயத்திருப்பணிகளுக்குத் தாங்கள் கொடுக்கும் நன் கொடைகள் மத்திய அரசின் வருமானவரி இலாகாவில் வரி விலக்குக்கு உட்பட்டது. எனவே இம்மாபெரும் திருப்பணித் திட்டத்தின் வெற்றிக்குத் தங்களால் இயன்ற அளவு நன்கொடை வழங்கியருளி அருள்மிகு ஞான தண்டாயுதபாணி சுவாமியின் பேரருளுக்குப் பாத்திரராகி நல்வாழ்வு பெறுமாறு அனைவரையும் வேண்டிக் கொள்கின்றோம்.

**திரு. என். நாச்சிமுத்து**, எம். எல். ஏ.,
**திரு. புலவர். சி. பழனிச்சாமி**, எம். எல். ஏ.,
**திரு. பச்சையப்ப கவுண்டர், ஏ.**
அறங்காவலர்கள்.

**இரா. அர்ச்சுனன்**, பி.ஏ.,
துணை ஆணையர், நிர்வாக அதிகாரி.





...சி
மணி 1
...5
...0



ஆசிரியர்
ந.ரா.முருகவேள்
எம்.ஏ., எம்.ஓ.எல்.

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

துணை ஆசிரியர்:
கே.எஸ்.ஜெகன்னுதன்



# பேரறிஞர் அண்ணா பிறந்தநாட் கவிதை

முதல்வர் டாக்டர் கலைஞர்



தமிழே! தேவே! தங்கக் கனியே!
அமிழ்தே! அன்பே! அழகுக் கலையே!
எழிலே! அறிவே! எண்ணச் சுடரே!
பொழிலே! புகழே! பொன்னின் மணியே!
திருவே! உருவே! திங்கட் குளிரே!
தருவே! நிழலே! நிழல்தரு சுகமே!
தாயே உந்தன் தாளினைப் பற்றி
தலைமைக் கவிதை பாடிட வந்ததேன்.
அண்ணாவழியில் அயராது உழைக்கப்
பண்ணால் முழங்கிப் பயணம் தொடரக்
கண்போல் கழகம் காக்கும் சூளுரை
விண்போய் முட்டிட உரக்கக் கூவுக!

*  *  *

இன்றைக்கு நடந்தது போல் இருக்குதய்யோ கழகக்
கன்றை விட்டுப் பசு பிரிந்த அந்தக் காட்சி.
குன்றைத் துளைக்குமொரு வேலெடுத்துக்
குறிபார்த்து நெஞ்சைக் கிழித்ததுபோல்
என்றைக்கும் நமைவிட்டுப் பிரியாத அண்ணன்
அன்றைக்கு மறைந்துவிட்டான்; அய்யகோ!
ஆயிற்று ஏழெட்டாண்டு!
'கொன்றை வேந்தன்' என அவ்வையின் பாட்டுண்டு—நம்
கொள்கை வேந்தனுக்கோ அழியாத பாட்டுண்டு!

*  *  *

பொங்கு கடல் நடையும் பூவையரின் மென் நடையும்—தன்
புதுத்தமிழ் நடையில் காட்டியவன்.
பொல்லாங்கு உரைப்போரை வாதத்தில் மாட்டியவன்.
பொடியெடுத்துப் போடும் நேரம்
புன்னகையாய் எதிரிகளைப்
பொடியாக்கி வாட்டியவன்.
புழுதிக்குணம் படைத்தோரை ஓட்டியவன்....
பொன்மகுடம் தமிழ்த்தாய்க்குச் சூட்டியவன்.
எழுதுகோல் வைத்திருந்தான் அண்ணன்—அது
ஏமாந்த தமிழர்களின் தலையெழுத்தை மாற்றத்
தாளில் உழுதகோல்—நம்
நாளில் அழுதவரைச் சிரிக்கவைக்க
அவன் தந்த ஆட்சிக் கோல்!
குதிகால்கள் பரதம்ஆடப் பேச்சரங்கில்
கொய்யாத் தமிழ் எடுத்துக் கொடுத்திட்டார்.
சதிகாரர், சாய்க்கின்றோர் தமிழ்மொழியை என்றபோது
அதிகார மிரட்டலுக்கு அஞ்சாமல் சிறைப்பட்டார்.
அவர்,
மொழிப் போரின் மூலபலம்! களம் கண்டு
விழிப் போரைக் கண்டுகொண்டு—தன்னைப்
பழித்தோரைப் பாராட்டும் பண்பாளர்
அழித்தாராம் ஆதிக்க மொழி வெறியை!

*  *  *

பலகார பட்சணம்—பாணிக்கிரகணம்
வதூரவா கிரகப் பிரவேசம்—பந்துமித்திரர்
நமஸ்காரம்—உபய குசலோபரி
நாமாவளி—துவஜா ரோகணம்; என
நாக்குக்கு நுழையாத வடமொழிப் படையெடுப்பால்
வாக்குக்குச் சுவை சேர்க்கும் வண்ணத் தமிழ் வாடுவதோ ?
பாக்குக்கும் வெற்றிலை சுண்ணும்புக்கும் அவர் வாய் சிவக்கும்.
தாக்குதற்குத் தமிழைப் பிறமொழி பெருகி வந்தால் அவர் கண் சிவக்கும்.
அக்ராசனுதிபதியை அவைத் தலைவராய் உலவவிட்டார்.
அந்தநாள் பிரசங்கம், சொற்பொழிவாய் மாறிற்றின்று!
நமஸ்காரம் கிமஸ்காரம் எல்லாம்
நலமான தமிழிலே நல்ல வணக்கமாய் மலர்ந்தது காண்!
தூய்மையாய்த் தமிழில் கொடியேற்றுவிழா வந்தபின்னர்
துவஜாரோகணத்துக்கு அங்கென்ன வேலை?
வாய்மையே வெல்லுமென்றால் 'சத்யமேவ ஜெயதே' கோபித்தா கொள்ளும்?

* * *

அண்ணனை ஒரு சீமான் என்பேன்.
அவர் நண்பர்களையே செல்வமாய்ப் பெற்றிருந்தார்!
அண்ணனை ஒரு துறவி என்பேன்;
அவர் வாயெல்லாம் காவி தரித்திருந்தார்!
அண்ணனை ஒரு தெய்வம் என்பேன்;
அவருக்குத் துரோகிகளும் தூபதீபம் காட்டுகின்றார்!
அண்ணனை ஒரு கண்ணன் என்பேன்
அவரைப் பூதகியும் தூக்கிப் பால் கொடுக்கின்றாள்!
அண்ணனை ஒரு மன்னன் என்பேன்
அரியாசனமாய் அவர் தம் இதயத்தை ஆக்கிக்கொண்டார்.

* * *

அரியாசனங்கள் அவரை ஆரம்பத்தில் புரியாமல் எதிர்த்ததுண்டு,
சரியாசனச் சமதர்மம் போதிக்கவந்த
தென்னாட்டு மார்க்ஸ் என்று
பின்னால் தான் தெளிவடைந்தார்.

* * *

அண்ணன் எழுதிய நூல் கொண்டு
சின்னக்கரையொன்று நெய்கின்றேன்.
''ஓர் இரவு சந்திரோதயத்தில்
நல்ல தம்பி வீட்டு வேலைக்காரி
ஓடுகிறாள் சந்திர மோகனிடம்.
காதல் ஜோதியிலே சொர்க்கவாசல் கண்டு
கம்பரசம் பருகுகிறார்—மொண்டு!
கண்டிருந்த பெற்றோரும் கலங்கோபம்—கொண்டு
நியாயத்தை நிலைநாட்ட நீதிமன்றம்—சென்றார்
வேலிபோட்டுக் காதலைத்தான் தடுத்திடவாவேண்டும்?—இந்தத்
தாலி போட்ட அத்தானை நான் மறந்திடவா வேண்டும்?
தாய் மகளுக்குக் கட்டுவதா தாலி—
எனக்கேட்டு வாதிட்டாள் 'குமரிக்கோட்டம்'—
என்றும் அவள் முன்னே பணத்தின் தோட்டம்?
நீதிதேவன், மயக்கத்தைப் போக்கி நின்று
நீவிர் வாழ்க நன்று என வாழ்த்திச் சென்றான்''

* * *

இரக்கமெனும் ஒரு பொருளிலா அரக்கனென
இராவணனைக் கம்பன் இகழ்ந்தது செல்லாதென
உருக்கமிகு ஓவியத்தை எழுத்தால் தீட்டி
சுருக்கென்று தைக்கின்ற கேள்விகளால்
தேவலோகப் பிறவிகளைத் தெருவுக்கு
இழுத்து வந்தார்.

மேனிப்பசி முழுதும் தீர்த்த பின்னர்
மேனகையைக் கைவிட்ட மாமுனியும்,
தந்திரத்தால் அகலிகையைச். . . . . .பார்த்த
இந்திரனும் இணையற்ற பெரு வேந்தும்,
கருணையின் வடிவங்கள் தாமோ?
கம்பரே! ராவணன்தான் கடுநெஞ்சக்—காவலனே?
அண்ணன் எழுப்பிய வினுக்கணக்கு—இம்
மண்ணில் எவர்தான் விடையளிப்பார்?

* * *

''உண்டென்பர் சிலர் இல்லை யென்பார் சிலர்
எனக்கில்லை கடவுள் கவலை—
ஒன்றே குலம் ஒருவனே தேவன்—இதை
ஒப்புவதே உண்மை ஆத்திகமாம்.
ஒருவனை ஒருவன் ஏமாற்றுதிருப்பதே ஆத்திகமாம்.
நன்றே சொல்வேன் நமக்குக் கடவுள்
நலிந்தோர் சிரிப்பில்தான்—இதனைக்
கொள்கையாய் நாட்டுக'' என்றார்—அறிவுக்
கொடியை ஏற்றுக என்றார்!

* * *

கழகம் தான் மெய்யான கம்யூனிஸ் டென்று
பழகு தமிழ் உவமையெலாம் காட்டியது அண்ணனன்றோ?
வறுமையை ஒழித்திட அவர் காட்டியதே நல்வழியன்றோ?
உரிமைகள் பெருகிட உண்மைகள் நிலைத்திட அவர்
உரைத்ததுதான் நெறியன்றோ?
நாடு தழைத்திட நற்றமிழ் வளர்ந்திட
அவர் நாவசைவே முரசன்றோ?
நாளும் அவர் நமையாளும் அரசன்றோ?

* * *

வாரத்து நாட்களிலே புதனைத்தான் தேர்ந்தெடுப்பர் வைதீகர்—
அண்ணா,
வாழ்ந்திட்ட நாட்களிலே எதனை நான் தேர்ந்தெடுத்து நினைத்துப்பார்க்க.
''தம்பீவா! தலைமை ஏற்கவா!'' என்று
நாவலரை மாநாட்டில் அழைத்தாரே;—அதனையா?
''தம்பியிருக்குமிடம் எனக்கு யாத்திரைத்தலம்'' என்று
பாளையங்கோட்டைதனில் பகர்ந்தாரே;—அதனையா?
தீராத பிரச்சினையைத் தீர்ப்பதற்குச்—சிந்திக்கப்
பேராசிரியர் வீட்டுக்குச் செல்வாரே;—அதனையா?
பிரிய மனமின்றிப் பிரிந்திருந்த பதினெட்டு ஆண்டின் பின்னே
பெரியாரின் முகம் காணச் சென்றோமே அவரோடு! அதனையா?
எதனை நினைத்தாலும்; எங்களண்ணா!
உனதுருவம்—ஏற்றமிகு திருவுருவம்
அதனை நினைத்தே யாம் ஆறுதலைக் கொள்கின்றோம்.

* * *

'தம்பியுடையான் படைக்கஞ்சான்' எனமுழங்கிவிட்டுத்
'தனிமரம் தோப்பாகாது' எனச் சொல்வாய்—இங்கோர்
தனிமரம், தானேதான் தோப்பென்று போன வரை நீ அறிவாய்.
'சனிப் பெயர்ச்சி' சிலருக்கு நல்லதென்பர் புராணீகர்; அது மெய்யோ? பொய்யோ?
நம் கழகத்தில் சனிப் பெயர்ச்சி நற்பலனைத் தந்த தண்ணா!
உன் வழியில் உழைக்கின்றோம் அதனாலே
ஒதிய மிலார் முருங்கைக் கொம்பு—
ஒடிபட்டுச் சிதறுதல் போல்—பகை
முறிபட்டுப் பஞ்சாய்ப் போகும்!
நீ தந்த விளக்கெடுத்து நடக்கின்றோம்
நெய்யிட்டுத் திரியிட்டு உதவுகின்றார் தமிழ் மக்கள்
கடுமழையில் அணையாமல் காற்றுக்கு நடுங்காமல்

கரம்பொத்திக் கைவிளக்கைக் காக்கின்ருேம்.
வரம் ஒன்று தந்திடண்ணு... நான்
தவம் இருந்து கேட்கின்றேன்.
அடித்தளத்து மக்களுக்கு அடுக்கடுக்காய்ச் சாதனைகள்
அண்ணு! உன் வழியில் அயராமல் நடப்பதெல்லாம்
கண்ணுல் ஒருமுறை நீ பார்த்து விட்டால்
எம் கவலையெல்லாம் பறந்து போகும்.
தண்ணுர் முழுநிலவே தட்டாமல் நீ வந்துவிடு!
இந்த வரம் நீ தந்தால்
இறவா வரம் பெற்றதுபோல்
இன்பத் தமிழகமே கூத்தாடும்—எங்கள்
துன்பமெலாம் தொய்ந்துவிடும்.

**முடிவுரைக் கவிதை**

முடிவுரை எதற்காக இன்று?
''அண்ணு வாழ்க'' என்பதே நமக்கு
முதலுரையும்
முடிவுரையும்!
அதனுலே அனைவரும் சொல்வோம்;
அண்ணு வாழ்க!
அண்ணு வாழ்க!
அண்ணு வாழ்க!

**வணக்கம்!**



## "நாத விநோதம்"

*(செய்திச் சுருக்கம்)*

அருணகிரி நாதர் பெருமானின் 600-ஆம் ஆண்டு விழாக் குறித்துச் சென்னை வானெலி நிலையத்தின் சார்பில், ''நாத விநோதம்'' என்னும் சிறப்பு இசை நிகழ்ச்சி 20-9-75 சனிக்கிழமையன்று, கலைவாணர் அரங்கில் நடைபெற்றது. சென்னை வானெலி நிலைய இயக்குநர் திரு. கோபால் அவர்கள், வரவேற்புரை நிகழ்த்தினர். திரு டி.ஆர். பாப்பா அவர்கள், இந்தச் சிறப்பு இசை நிகழ்ச்சியைத் திறம்பட அமைத்து நடத்தினர். 5 வயலின், 2 வீணை, 1 நாதஸ்வரம், 2 தபேலா, 2 மிருதங்கம், 1 மேளம், 1 சிதார், 1 ஆர்மோனியம் ஆகிய இசைக்கருவிகளுடன், அவற்றில் மிகவும் தேர்ச்சி பெற்ற இசைக்கலைஞர்கள், இந்நிகழ்ச்சிக்குத் துணை புரிந்தனர். அருணகிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்களே, இதன்கண் முழுதும் இடம்பெற்றன. திரு சீர்காழி கோவிந்தராஜசன், பம்பாய் சகோதரிகள், திரு லலிதா, திரு சரோஜா, திரு நீரஜா, திருமதி பி. சுசீலா, திரு பாலமுரளிகிருஷ்ணு, திரு லால்குடி சுவாமிநாதன், திரு இராஜசேகரன் முதலிய பல சிறந்த இசைக்கலைஞர்கள், பல்வேறு திருப்புகழ்ப் பாடல்களை அழகுறப்பாடி, அனைவரையும் மகிழ்வித்தனர். அருள்மொழி அரசு திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள், ஒவ்வொரு திருப்புகழ்ப் பாடலுக்கும் முன்னுரை விளக்கம் கூறிச் சிறப்பித்தார்கள். பெருந்திரளான ரசிகர்கள் வந்திருந்து, கேட்டு மகிழ்ந்து இன்புற்றனர். இத்தகைய சிறப்பான முறையில், அருணகிரி நாதரின் 600-ஆம் விழாவை நன்கினிது கொண்டாடுவதற்கு ஏற்பாடு செய்த அனைத் திந்திய வானெலி நிலையத்தாரின் அரும்பெருந்தொண்டு, குறிப்பாக இயக்குநர் திரு கோபால், மற்றும் திரு டி. ஆர். பாப்பா ஆகியவர்களின் தொண்டு, அனைவராலும் பெரிதும் புகழ்ந்து போற்றிப் பாராட்டப் பெற்றது. இச்சிறப்பு இசை நிகழ்ச்சி பதிவு செய்யப் பெற்று, 28-9-75 அன்று இரவு 9-15/10-45 மணி அளவில் வானெலியில் ஒலிபரப்பப்பட்டது.

இனியும் இத்தகைய இசைநலஞ்சான்ற, பக்திநலப் பண்பாடு மிக்க, அரிய இனிய நிகழ்ச்சிகளை, அவ்வப்போது அமைத்துக் கொடுத்து, அவற்றின் மூலம் நமது சமயப்பண்பாட்டு நலத்துறையின் வளர்ச்சிக்கு, மேலும் மேலும் தொண்டாற்ற வானெலி நிலையம் பெரிதும் முன்வருவதாக!

—ஆசிரியர்.

# மனிதனும் தெய்வமாகலாம்!

திருமுருக கிருபானந்தவாரியார்

மறைந்த அமரர் பேரறிஞர் அண்ணு அவர்களுடைய பிறந்த நாள் விழாவை நாம் இங்கே சீரும் சிறப்புமாகக் கொண்டாடிக் கொண்டிருக்கின்ரேம்.

ஒரு விழா கொண்டாடுவது என்று சொன்ஞல், அந்த விழா தருகிற குணங்களை நாம் நினைவு கூர வேண்டும். அந்தக் குணங்களை நாமும் பின்பற்ற வேண்டும். யாருக்காக விழா எடுக்கிறேமோ, அவர்கள் எப்படி வாழ்ந்தார்கள்? அவர்களை ஏன் உலகம் பாராட்டுகிறது? என்பதைச் சிந்தித்துப் பார்த்து, அவர்களது அருங் குணங்களைப் பின்பற்றுவது தான் விழாவினுடைய குறிக்கோள். அந்த வகையில் அறிஞர் அண்ணு அவர்களது விழா, கொண்டாடப்படும் நேரத்தில், அவரிடத்தில் இருந்த சிறப்பான குணங்களை யெல்லாம் நாம் பின்பற்ற வேண்டும்.

''அண்ணு'' என்ற சொல்லுக்கு அணுகி அருள் புரிதல் என்று பொருள். அணுகுதல் என்ருல், நெருங்குதல் என்று பொருள், கிணற்றில் விழுந்தவனைக்கிணற்றுக்குள் குதித்துத்தான் காப்பாற்ற வேண்டும். அதைப் போல, அறிஞர் அண்ணு அவர்கள், ஏழை எளியோரை நெருங்கி அவர்களது துயர் துடைத்தார்.

''அண்ணு! எண்ணக் கடவேனே?
அடிமை சால அழகுடைத்தே!'' [1]

''அண்ணு! அமுதே!
நகவே தகும்எம் பிரான்என்னை
நீசெய்த நாடகமே'' [2]

என்றெல்லாம் திருவாசகத்தில் மாணிக்க வாசகர், பரமேசுவரனையே ''அண்ணு'' என்று தான் அழைத்தார்.

''மனிதனும் தெய்வமாகலாம்'' என்ற சொற்களில் மனிதனும் என்பது, இழிவு சிறப்பும்மை. மனிதன் தனது அரிய குணங்களால் தெய்வமாகலாம் என்பதுதான் இதன் பொருள். மனிதன் என்பதற்குச் சிந்திப்பவன் என்று பொருள். மனது மனிதனுக்கு மட்டுந்தான் உண்டு. ஆகவேதான் ஒவ்வொருவர் வாழ்க்கையும் வேறுபடுகிறது. சிந்திக்கச் சிந்திக்கப் புதுப் புதுக் கருத்துக்கள் தோன்றுகின்றன. அப்படிப் பட்ட மனிதன் தனது சிந்தையினலே, அறிவாற்றலினலே, அரிய குணங்களின்லே தெய்வமாகி விடுகிருன். தன்னுடைய அறிவாற்றலாலும், உயர் பண்புகளாலும், அரிய குணங்களாலும் தெய்வமாக மாறியவர்தான் பேரறிஞர் அண்ணு அவர்கள்.

பேரறிஞர் அண்ணு அவர்களிடத்தில் எத்தனையோ சிறப்பான குணங்கள் இருந்தன. அவற்றுள் அறிவு, பண்பு ஆகிய இரண்டு சிறப்பான குணங்கள் மிகுந்து இருந்தன. இந்த இரண்டு குணங்களும் இருந்தால் யார் வேண்டுமானுலும் தேவர்களாகலாம்.

சிலரிடத்தில் பண்பு இருக்கும். அறிவு இருக்காது. சிலரிடத்தில் அறிவு இருக்கும். பண்பு இருக்காது.

திருவள்ளுவர் தமது குறளில் ''அரம் போலும் கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கட் பண்பில்லாதவர்'' என்றும், ''அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார் என்னுடையரேனும் இலர்'' என்றும் மிகுந்த பொருள் பதிந்த வரிகளில் குறிப்பிட்டுள்ளார்.

பிறர் குற்றம் செய்தால் பேரறிஞர் அண்ணு அவர்கள் பார்க்காமல் இருந்தார். பார்த்தாலும் மன்னித்தார். ''மாற்ருன் தோட்டத்து மல்லிகையும் மணக்கும்'' என்று பரந்த உள்ளத்தோடு சொன்னவர் அண்ணு. பண்புக்கு மரியாதையும், பெருமையும் கொடுத்தவர் பேரறிஞர் அண்ணு அவர்கள்.

மூன்று குணங்கள் ஒருவனிடத்தில் இருந்தால் அவன் தெய்வமாகலாம். எந்த உயிர்களுக்கும் மனம் நோக, உள்ளம் நோக, உடம்பு நோக நடவாமை—ஒருவன் எதிர்க்கலாம், அல்லது வசை மொழியலாம்; அவன் செய்த குற்றத்தை மன்னித்து விடுதல்—அறிவினை அறிவினல் அறிவது ஆகிய மூன்று குணங்களும் இருந்தால் மனிதனும் தெய்வமாகலாம். இந்த மூன்று அருங் குணங்களும் பேரறிஞர் அண்ணு அவர்களிடத்திலே இருந்தன.

''அறிவை அறிவது பொருள்'' என்று அருணகிரியார் திருப்புகழிலே பாடியுள்ளார். ''அறிவும் சிவனும் இரண்டென்பர் அறிவிலார்'' என்று திருமூலர் திருமந்திரத்திலே குறிப்பிட்டு உள்ளார். அண்ணு அவர்கள் மேதாவிலாசம் நிரம்பிய அறிஞராகத் திகழ்ந்தார்.

நல்ல நூல்களைக் கற்று அறிவுக்கு அறிவாக விளங்குபவர்கள் அறிவு, வானத்திலே பறக்கும் மேதைகளாவார்கள். அவர்களுக்குக் கீழான எண்ணங்கள் வராது. அவர்களுக்கு வேண்டிய வர்கள் வேண்டாதவர்கள் கிடையாது; விருப்பு—வெறுப்புக்கள் கிடையாது. இப்படிப்பட்ட வர்கள்தான் மனித தெய்வங்கள்; பரம்பொரு ளுக்கு ஒப்பானவர்கள். இந்த அருங்குணங்கள் பேரறிஞர் அண்ணு அவர்களிடத்திலே இருந் தன. எல்லோரும் வாழ வேண்டும் என்று எண்ணிச் செயல்பட்டால் மனிதனும் தெய்வ மாகலாம். சுயநலம், விருப்பு வெறுப்பு இவை களுக்கு எல்லாம் அப்பாற்பட்டு எல்லோரும் வாழ வேண்டும் என்ற அருளுணர்வோடு தொண்டு புரிந்து தெய்வமானவர் பேரறிஞர் அண்ணு.

என் நாடு வாழ வேண்டும், என் மொழி வாழ வேண்டும், என் இன மக்கள் வாழ வேண் டும் என்று எண்ணுவது அன்பு நிலை. அன்பு மலர்ந்து அருளாகும் போது விருப்பு வெறுப்பு, வேண்டியவர்—வேண்டாதவர் என்ற நிலைக ளுக்கு அப்பாற்பட்டு, எல்லோரையும் வாழ வைக்க வேண்டும்; உதவ வேண்டும் என்று பரந்து விரிந்த மனப்பான்மை ஏற்படுகிறது. அன்பு மலர்ந்து அருளாகிப் பேரறிஞர் அண்ணு அவர்கள் தெய்வமானுர்கள்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்''

என்று வள்ளுவர் அழகாகக் குறிப்பிட்டுள்ளார். இந்த வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து காட் டியவர் அண்ணு. எனவே அவர் தெய்வமானுர்.

''தன்னரிய திருமேனி
சதைப்புண்டு தவிப்பெய்திப்
பன்னரிய பெரும்பாடு
படும்போதும், ''பரிந்து எந்தாய்
இன்னதென அறியகிலார்
தாம்செய்வது; இவர்பிழையை
மன்னியும்'' என்று எழிற்கனிவாய்
மலர்ந்தார்நம் அருள்வள்ளல்''

அதுபோலப் பகைவனும் வாழ்க! என்னை ஏசு கின்றுனே அவனும் வாழ்க! என்று மன்னித்து ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவம்தான் அருள். அன்பு மலர்ந்து, அருளாகிறது. எனவே, அண்ணு அவர்களிடத்திலே இருந்த அன்பு மலர்ந்து அருளாகித் தெய்வமாக மாறிவிட்டார்.

விருந்தோம்பும் பண்பும், பிறர்க்கு உதவ வேண்டும் என்ற ஈகை உணர்வும் உள்ளவன் தெய்வத்துக்கு நிகரானவன் என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

''செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு''.

என்பது குறள்.

எல்லோரும் வாழவேண்டும் என்று எண் ணினுல் மனிதனும் தெய்வமாகலாம். அப்படி எண்ணியவர் அண்ணு.

''யான் பெற்ற பெரும் பேற்றை
இவ்வுலகும் பெறுதல் வேண்டுவனே!''

என்று வள்ளலார் கூடப் பரம்பொருளிடத்திலே வேண்டுகின்றுர்.

வாலி இராமச்சந்திரனைப் பார்த்துக் கேட் கிறுன்: ''என் மீது நீ அம்பு எய்தாயே, அது என்ன நியாயம்?'' என்று.

''வாய்மையையும் மரபையும் காத்தவன் ஆயிற்றே. உனது தந்தை தசரதன். உனது தம்பி பரதனுக்கு அண்ணனுக இருக்க உனக்கு தகுதியுண்டா? என் மீது மறைந்திருந்து அம்பு எய்து விட்டாயே? இது என்ன நியாயம்?'' என்று வரிசையாகக் கேள்விகள் கேட்டான் வாலி.

''நீ உன் தம்பி மனைவியை விரும்பினுய். அதனுல் உன் மீது அம்பெய்தேன். தக்கன, தகாதன, செய்வன தவிர்ப்பன ஆகியவற்றை அறியாதவன் மனிதனுக இருந்தாலும் விலங்கு'' என்று இராமன் கூறுகின்றுன்.

''தக்க இன்ன தகாதன இன்னஎன்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல் விலங்கும் புத்தேளிரே'' என்றபடி

அருளுள்ளம் வருமானுல் மனிதனென்ன? விலங்கே தெய்வமாகலாம்.

ஆதிமூலம் என்று அழைத்த யானை கஜேந் திர ஆழ்வார் ஆகிவிட்டார். சீதையின் கண் ணீரைத் துடைக்க வந்த ஜடாயு என்ற பறவை தெய்வமாகிவிட்டது. ஒரு பறவை தெய்வமாகு மானுல், யானை தெய்வமாகுமானுல், அறிஞர் அண்ணு தெய்வமாகமாட்டாரா?

யார் ஒருவர் பிறர் துயரைத் துடைக்கி றுர்களோ அவர்கள் தெய்வமாவார்கள். யார் தன்னுடைய இறுதி நாள் வரை மூச்சிலும் பேச்சிலும் பிறர்க்காகவே வாழ்கிறுர்களோ அவர்கள் தெய்வமாவார்கள். வீட்டின் துயர் களைந்து, நாட்டின் துயர் களைந்து, மக்களின் துயர் களைந்ததாலே அண்ணு அவர்கள் தெய்வ மானுர்கள். தூய்மையின் வாய்மையுடைய அண்ணு அவர்கள் தனக்கென வாழாது பிறர்க் கெனவே வாழ்ந்து தெய்வமானவுர்கள். அவரது பிறந்த நாளில் அவரிடமிருந்த அருங்குணங்களைப் பின்பற்ற நாம் உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும்.



# அருள்மிகு
# பார்த்தசாரதி சுவாமி
# திருக்கோயில்

## திருவல்லிக்கேணி, சென்னை–5.

### அருள்மிகு அழகியசிங்கர் திருப்பணிக் கைங்கர்ய வேண்டுகோள்

திருவல்லிக்கேணி என்னும் இத்திருத்தலம் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளுள் ஒன்று. இத்திருக்கோயிலிலுள்ள ஆனந்த விமானம், ஆளவந்தார், உடையவர், மணவாள மாமுனிகள், ஆண்டாள், கஜேந்திர வரதர் விமானங்கள் திருப்பணிகள் செவ்வனே செய்யப்பட்டு மகாசம்ப்ரோட்சணம் வெகு நேர்த்தியாக 23-3-75-ல் நடந்தது யாவரும் அறிந்ததே.

இதர அருள்மிகு நரசிம்மசுவாமி விமானம், பேயாழ்வார் விமானம் செப்பனிடுதல்; தாயார் விமானம், மேல ராஜகோபுரம், வர்ணம் தீட்டுதல்; நம்மாழ்வார் சந்நிதி சீர்திருத்தல்; அருள்மிகு அரங்கநாதர், இராமர் சந்நிதிகளுக்குப் புதிய விமானம் நிர்மாணித்தல் முதலிய திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகிறது. மேற்படி திருப்பணி வேலைகளுக்கு சுமார் இரண்டு லட்ச ரூபாய் செலவாகுமென எதிர்பார்க்கப்படுகிறது.

திருப்பணி நன்கொடைக்கு வருமானவரி விலக்கு உண்டு. ரூ. 1000[-க்கு மேல் நன்கொடை அளிப்பவர்கள் பெயர் சலவைக்கல்லில் பொறிக்கப்படும். நன்கொடை அளிக்க விரும்புவோர் ''நிர்வாக அதிகாரி, அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில், திருவல்லிக்கேணி, சென்னை-600005'' என்ற முகவரிக்கு அனுப்பி எம்பெருமானின் திருவருளுக்குப் பாத்திரராகுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அறங்காவலர் குழு:

**பி. ஜி. செங்கல்வராய செட்டி,**
தலைவர்.

**கே. ஆர். ஸ்ரீநிவாசாச்சாரி, எம்.ஏ.,**

**நாதெள்ள ஆதிகேசவலு குப்தா.**

**எஸ். சோமசுந்தரம், பி.ஏ., பி.எல்.,**
நிர்வாக அதிகாரி.

# தமிழின் தொன்மையும் சிறப்பும்

மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன், எம்.ஏ.,

''வடமொழியைப் பாணினிக்கு
வகுத்தருளி, அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை
உலகமெலாம் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார்
கொல்லேற்றுப் பாகர் எனில்,
கடல் வரைப்பின் இதன் பெருமை
யாவரே கணித்தறிவார்''?

—மாதவச் சிவஞான சுவாமிகள்.

இந்தியாவின் மிகத்தொன்மையானமொழிகளெனத் திகழும் மொழிகள் தமிழ் மொழியும், வடமொழியும் ஆகும். இவ்விரண்டு மொழிகளின் தொன்மைமிக்க இலக்கணங்கள் தொல்காப்பியமும், பாணினியமும் ஆகும். தென்மொழிகளில் தமிழ் மொழியே மிகத் தொன்மை வாய்ந்தது. மற்ற தென் மொழிகளுக்கு அடிப்படையாகவும் இருக்கிறது. அவ்வாறே வட இந்திய மொழிகளுக்கு மிக மிக அடிப்படையாவது சம்ஸ்கிருதமேயாகும்.

இன்று கிடைக்கும் தமிழ் நூல்களில், முதல் நூலாகக் கருதக் கூடியது 'தொல்காப்பியம்'. அஃது அதனை இயற்றிய ஆசிரியரான 'தொல்காப்பியர்' பெயராலேயே வழங்கி வருகிறது. அது போலவே வடமொழி இலக்கண ஆசிரியர் பாணினியால் இயற்றப்பட்ட இலக்கணம் 'பாணினீயம்' என வழங்கப்பட்டு வருகிறது. பாணினி இலக்கணத்தில் எட்டு அதிகாரங்கள் உள்ளன. இந்த எட்டு அதிகாரங்களில் நான்காயிரம் இலக்கணச் சூத்திரங்கள் உண்டு. தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், என மூன்றுக இருந்த போதிலும், மொழிக்கு அடிப்படையான எழுத்தையும், சொல்லையும், இரண்டு அதிகாரங்களில் நன்கு விளக்கி, மொழி மூலமாக விளக்க வேண்டிய பொருள்களைப் பற்றிப் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல், மரபியல் என ஒன்பது இயல்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

---

''தமிழ் வடமொழி மற்றும் இந்திய மொழிகளின் ஆராய்ச்சி நிறுவனத்தின்'' சார்பில், 21—9—75 ஞாயிறன்று, நடைபெற்ற கருத்தரங்கினைத் தொடங்கி வைத்துத், தமிழக ஆளுநர் மேதகு **கே. கே. ஷா** அவர்களின் தலைமையில், கல்வியமைச்சர் மாண்புமிகு நாவலர் **டாக்டர் இரா. நெடுஞ்செழியன்**, எம்.ஏ., அவர்கள் ஆங்கிலத்தில் நிகழ்த்திய சிறப்புரையைத் தழுவிய தமிழாக்கம்.

—ஆசிரியர்.

ஆனல், வடமொழி இலக்கணத்தில் எழுத்துக்களும், சொற்களும்தான் விரிவாகக் கூறப்படுகின்றன. பொருளைப் பற்றிப் பாணினி தன் நூலில் ஒன்றும் கூறவில்லை. தொல்காப்பியர் பாணினியைக் காட்டிலும் முன் தோன்றியவர் என்பதற்குச் சான்றுகத் தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரத்தில் ''ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்'' என்ற சொற்றொடர் காணப்படுகின்றது. ஐந்திரம் என்ற இலக்கணத்தை இயற்றிய இந்திரன், பாணினிக்கு முன் தோன்றியவர். தொல்காப்பியத்தில் ஐந்திரத்தைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. ஆனல், பாணினியைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. எனவே தொல்காப்பியர் பாணினிக்கு முன் தோன்றியவர் என நாம் அறிய முடிகிறது.

வடமொழியில் இரண்டாயிரம் மூலப்பதங்கள் என்னும் தாது, அல்லது வேர்ச் சொற்கள் கூறப்படுகின்றன. இவ்விரண்டாயிரம் மூலப் பதங்களின் மூலமாகப் பல இலட்சம் பெயர்ச் சொற்களும், வினைச் சொற்களும், இலக்கண முறையில் உண்டாக்கப்படுகின்றன. இவ்வாறு பெயர்ச் சொற்களையும், வினைச்சொற்களையும் குறிப்பிடுவதால்தான் பாணினியின் இலக்கணம், இயல்பு விளக்க இலக்கணம் (Descriptive grammar) எனக் கருதப்படுகிறது. இவ்வித இயல்பு விளக்க இலக்கணம், உலகின் வேறு எந்த மொழிகளிலும் இல்லையென்று, உலக மொழிப் புலவர்கள் கூறுகின்றனர். மொழியியல் துறையில் தனது இலக்கணத்தின் காரணமாகப் பாணினி பெரிதும் போற்றப்படுகின்றுர்.

இன்று பாணினி இலக்கணத்தின் அடிப்படையில், வடமொழி பயிலப்படுகிறது. வடமொழியைச் கசடறக் கற்கப் பாணினியின் நான்காயிரம் சூத்திரங்களையும், அவற்றின் விளக்க உரைகளையும் கற்க வேண்டியது, இன்றியமையாதது ஆகிறது. இவ்விலக்கண நூல்களைக் கற்பதற்கே பன்னிரண்டு ஆண்டுகள் வேண்டுமெனப் பஞ்சதந்திரம் நகைச்சுவையாக எள்ளிக் கூறுகிறது.

தொல்காப்பியத்தை விரிவாகப் படிக்க முடியாதவர்கள், 'நன்னூல்' என்னும் சிறு இலக்கணத்தைப் படிக்கிறுர்கள். அவ்வாறே பாணினி இலக்கணத்தைப் படிக்க இயலாதவர்கள், 'சித்தாந்த கௌமுதி' எனும் சிறு நூலைப் படிக்கிறுர்கள். வடமொழியில் மூலப் பதங்

களைத் 'தாது' எனக் கூறுவார்கள். 'பூ' என்ற தாதுவாகிய வேர்ச்சொல்லைப் 'பவதி' என இலக்கண முறையில் குறிப்பிடுவதற்குச் சுமார் ஐம்பது சூத்திரங்களைப் பயன்படுத்த நேரிடுகின்றது. இந்த முறை, இன்றைய சூழ்நிலைக்கு ஒத்துவராத காரணத்தால்தான் 'பண்டார்க்கர்' போன்ற ஆங்கிலம் அறிந்த அறிஞர்கள், எளிய முறையில் சிறு இலக்கண நூல் இயற்றியுள்ளார்கள். அவ்வித முயற்சிகளை நாம் தமிழிலும் பார்க்கின்றோம்.

பாணினி இலக்கணம் பொருள்களைக் கூறு விட்டாலும் கூட, அவர் சொற்களையும், சொற்களின் இயல்புகளையும் விவரிக்கும் தன்மையைக் கொண்டு, அவர் வாழ்ந்த காலத்துச் சமூக நிலையை உணர முடிகிறது. அதைப் போலவே தொல்காப்பியத்தின் ஆராய்ச்சி மூலமாக அக்காலத்துச் சமூக அமைப்பு, மக்கள் ஒழுக்கம், மணவாழ்க்கை, சாதிப் பிரிவு, வணங்கும் தெய்வங்கள், போர் முறை, தமிழ் நாட்டு எல்லை, மக்களின் பழக்க வழக்கங்கள் போன்றவைகளை நம்மால் அறிய முடிகிறது.

தமிழில் உயிர் மெய் எழுத்துக்கள் முப்பது ஆகும். ஆனால் வடமொழியில் உயிர்மெய் எழுத்துக்கள் ஐம்பத்தொன்று ஆகும். சொற்களைத் தமிழில் உள்ளது போலப் பெயர்ச்சொல், வினைச்சொல் என இரு பெரும் பிரிவாகப் பிரித்து வடமொழியிலும் வழங்குகின்றனர். தமிழ் மொழிக்குள்ள ஏழு வேற்றுமைகள் வடமொழிக்கும் உண்டு. வேற்றுமைகளைத் தமிழ் மொழியிற் பெயர்ச் சொற்களுடன் சேர்த்து எழுதுவது போல, வட மொழியிலும் அமைந்துள்ளது. தமிழ்ச் சொற்கள் பொருள்களைக் குறிக்கும்போது ஒருமை, பன்மை என வழங்குகின்றன. ஆனால் வடமொழிச் சொற்கள், பொருள்களை ஒருமை, இருமை, பன்மை என வழங்குகின்றன. இன்றைய வடமொழிப் புலவர்கள் இருமை தேவையற்றதாக நினைக்கிறார்கள். தமிழில் இருமை இல்லாதது சிறப்பாகும். இந்தியிலும், ஆங்கிலத்திலும் இருமை கிடையாது.

தமிழில் ஆண்பால், பெண்பால், பொதுப்பால் என மூவகை உள்ளன. வடமொழியிலும் இம்முறை கூறப்பட்டுள்ளது. ஆனால் வாக்கியத்தில் வரும் வினைச்சொற்கள் முப்பாலையும் ஆங்கிலம் போல ஒரே விதமாகக் குறிப்பிடுகின்றன. உதாரணமாக ராம: கச்சதி, சீதா கச்சதி, கௌ: கச்சதி என்ற வாக்கியங்களில் கச்சதி எனும் வினைச்சொல் ஒரே விதமாக இருக்கும். ஆங்கிலத்திலும் இவ்வாறே உள்ளது. ஆனால் தமிழில் இராமன் போகிறான், சீதை போகிறாள், பசு போகிறது என்ற இந்த மூன்று வாக்கியங்களிலும் வினைச்சொல் பால்களைக் குறிக்கிறது.

தமிழ் மொழியில் பால்பாகுபாடு மிக முறையாக அமைந்துள்ளது. தமிழ் இலக்கண ஆசிரியர்கள் அவன், அவள், அது எனக் குறிப்பிடுகின்றனர். வடமொழியிலும், ஆண்பால், பெண்பால் பொதுப்பால் என மூவகை உண்டு. தமிழில் இறந்த காலம், நிகழ்காலம், எதிர் காலம் ஆகிய காலங்களைக் குறிக்கும் கால வகை, வடமொழியில் பதினொன்றாக விளக்கப்பட்டு அவற்றில் பத்துக் காலங்கள் வடமொழி இலக்கியங்களில் பயன்படுத்தப்படுகின்றன. 'லேட்' எனும் ஒரு காலம் வேதங்களில் மட்டும் தான் பயன்படுத்தப்படுகிறது. ஆங்கிலத்தில் காலம் 'Tense' பத்தாக வரையறுக்கப்பட்டு உள்ளது. தமிழில் காலங்கள் மூன்றாக அமைந்துள்ளன. வடமொழிக்கும், ஆங்கிலத்திற்கும் காலங்களைப் பொறுத்த வரையில் ஒற்றுமை தெரிகிறது. இவ்வித ஒற்றுமை தமிழில் உண்டா என்பது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும்.

வட மொழிச் சொற்களின் அமைப்புக்கள் செய்வினை, செயப்பாட்டு வினை, இயற்கை நிலை வினை என்ற மூன்று வகையாக அமைந்திருக்கின்றன. இவைகள் வடமொழியில் கர்த்திரி வாக்யம் (Active voice), கர்ம வாக்யம் (Passive voice), பாவ வாக்யம் (Passive voice of the Intransitive verb) என்று கூறப்படுகின்றன. வினைச்சொல் எழுவாயை ஒட்டி வரும்போது, செய்வினை வாக்கியமாக அமைகிறது. உதாரணமாக, ''ராம: புஸ்தகம் படதி'' என்னும் வாக்கியம் தமிழில், இராமன் புத்தகம் படிக்கிறான் ஆகும். செய்வினை வாக்கியம், செயப்பாட்டு வினையாக மாறும் போது வினைச்சொல் செயப்படுபொருளை ஒட்டி வருகிறது. உதாரணம் ''ராம புஸ்தகம் பட்யதே :'' இயற்கை நிலை வினை வாக்கியத்தில் செயப்படு பொருள் இருக்காது. அவ்வித வாக்கியத்தில் செயப்படுபொருள் குன்றிய வினை (Intransitive verb) பயன்படுத்தப்படுகிறது. உதாரணம், 'மயா சுப்யதே'. 'என்னால் தூங்கப்படுகிறது'. இவ்வித வாக்கியங்களில், வினைச்சொல் எப்போதும் ஒருமையில் இருக்கும். இம் மூவித வாக்கிய அமைப்புகள் தமிழிலும் இருக்கின்றன.

வடமொழி மூலபதங்களில் பெயர்ச் சொற்களுக்கும், வினைச் சொற்களுக்கும் முன்னும் பின்னும் சொற்கள் அமைக்கப்படுகின்றன. முன் இணைக்கப்படுவது 'உபசர்க்கம்' என்றும், பின் இணைக்கப்படுவது 'பிரத்யயம்' என்றும் அழைக்கப்படுகின்றன. உபசர்க்கங்களைச் சேர்ப்பதால் பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள் ஆகியவற்றின் கருத்துக்கள் மாறுபடுகின்றன. 'பிரா' என்ற உபசர்க்கம் 'ஹார்' என்ற பதத்துடன் சேர்ந்தால், 'அடித்தல்' என்ற கருத்தாகும். அதே பதத்துடன் ஆ, சம், வி, பரி ஆகியவற்றைச் சேர்த்தால் ஆஹார, சம்ஹார, விஹார, பரிஹார என்னும் பதங்களாக அமைந்து, உணவு, கொல்லுதல், விளையாடுதல், பரிகாரம் என்ற பொருள்களைத் தருகின்றன. தமிழில் பிரத்யயம் அல்லது விகுதி, மூலச் சொற்களுக்கு அடுத்தபடியாகத்தான் அமைக்கப்படுகின்றன. முன்புறம் அமைப்பது கிடையாது. வடமொழியில் முன்புறமும் சேர்க்கும் முறை காணப்படுகிறது.

வடமொழியிலும், தமிழ் மொழியிலும் ஒரே வடிவமுடையனவாக வழங்கப்படும் சொற்கள், ஒலி வடிவில் ஒற்றுமைப்பட்டிருப்பினும், வெவ்வேறு பொருள்களைக் குறிக்கின்றன. அங்ஙனம் சம வடிவமுடைய வடமொழி—தென்மொழிச் சொற்கள், முரணான பொருளில் வழங்குதலைப் பின்வரும் பட்டியலில் காணலாம் :

| | சம்ஸ்கிருதம் | தமிழ் |
|---|---|---|
| 1. | உத்தியோக—முயற்சி | உத்தியோகம்—வேலை |
| 2. | உபந்யாச—நாவல், புதினம் | உபந்நியாஸம்—அறச்சொற்பொழிவு |
| 3. | கல்யாண்—நல்ல, மங்கள | கல்யாணம்—திருமணம் |
| 4. | சரித்ர—ஒழுக்கம் | சரித்திரம்—வரலாறு |
| 5. | சேஷ்ட்டா—முயற்சி | சேஷ்டை—கெட்ட நடவடிக்கை, குறும்பு |
| 6. | பிரசங்கம்—முன்பின் சந்தர்ப்பம் | பிரசங்கம்—சமயச் சொற்பொழிவு |
| 7. | பத்ர—மென்மையான | பத்திரம்—சாக்கிரதை |
| 8. | ம்ருக—மான் | மிருகம்—பிராணி |
| 9. | விலாஸ்—சுகபோகமான | விலாசம்—முகவரி |
| 10. | சங்கதி—தொடர்பு | சங்கதி—செய்தி |
| 11. | சம்சார்—உலகம் | சம்சாரம்—மனைவி |
| 12. | சமாதான்—ஐயங்களை விளக்குதல் | சமாதானம்—ஒத்துப்போதல் |
| 13. | சாது—சந்யாசி | சாது—எளியவன், சரளமானவன் |
| 14. | அபராத்—குற்றம் | அபராதம்—தண்டனை |
| 15. | ஆதர—மரியாதை | ஆதரவு—துணை |
| 16. | பாச—கயிறு | பாசம்—பற்று |
| 17. | பிரச்ன—கேள்வி | பிரச்சினை—சிக்கலான செய்தி |
| 18. | ஆலய—இடம் | ஆலயம்—கோயில் |
| 19. | காய—சரீரம் | காயம்—புண் |
| 20. | நீர—தண்ணீர் | நீர்—நீங்கள் |
| 21. | பத்ர—இலை, கடிதம் | பத்திரம்—விலைத்தீட்டு |
| 22. | பிரமாத்—சோம்பேறித்தனம் | பிரமாதம்—நன்றாக |
| 23. | யோஜனா—திட்டம் | யோசனை—சிந்தனை |
| 24. | ரண—போர் | ரணம்—காயம் |
| 25. | துவார்—வாயில் | துவாரம்—சந்து |
| 26. | அன்னம்—சமைத்த சாதம் | அன்னம்—அன்னப்பறவை |
| 27. | வயிராகி—பற்றற்றவன் | வைராக்கியம்—மனஉறுதி |
| 28. | வைபவ—செழிப்பு | வைபவம்—குடும்ப அலுவல் |
| 29. | சர—அம்பு | சரம்—மாலை தொடுக்கும் நூல் |
| 30. | சாலா—கூடம் | சாலை—பாதை |
| 31. | ஸ்ருங்கார்—இன்பச்சுவையுள்ள | சிருங்காரம்—அழகுபடுத்துதல் |
| 32. | சமய்—காலம் | சமயம்—மதம் |
| 33. | சகாய—உதவி | சகாயம்—மலிவான |
| 34. | சித்தி—ஆன்மீக வெற்றி | சித்தி—தாயின் தங்கை |
| 35. | காதக்—கொல்பவன் | காதகன்—பொறாமைக்காரன் |
| 36. | பசு—பிராணி | பசு—பசுமாடு |
| 37. | மணி—இரத்தினம் | மணி—காலம் |
| 38. | சமாச்சார்—உயர்ந்த ஒழுக்கம் | சமாச்சாரம்—செய்தி |
| 39. | அகம்—ஆணவம் | அகம்—உள்ளே (வீடு) |
| 40. | கேவல்—தனியே | கேவலம்—இழிந்த |
| 41. | புருஷ்—ஆண்மகன் | புருஷன்—கணவன் |
| 42. | விகட்—மிகக் கடுமையான | விகடம்—நகைச்சுவை |
| 43. | அவதி—எல்லை | அவதி—துன்பம் |
| 44. | விஜய்—வெற்றி | விஜயம்—வருகை |
| 45. | விஷய—ஐம்பொறிகளால் நுகரும் பொருள்கள் | விஷயம்—செய்தி |
| 46. | ஆலோசனா—திறனாய்வு | ஆலோசனை—யோசனை கேட்பது |
| 47. | ஆஸா—நம்பிக்கை | ஆசை—விருப்பம் |
| 48. | நிர்வாணம்—முத்தி, வீடு பேறு | நிர்வாணம்—ஆடையற்ற நிலை |
| 49. | நாம்—பெயர் | நாமம்—திரிபுண்டரம் அணிதல் |
| 50. | காலக்ஷேப—காலத்தைக் கழிப்பது | காலக்ஷேபம்—சமயச்சொற்பொழிவு |
| 51. | கரி—யானை | கரி—அடுப்புக்கரி |
| 52. | முத்ரா—நாணயம் | முத்திரை—சின்னம் |
| 53. | மாத்ரா—அளவு | மாத்திரை—மருந்து, மாத்திரை |

வடமொழிச் சொற்கள், திராவிட மொழிகளான தமிழ் தெலுங்கு கன்னடம் மலையாளம் ஆகிய மொழிகளில், வெவ்வேறு பொருள்களுடன் விளங்குகின்றன. ஈண்டு வடமொழி தமிழ் மொழிச் சொற்களில் உள்ள பொருள் வேறுபாடுகள் மட்டும் குறிப்பிடப்பட்டன. தமிழைத் தவிரத் தெலுங்கு மலையாளம் கன்னடம் ஆகிய மொழிகளும், வடமொழியினின்று ஏராளமான பதங்களைக் கடன் பெற்றிருக்கின்றன. ஆரம்ப காலத்தில், திராவிட மொழிகளில் எழுத்துக்கள், தமிழைப் போல் மிகக் குறைவாகத்தான் இருந்திருக்க வேண்டும். வைதிகர், பௌத்தர், சமணர் ஆகியோர், சம்ஸ்கிருதம் பாலி பிராகிருதம் என்னும் மொழிகளுடன் தென்னகத்திற்குள் வந்தனர். வந்தவர்கள் மிக்க ஊக்கத்துடனும் ஆர்வத்துடனும் தத்தம் மொழி, இலக்கியம், அறக் கருத்துக்கள் ஆகியவற்றைப் பரப்பினர். அவர்களுடன் இகலித் தமிழ் மக்கள் தம் தனித் தன்மையை நிலைநாட்டிக் கொள்ளப் பெரிதும் முயன்றுள்ளனர். எனினும் அவைகள் தமிழகத்திலும், தமிழிலக்கியத்திலும் கலந்து இடம் பெற்று விட்டன.

தமிழ் மொழியில், வடமொழிச் சொற்களைத் தன் இயல்புக்கு ஏற்றவாறு ஒலி நயம் படத் திரித்து, திருத்தி, பல சொற்களை ஒன்று சேர்த்து அமைக்கும் 'சமாச முறை' இடம் பெற்றுள்ளது. 'காதம்பரி' போன்ற வசன காவியங்களில், சில வாக்கியங்கள் பல பக்கங்களில் நீண்டதாக அமைகின்றது. இம்முறை தமிழில் கையாளப்படவில்லை. தமிழ் மொழியின் வாக்கிய அமைப்பு, மிகவும் எளிய இனிய முறையில், எழுவாய்—செயப்படு பொருள் — பயனிலை என்ற முறையில் அமைந்திருக்கின்றது. இம்முறையை வடமொழி தமிழ் மொழியிடமிருந்து ஏற்றுக் கொண்டுள்ளது. இவ்வாறு இந்தப் பண்டைய இரண்டு மொழிகளுக்கும், சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, இலக்கண இலக்கியக் கொடுக்கல் வாங்கல்கள் ஏற்பட்டுவிட்டன. தமிழ் வடமொழிச் சொற்களின் உச்சரிப்பு முறை, ஒரே தன்மையில் உள்ளது. ஆங்கிலத்திலும், இந்தியிலும் எழுதுவது ஒன்றும், உச்சரிப்பது மற்றொன்றுமாக உள்ளது. வடமொழியில் 'ட' 'ட்ட' போன்று காதுக்குக் கடுமையாக ஒலிக்கும் ஒலிகள் உள்ளன.

தமிழில் கடுமையான ஒலிகளைக் குறிக்கும் சொற்கள் இல்லையெனலாம். வழக்கம் பழக்கம் வாழை தாழை மழை இழை ஏழை கூழை என்னும் பதங்களிலுள்ள 'ழ' என்ற இனிமையான ஒலி, இந்தியாவின் வேறு எந்த மொழியிலும் இல்லை. இதற்கு ஓரளவு சமமான எழுத்துக்கள், இருக்கு வேதத்தில் காணப்படுகின்றன. வடமொழியைக் காட்டிலும், தமிழ் மொழி மிகவும் பழமையானது என்பதை நிறுவ மிகப் பழமை வாய்ந்த நூல்களான வேதங்களில் அக்கா, அம்மா போன்ற பதங்கள் கிடைக்கின்றன. பேராசிரியர் டி. பர்ரோ மற்றும் எமினெள (Prof. T. Burrow & Emeneau) என்னும் மொழியியல் ஆராய்ச்சி அறிஞர்கள், வடமொழியில் சென்று கலந்துள்ள பல தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து எடுத்துக் காட்டியுள்ளனர். அவைகளுள் சில வருமாறு :

| | தமிழ் | | வடமொழி |
|---|---|---|---|
| 1. | அப்பம் | ... | அபூப |
| 2. | அரவம் | ... | ரவ (ஒலி) |
| 3. | ஆயிரம் | ... | சஹஸ்ரம் |
| 4. | உரு, உருவம் | ... | ரூப |
| 5. | கலுழன் | ... | கருடன் |
| 6. | காலம் | ... | கால |
| 7. | சாமை | ... | ச்யாமா |
| 8. | சொல்வம் | ... | ஸ்லோகம் |
| 9. | திடம் | ... | த்ருட |
| 10. | தீவு | ... | த்வீப |
| 11. | பக்கம் | ... | பக்ஷ |
| 12. | படிமை | ... | ப்ரதிமா |
| 13. | பரம் | ... | பர |
| 14. | பாகம் | ... | பாக |
| 15. | மண்டலம் | ... | மண்டல |
| 16. | மந்திரம் | ... | மந்த்ர |
| 17. | மயில் | ... | மயூர |
| 18. | முகம் | ... | முகம் |
| 19. | மாயை | ... | மாயா |
| 20. | முத்து, முத்தம் | ... | முக்தா |
| 21. | அம்பு | ... | அம்பு |
| 22. | ஆணி | ... | ஆணி |
| 23. | இலக்கு | ... | லக்ஷ்ய |
| 24. | உலகம் | ... | லோக |
| 25. | கலை | ... | கலா |
| 26. | கோட்டம் | ... | கோஷ்ட |
| 27. | சாலை | ... | சாலா |
| 28. | தயிர் | ... | ததி |
| 29. | திறம் | ... | ஸ்திர |
| 30. | தூண், தூணம் | ... | ஸ்தாணு |
| 31. | ப்டி | ... | ப்ரதி |
| 32. | பதம் | ... | பத |
| 33. | பலம் | ... | பல |
| 34. | பாதை | ... | பாதா |
| 35. | மது, மட்டு | ... | மது |
| 36. | மயிர் | ... | ஸ்மஸ்ரு |
| 37. | மாகம் | ... | நாகம் |
| 38. | மாதம் | ... | மாஸம் |
| 39. | மீன் | ... | மீந |
| 40. | வட்டம் | ... | விருத்த |
| 41. | விதை | ... | பீஜ |
| 42. | விந்து | ... | பிந்து |
| 43. | குட்டம் | ... | குஷ்ட |
| 44. | மடி | ... | ம்ரு |
| 45. | சடலம் | ... | சரீரம் |
| 46. | தாமரை | ... | தாமரஸ |
| 47. | மானம் | ... | அனுமானம் உபமானம், சமானம், பிரமாணம் |
| 48. | கமுகு | ... | க்ரமுக |
| 49. | விதை | ... | வ்ருஷ |
| 50. | வித்து | ... | விந்து |
| 51. | வேட்டி | ... | வேஷ்டி |
| 52. | சலம் | ... | ஜலம் |
| 53. | நாழி | ... | நாடி |
| 54. | காயம் | ... | ஆகாசம் |

55. பூதி, பூழ்தி ... விபூதி
56. புடவி ... ப்ருத்வீ
57. மதங்கம் ... மிருதங்க
58. பவளம் ... பிரவாளம்
59. மெது ... ம்ருது
60 செவியுறு ... ஸ்ரு

இங்ஙனம் தமிழ் மொழி வடமொழி என்னும் இரு மொழிகளையும், இலக்கண முறையிலும் மொழியியல் முறையிலும் பொருளமைப்பு (Semantic structure), பொருள் மாற்றம் (Semantic changes) (3) ஒலியனியல் (Phonology) (4) ஒலியன் அமைப்பு (Phonemic structure) ஆகியவற்றின் அடிப்படையில், பன்மொழிப் புலவர்கள் ஆராய்ந்து அறிந்தால் பல ஒற்றுமை வேற்றுமைகளும், உண்மைகளும் வெளிவரும். இவ்வித உண்மையால் தமிழ் மொழியின் தொன்மையும் சிறப்பும் புலனுகும்.

''வையம் ஈன்றதொன் மக்கள் உளத்தினைக்
கையி னுல்உரை காலம் இரிந்திடப்
பைய நாவை அசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலைக்கு அணிந்து பணிகுவாம்.''

''சகுமறை ஆரியம்வருமுன் சகம்முழுவதும் நினதாயின்
முகுமொழிநீ அனுதிஎன மொழிகுவதும் வியப்பாமோ?''
—மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.



# மணிமேகலை கூறும் சக்தி வழிபாடு

திரு இரா. நாகசாமி

பௌத்த தர்மத்தின் சிறப்பைக் கூற வந்த நூல், சீத்தலைச்சாத்தன் எழுதிய மணிமேகலை. இதில் சக்தி வழிபாடும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது என்பது பலருக்கு வியப்பை அளிக்கக்கூடும். இந்நூலில் சம்பாபதி, காடுகாள், விந்தியாவாசினி, சிந்தாதேவி என்னும் நான்கு சக்தி உருவங்கள் சிறப்பிடம் பெற்றவை.

**சம்பாபதி :**

காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சம்பாபதி என்னும் பெயர் உண்டு. அப்பதியின் அதிதேவதை சம்பாபதி. இந்நூல் விவரிப்பதிலிருந்து இத்தெய்வம் கொற்றவையாகிய துர்க்கையே என்பதில் ஐயமில்லை. இத்தேவி இளஞ் சூரியனை ஒத்த நிறமுடையவள். விரி சடை உடையவள். உயர்ந்த மேரு மலையில் தோன்றித் தென் திசை வந்த சம்புத் தீவின் தெய்வம். கிளைகள் மிகுந்த சம்பு மரத்தின் (நாவல்) கீழ் நின்று நில உலகின் துயர் துடைக்கவும், அரக்கர்களை அழிக்கவும் தவமிருந்தவள் என மணிமேகலை, பதிகத்தில் சக்தியின் சிறப்போடு தொடங்குகிறது. இதிலிருந்து சாக்த மரபு இப்பௌத்த நூலில் எந்த அளவுக்கு இடம் பெற்றுள்ளது என்பதற்கு சான்றாகும். வேதங்களிலும், புராணங்களிலும் குறிக்கப்பட்டுள்ள துர்க்கையே இத்தேவி என்பது வெளிப்படை, இங்கு இவள் இளஞாயிறு போலப் பொன்னிறமானவள் எனக் கூறுகிறது. வேதங்கள் இவளை 'அக்னிவர்ணு' என்றும், தவத்தால் ஜ்வலிப்பவள் என்றும் குறிக்கின்றன.

''தாம் அக்னிவர்ணும் தபசா ஜ்வலந்தீம்''

இவள் தவம் நோற்றாள் என்பது பார்வதி தவம் புரிந்ததை நினைவூட்டும். உலகின் துயர் துடைக்கவும், அரக்கர்களை அழிக்கவும் தேவி தோன்றினாள் எனத் தேவி மகாத்மியம் கூறும். அதே கருத்து மணிமேகலையில் குறிக்கப்பட்டு உள்ளனைதக் காண்கிறோம். சம்பாபதி என்பவள் துர்க்கை என்பதும் அவளே அப்பட்டினத்தின் அதிதேவதை என்பதும் வெளிப்படை. கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்தே நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் அதிதேவதையாகத் துர்க்கை விளங்கியதற்குச் சான்றுகள் உண்டு. ஒரு இந்தோஸ்சிதிய அரசன் வெளியிட்டுள்ள தங்கக் காசு ஒன்றில் புஷ்கலாவதி என்னும் நகரின் தேவதையின் பெயர் 'புஷ்கலாவதி தேவதா' எனப் பொறிக்கப்பட்டுள்ளது. சிலம்பில் குறிக்கப்பட்டுள்ள 'மதுராபுரித் தெய்வமும்' இது போன்றதே.

சம்பாபதியை மணிமேகலை 'அருந்தவ முதியோள்' எனக் கூறும். அவளே அங்கு வந்த காவிரியின் பெயரால் காவிரிப்பூம்பட்டினம் எனப் பெயர் கொடுத்தாள். ஆறுகளுக்கும் மலைகளுக்கும் முந்திய முதியோளாகிய இவள் ஆதிசக்தி என்பது பொருள்.

**சக்கரவாளக் கோட்டம்:**

மணிமேகலை சக்கரவாளக் கோட்டம் என்னும் கோயிலைக் குறிக்கிறது. இது ஊரின் மேற்குப் புறத்தே இருந்தது. இதில் சம்பாபதி தெய்வம் உறைந்தாள். இதன் அருகில் ஈமப் புறங்காடு இருந்தது. ஆதலின் இதைச் சுடுகாட்டுக் கோட்டம் என்றும் அழைப்பர். சம்பாபதியின் ஆற்றல் அங்குத் தோன்ற எல்லாத் தேவர்களும் ஒருங்கு வந்தனர். ஆதலின் அங்கு அக்கோட்டம் மயனால் அமைக்கப்பட்டது. அதுவே சக்கரவாளம்.

முற்றிலும் கடல் சூழ, நடுவில் உயர்ந்ததாக மேருக் குன்றம் அமைக்கப்பட்டது. அதைச் சுற்றிலும் ஏழு வகைக் குன்றங்கள் அமைந்தன. அவற்றைச் சுற்றி நான்கு மகாத்வீபங்கள். அவற்றையும் சுற்றி இரண்டாயிரம் சிறு தீவுகள். ஆங்காங்கு வாழும் உயிர்கள், அவற்றின் இடங்கள் ஆகிய அனைத்தும் மண்ணீட்டால் அங்கு அமைக்கப்பட்டிருந்தன, என மணிமேகலை கூறுகிறது. இங்குள்ள குறிப்பை நோக்கும்போது இது ஒரு 'மேரு சக்கரம்' என்பது தெளிவாகும். ஆளம் எனில் மண்டலம் என்பது பொருள். சக்கர ஆளம் என்பது சக்கர மண்டலத்தைக் குறிக்கும். ஆதலின்தான் இது சக்கரவாளம் எனும் பெயர் பெற்றது. சாக்த வழிபாட்டில் சக்கரம் எவ்வளவு சிறந்த நிலை வகிக்கிறது என்பது அனைவரும் அறிந்ததே. லலிதா சகஸ்ரநாமத்தில் குறிக்கப்பட்டுள்ள பல கருத்துக்கள் இச்சக்கரவாளக் கோட்டத்தோடு ஒத்திருப்பது காணத்தக்கதாகும். லலிதா சகஸ்ரநாமம் 'சுமேருகிரி மத்யஸ்தா' என்று கூறும். மணிமேகலை 'நடுவு நின்ற மேருக் குன்றம்' என்று கூறுவது அதையே. லலிதா சகஸ்ரநாமம் 'சுதா சாகர மத்யஸ்தா' என்று கூறும். அமுதக் கடலின்

நடுவில் உள்ளவள் என்பது பொருள். மணி மேகலை 'சூழ்கடல் வளைய ஆழியங்குன்றம்' என்று கூறும். லலிதா சகஸ்ரநாமம் 'சக்ர ராஜ நிலயா' என்று கூறுவதே சக்கரவாளக் கோட்டம் எனில் மிகையாகாது. இன்றும் பல சாக்தக் கோயில்களில் கர்ப்ப கிருஹத்தில் சக்க ரம் மண்ணீட்டால் அமைக்கப்பட்டுள்ளதும் அதை மேரு என்று அழைப்பதும் தமிழகத்தில் இன்றும் உண்டு.

சம்பாபதியைத் துறைகளையும், மன்றங்களை யும், மரங்களையும், உறையுமிடங்களையும், கோட்டங்களையும் காப்பவள் என்றும், பொன் னிற் பொலிந்த நிறத்தாள் என்றும் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

**காடுகாள் :**

சம்பாபதியைக் குறித்துள்ளது போல மணிமேகலையில் காடுகாளைப் பற்றிய குறிப்பும் உள்ளது. காடுகாள் என்பது காடுகிழாள் என்பதன் திரிபு. அவளது கோயில் சுடுகாட் டுக்குள் இருந்தது. அக்கோயிலின் முன்னர் ஒரு பெரும் பலிப்பீடிகை இருந்தது. அங்குத் தங்க ளது தலையைத் தாங்களே அரிந்து பலிகொடுத் தோரின் தலைகள் தொங்குகின்ற நெடுமரங்கள் இருந்தன.

சுடலை நோன்பிகள் வன்னி மரத்தின் கீழ்த் தீயிலிட்டுச் சோறு பொங்கலிடுவர். இன்னம் சிலர் உடைந்த தலைகளைத் தொகுத்து மாலை யாக்கி அணிந்துகொள்வர், என்று மணிமேகலை வர்ணிக்கிறது. காளி மயானவாசி என்றும், அவளது கோயிலில் பைரவ வேடதாரிகள் என்னும் காவாலிகர் சுற்றித் திரிவர் என்றும் அவளது முன்றிலில் தலையை அரிந்து கொடுப் போரும் இருப்பர் என்றும் தக்கயாகப் பரணியில் குறிப்புகள் உண்டு. மாலதி மாதவம் என்னும் வடமொழி நாடகத்தில் இதைப்போல் மயானத் தில் காளியின் கோயில் குறிக்கப்பட்டுள்ளது. காளி கையில் கபாலத்தை ஏந்திப் பேய்களுக்கு உணவு ஊட்டுவாள் என்பதும் மணிமேகலையில் உள்ள செய்தியாகும்.

**விந்தியாவாசினி :**

சாக்த மரபில் தேவியை விந்தியாவாசினி என வணங்குவது மரபு. இம்மரபும் மணி மேகலையில் குறிக்கப்படுகிறது. அத்தேவி அந் தரி என்று குறிக்கப்படுகிறாள். அவள் விந்திய மலைமீது அமர்ந்திருப்பவள். அவளைக் கடந்து செல்வோர் இருந்தால் அவர்களது நிழலால் பிடித்திழுத்து விழுங்குபவள் அவள். அவள் விந்தா கடிகை என்றும் அழைக்கப்படுவாள் என்றும் அறிகிறோம். காயசண்டிகை என்பவள் இவ்வாறு விந்தாகடிகையால் விழுங்கப்பட்டாள் என்று இந்நூல் குறிப்பது விந்தியாவாசினியின் மரபை நமக்குப் புலப்படுத்துகிறது.

**சிந்தா தேவி :**

மணிமேகலை சிந்தா தேவி என்னும் தெய் வத்தையும் குறிக்கிறது. அவளது கோயில் தக்கண மதுரையிலிருந்தது. அதை 'சிந்தா விளக்கின் செழுங்கலை நியமம்' என்று நூல் கூறுகிறது. அதன் முன்னர் அம்பலமும் பீடிகை யும் இருந்தன. அவள் கலைமகளுடனும் ஒப் பிடப்படுகிறாள். 'நந்தா விளக்கே நாமிசைப் பாவாய்' என்று நூல் கூறுகிறது. இத்தெய்வம் வானோர் தலைவி என்றும், மண்ணோர் முதல்வி என்றும் அழைக்கப்படுகிறாள். சாக்த வழி பாட்டில் மகாலட்சுமி, மகா துர்க்கா, மகா சரசுவதி ஆகிய அனைத்தும் ஒரே தேவி என்றும் அவளே முழு முதற் கடவுள் என்றும் வணங்கு வது தத்துவமாகும். அதே கருத்து இங்கு குறிக்கப்பட்டுள்ளது காணலாம். சிந்தா தேவியை அனைவரும் ஏத்தினர். அவளது கோயிலுக்குக் கடும் இருளையும் அஞ்சாது மக்கள் சென்றனர்.

மேலே குறித்த மணிமேகலை கூறும் சாக்த மரபுகள் நம் மனதில் பல கருத்துக்களை எழச் செய்கின்றன. பௌத்த சமயத்துக்கும் சாக்த மரபுக்கும் என்ன தொடர்பு என்பது சிந்த னைக்கு உரியது. பௌத்த சமயத்தில் தந்திர மார்க்கம் உண்டு. அதில் சாக்தம் இடம் பெற்று உள்ளது. இது பிற்காலத்தில் மிகவும் பரவ லாகக் காணப்பட்டது. நேபாளம், திபெத் போன்ற இடங்களில் பரந்து வளர்ந்தது. இருப் பினும் மணிமேகலையில் குறிக்கப்பட்டுள்ள கருத்துக்கள் அனைத்திந்திய ரீதியில் மலர்ந்த சாக்தக் கருத்துக்களையே பிரதிபலிக்கின்றன. துர்க்கை, காளி ஆகிய கருத்துக்கள் இந்துசமய சாக்தக் கருத்துக்களே.

சாக்த சமயம் அனைத்திந்திய வரலாற்றில் இவ்வளவு மேலோங்கின நிலையை எப்பொழுது பெற்றது? ஒரு பௌத்த நூலிலும் கூட இவ் வளவு செல்வாக்குப் பெற்றதாகத் திகழ வேண்டுமென்றால், அதன் காலமென்ன? ஆகி யவை சிந்திக்க வேண்டியவையாகும்!








முதலமைச்சர்

27-9-1975

கோயில்களுக்கும் மக்களுக்கும் நல்லுறவு ஏற்படுத்தும் விழுமிய நோக்கத்தோடு, இந்துசமய அறநிலைய ஆட்சித் துறையினரால் வெளியிடப்பெறுகிற "திருக்கோயில்" திங்கள் இதழ், 17 ஆண்டுகளைக் கடந்து 18-வது ஆண்டில் அடியெடுத்து வைப்பதறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். "திருக்கோயிலின்" பணி முன்னிலும் பன்மடங்கு சிறக்கவும், திருக்கோயில் ஆண்டு மலர் மணங்கமழவும் மனமார வாழ்த்தி மகிழ்கின்றேன்.

(மு. கருணாநிதி)

ஆசிரியர்,
"திருக்கோயில்",
சென்னை-34.

மு. கண்ணப்பன்,

அறநிலையத்துறை அமைச்சர்.




தலைமைச் செயலகம்,
சென்னை—600 009
1. - 10 - 75

சென்ற பதினேழு ஆண்டுகளாக அறநிலையங்களின் வளர்ச்சிக்கு ஆக்கந்தரும் வகையில் ''திருக்கோயில்'' இதழ் தொண்டாற்றி வருவது தெள்ளத் தெளிவானதாகும். இலக்கியச் சான்றுகளும், கவிதைகளும், பாடல்பெற்ற திருத்தலங்களின் வரலாறுகளும், பயில்வோர் உள்ளத்தைக் கவரும் தன்மை கொண்டதாய் இருந்து வருகின்றன. அழகுற, அறிவு நலஞ் சார்ந்து வெளிவந்து கொண்டிருக்கும் ''திருக்கோயில்'' இதழ் மேலும் பயனுறும் வண்ணம் வெளிவர வாழ்த்துகின்றேன்.

பெறுநர் :
திரு. ந. ரா. முருகவேள் அவர்கள்,
ஆசிரியர், ''திருக்கோயில்'',
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை—600034.

அன்புள்ள,

**மு. கண்ணப்பன்**

க. இராசாராம்,

தொழிலாளர் நலத்துறை அமைச்சர்.




தமிழ்நாடு அரசு,
தலைமைச் செயலகம்,
சென்னை—600 009.

பேரன்புடையீர்,

தமிழக அறநிலைய ஆட்சித்துறையின் சார்பில் வெளியிடப்படும் ''திருக்கோயில்'' திங்களிதழ் தனது பதினேழு ஆண்டுப் பணியினை நிறைவுபடுத்தி, பதினெட்டாம் ஆண்டுத் தொடக்கத்தில் முன்னிலும் முனைப்போடு பணியாற்றத் துவங்கியிருப்பது கண்டு மெத்தவும் மகிழ்ச்சியடைகிறேன்.

கடந்த சில ஆண்டுகளில் இவ்விதழின் அமைப்பும், இதன்மூலம் வெளியிடப்படும் ஆராய்ச்சிக்கட்டுரைகள், தலவரலாறுகள், சமய இலக்கியக் கட்டுரைகள் ஆகிய அனைத்தும் புதுமையான முறையில் அமைந்து பொதுமக்களிடையே பெரிதும் விரும்பி வரவேற்கத்தக்க முறையில் அமைந்தது அனைவரும் அறிந்த ஒன்றாகும். சமயத்துறையின் மூலம் சமுதாயத்திற்குத் தொண்டாற்றும் ''திருக்கோயில்'' இதழ் இனிவரும் ஆண்டுகளிலும் கருத்தாழம் மிக்க கட்டுரைகளைத் தன்னகத்தே கொண்டு தமிழகத்தின் திருக்கோயில்களைப்பற்றிய புதையுண்ட செய்திகளையும், சமயம் பற்றிய சீரிய கருத்துக்களையும் வெளியிட்டுப் பெருமையை எட்டிட என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பெறுநர் :
ஆசிரியர்,
திருக்கோயில்,
சென்னை—34.

அன்புள்ள,

**க. இராசாராம்.**

ஓ. பி. இராமன்,

பி.ஏ., பி.எல்.,

வணிகவரி அமைச்சர்.




தலைமைச் செயலகம்,

சென்னை - 600009,

6 - 10 - 1975.

## வாழ்த்து

"திருக்கோயில்" கடந்த பதினெட்டு ஆண்டுகளாக நற்பணியாற்றி வரும் செய்தி மகிழ்ச்சிக்குரியதாகும். தமிழ்நாடு அரசு தமிழ்நாட்டிலுள்ள பல்வேறு பல்வேறு ஆலயங்களுக்குத் திருப்பணி நிறைவேற்றியதோடு மட்டுமல்லாமல், அவைகளின் நிர்வாகம், நடைமுறை ஆகிய துறைகளில் பல்வேறு திருத்தங்களை மக்கள் ஆதரவோடு நிறைவேற்றித் தந்திருப்பதன் காரணமாக, இன்று அறநிலையத் துறையின் வருவாய் வெகு கணிசமாக அதிகரித்து, இன்னும் பல திட்டங்களை நிறைவேற்றுகின்ற நிலைமை உருவாகி இருப்பது யாவரும் பாராட்டுதற்குரிய தாகும்.

"திருக்கோயில்" தொடர்ந்து தனது தொண்டினை நிறைவேற்றிட, எனது உளமார்ந்த நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பெறுநர் :
ஆசிரியர்,
திருக்கோயில்,
சென்னை—34.

ஓ. பி. இராமன்.

சி. வி. எம். அண்ணாமலை,

சமூக நல அமைச்சர்.




தலைமைச் செயலகம்,

சென்னை – 600009,

30 - 9 - 75.

அன்புடையீர்,

வணக்கம். தமிழ்நாடு அரசு அறநிலையத்துறை ஆற்றிவரும் அறப்பணிகள் பல; சமூக நலப்பணிகள் பல; அவைகளை நாடும் ஏடும் போற்றிப் பாராட்டிப் பீடு பெருக்கிடும் வண்ணம், திருக்கோயில் என்னும் திங்கள் இதழ் சீரிய முறையில் வெளிவருவதறிந்து நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

அது மட்டுமன்று!

பதினேழு ஆண்டுகள் முடிவெய்தி, பதினெட்டாம் ஆண்டு அகவையினை இவ்விதழ் தொடங்குவது ஒரு நல்ல அறிகுறியாகும்.

இதனையொட்டி வெளிவரும் "திருக்கோயில்" சிறப்பு மலர், பல்வேறு சிறப்பு இயல்பு களைத் தாங்கி மிளிர்ந்திடவும், என்றும் அழியாத அற உணர்வுகளை வளர்த்து வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்திடவும், நாடெங்கணும் உள்ள அறநிலையங்களும், அறச்சிந்தையாளர்களும் அகமகிழ்வு கொள்ளுமாறு அமைந்து, தமிழர்தம் இல்லங்கள் தோறும் நறுமணம் மிக்க புத்தம் புதுமலராய் மணம் பரப்பிடவும் வேண்டி, எனது இதய நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பெறுநர் :
திரு. ந. ரா. முருகவேள் அவர்கள்,
ஆசிரியர், ''திருக்கோயில்'',
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை—600034.

அன்பன்,

சி. வி. எம். அண்ணாமலை.

S. J. சாதிக் பாஷா,
கைத் தொழில்-மின்துறை
அமைச்சர்,




தலைமைச் செயலகம்,
சென்னை-600009

## வாழ்த்து

தமிழ்நாடு இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை வெளியிடும் "திருக்கோயில்" இதழ், தனது 18-ஆம் ஆண்டுப் பணியினைத் துவங்குகிற மகிழ்ச்சி நாளில், மலர் வெளியிடுவது கண்டு அகமிக மகிழ்கிறேன்.

அறநிலையங்களின் அரிய வரலாற்றினை வடித்துவரும், சிறந்த இலக்கிய ஏடாக மிளிர்ந்துவரும் "திருக்கோயில்" தனது தூயபணியினைத் தொடர்ந்திட என் இதய வாழ்த்துக்கள்.

பெறுநர் :
ஆசிரியர்,
திருக்கோயில்,
சென்னை—34.

சாதிக் பாட்சா

---

ம. பொ. சிவஞானம்,
துணைத் தலைவர்,
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை.

புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை - 600009,
2 - 9 - 75.

அன்புடையீர்,

வணக்கம். "திருக்கோயில்" திங்கள் இதழின் 17-ஆம் ஆண்டு நிறைவையொட்டிச் சிறப்பு மலர் வெளியிட விருப்பது அறிந்து மகிழ்ச்சியடைகின்றேன். திங்கள் தோறும் எனக்குக் கிடைத்துவரும் "திருக்கோயில்" இதழை ஆர்வத்துடன் படித்து வருகிறேன். அதன்மூலம் ஆத்திகத் துறையோடு, அரசியல் வாதியான எனக்குத் திங்களுக்கு ஒருமுறையேனும் தொடர்பு ஏற்படுவதில், மிகுந்த மகிழ்ச்சியடைந்து வருகின்றேன். "திருக்கோயில்" இதழ் சிறந்த முறையில் வெளிவந்துகொண்டிருக்கிறது. இந்த இதழ் என்றென்றும் நின்று நிலைபெற வாழ்த்துகின்றேன்.

பெறுநர் :
திரு என். ஆர். முருகவேள்அவர்கள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,
ஆசிரியர், "திருக்கோயில்",
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் அலுவலகம்,
சென்னை—34.

அன்புள்ள,
ம. போ. சிவஞானம்.

புலவர் கா. கோவிந்தன், எம். ஏ.,
தலைவர்,
தமிழ்நாடு சட்டப் பேரவை

தலைமைச் செயலகம்,
சென்னை-600009

4-8-1975

அன்புடையீர்,

வணக்கம்.

திருக்கோயில் திங்கள் இதழ் தொடங்கப்பெற்று 17 ஆண்டுகள் முடிவுற்று 18-ஆம் ஆண்டினை எட்டவிருப்பது கண்டு மகிழ்ச்சி. இதனையொட்டிச் சிறப்பு மலர் ஒன்று வெளியிடுவது வரவேற்கத் தக்கது.

மலர் சீரும் சிறப்புடன் வெளிவர, என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கின்றேன்.

அன்புள்ள,
**கா. கோவிந்தன்,**

பெறுநர் :
திரு என்.ஆர். முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.ஏல்.,
ஆசிரியர், ''திருக்கோயில்''
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, ஆணையர் அலுவலகம்,
சென்னை—34.

---

34, ஜஸ்டிஸ் சுந்தரம் ஐயர் ரோடு,
மயிலாபூர்,
சென்னை-600004
18-9-1075

ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயில்

ஐயா,

''திருக்கோயில்'' திங்கள் இதழ் தொடங்கப் பெற்று 17 ஆண்டுகள் முடிந்து, 18-ஆம் ஆண்டு தொடங்குவது தெரிய மகிழ்ச்சி.

சமய உணர்வு, பக்தி யுணர்வு, இறையுணர்வு ஆகியவற்றையும் அவற்றுக்கு அடிப்படையான நல்லொழுக்கத்தையும், சீலத்தையும் பரப்புவதில் ''திருக்கோயில்'' சிறந்த பணியாற்றி வருகிறது. பக்தி இலக்கியங்களையும், சமய இலக்கியங்களையும் பற்றி ''திருக்கோயி''லில் வரும் கட்டுரைகளும், கருத்தோவியங்களும் படிப்போரின் உள்ளத்தையும், உணர்ச்சியையும், அறிவையும் உயர்த்துவனவாகவும், வளர்ப்பனவாகவும் அமைந்திருக்கின்றன. ''திருக்கோயிலின்'' அத்தகைய பணி தொடர்ந்து நடந்துவர என் வாழ்த்துக்களும், வேண்டுதல்களும்.

தங்கள்,
**மு. மு. இஸ்மாயில்.**

பெறுநர் :
திரு என்.ஆர். முருகவேள், எம்.ஏ.,எம்.ஓ.ஏல்.,
ஆசிரியர், ''திருக்கோயில்''
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை, ஆணையர் அலுவலகம்,
சென்னை—34.

உ

முருகா

# வாழ்த்து

சீரார் திருக்கோயில் திங்கள் இதழ், சிறந்த
ஆரா அமுதாகும்; அஃதென்றும் — நேராக
வந்து, வளந்தந்து, வாழியவே பல்லாண்டு;
எந்தையரு ளாலே இனிது.

அன்பன்,

**கிருபானந்தவாரி.**

---


நா. மகாலிங்கம்,
பி.எஸ்.சி., எப்.ஐ.இ.,

தொலைபேசி: 71164 சக்தி நிலையம்'
49, செயின்ட் மேரி சாலை, சென்னை-600018


15—9—1975

பேரன்புடைய திருக்கோயில் ஆசிரியர் அவர்களுக்கு,

வணக்கம். தங்கள் கடிதம் கண்டேன். மிக்க மகிழ்ச்சி.

'திருக்கோயில்' திங்களிதழ் பதினேழு ஆண்டுகள் செம்மையான சமயத் திருத்தொண்டு புரிந்து பதினெட்டாம் ஆண்டை வரும் அக்டோபர் திங்களில் தொடங்க இருக்கின்றது. 'திருக்கோயில்' வரும் அக்டோபர் இதழ், ஆண்டு மலராக வரப்போவதை அறிந்து பேருவகை கொள்கின்றேன்.

''உயிராவணமிருந்து உற்றுநோக்கி உள்ளக்கிழியின் உருவெழுதி, உயிர் ஆவணஞ் செய்திட்டு உன்கைத் தந்தால் உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி'' என்பதற்கேற்ப, எல்லாம் வல்லான் தாளை இடைவிடாது நினைந்து நினைந்து, அவனது பேரறிவே தமதறிவாகத் தமதுணர்வென்பது சிறிதுமின்றி விளங்கியவர்கள் சிவ ஞானிகள். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் முதலான அருளாளர்கள்.

அவ்வருளாளர் வாயிலாகச் சிவபெருமானே வெளிப்படுத்தருளிய பெருமை உடையன சைவத்திருமுறைகள் பன்னிரண்டும்,—

இறைவன் அருளியதாகக் கருதும் வேதங்களை 'எழுதாக்கிளவி' எனவும், இறைவன் திருவருள் பெற்ற அருளாளர்களால் அருளப்பெற்ற திருமுறைகளை 'எழுதுமறை' எனவும் வழங்குவது மரபு.

''வண்டமிழால் எழுதுமறை மொழிந்த பிரான்'' என்று சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில் கூறியுள்ளார்.

வண்தமிழால் எழுதுமறை-திருமுறைகள் அருளிய அருளாசிரியர்களின் மேன்மைகளையும், எழுதுமறையருள் சீரிய செம்பொருள்களையும் தெளிவுற விளங்கிக்கொள்ளும்படி அறிஞர்களைக் கொண்டு கட்டுரைகளாக எழுதி வெளியிடுகின்றது 'திருக்கோயில்'.

சமயவானில் ஒப்பற்ற தண்ணிலவாக அருளறங்களை வாரி வழங்கி வருவது 'திருக்கோயில்' என்பதை நன்கு அறிவேன். 'திருக்கோயில்' ஆற்றிவரும் தொண்டு செயற்கரிய பெருந்தொண்டு. திருக்கோயிலுக்கு எனது வாழ்த்துக்கள்!

தமிழறிந்த சமயச் சான்றோர்களின் கருத்தோவியங்களைத் தாங்கிவரும் 'திருக்கோயில்' திங்களிதழ், தொடர்ந்து தன் பணியில் சிறக்கவும், வெளிவரவிருக்கும் மலர் பல்வகைச் சிறப்புகளெல்லாம் அமையப்பெற்றுப் போற்றிக்காத்துக் கற்கும் கருத்துக்குவியல்களைக் கொண்ட பொற்பேழையாக அமைந்து வெளிவரவும், அருட்பெருஞ்சோதியின் தனிப் பெருங்கருணை அருள் புரியுமாக!

அன்புள்ள,

**நா. மகாலிங்கம்.**

**திரு. கே. எஸ். நரசிம்மன்,** பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்., **சென்னை-34,**
*ஆணையர், இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை.*

### வாழ்த்துச் செய்தி

நமது இந்துசமய அறநிலைய ஆட்சித்துறையின் சார்பில் 1958-ஆம் ஆண்டு அக்டோபர் 2-ஆம் தேதி முதல், 'திருக்கோயில்' என்னும் திங்கள் இதழ் தொடங்கப்பெற்று, தொடர்ந்து கடந்த 17 ஆண்டுகளாகச் சிறந்தமுறையில் நடைபெற்று வருகின்றது.

இதன்கண் சமயம், தத்துவம், வரலாறு, இலக்கியம், கல்வெட்டு, கவிதை, கட்டுரை ஆகிய பல்வேறு துறைகளில், பொதுவாக இந்துமதம் பற்றியும், சிறப்பாகத் தமிழகத்தின் இரு கண்களாக விளங்கிவரும் சைவ, வைணவ சமயங்கள் பற்றியும், பற்பல அரிய இனிய சிறந்த கட்டுரைகள், அவ்வத்துறைகளில் வல்ல அறிஞர் பெருமக்களால் எழுதப் பெற்று வெளிவருகின்றன.

சைவ வைணவத் தலங்கள், கோயில்கள் பற்றியும், தேவாரம் திருவாசகம் திருமுறைகள், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்கள், மற்றும் இந்து சமய புராண இதிகாசங்கள், வரலாறுகள், பலவகை விழாக்கள், கலைகள் பண்பாடுகள் பற்றியும், நல்ல பல விளக்கக்கட்டுரைகள் இதன்கண் இடம் பெறுகின்றன. என்றும் போற்றிப் பாதுகாத்து வைத்துப் படித்துப் பயன் கொள்ள வேண்டிய நிலையில் இவ்விதழ் நடைபெற்று வருகின்றது.

இத்திங்கள் இதழின் மூலம், நமது அறநிலைய ஆட்சித்துறை, சிறந்த முறையில் தமிழ்த் தொண்டும், சமயத்தொண்டும் ஆற்றிவருகின்றது. மிகவும் தரமான நிலையில், பெரியோர்களும், அறிஞர்களும் போற்றும் வகையில், இத்திங்கள் இதழ் நன்கினிது நடைபெற்று வருகின்றது. தமிழகத்தில் மட்டுமன்றி இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், தென்ஆப்ரிக்கா போன்ற வெளிநாடுகளிலும் கூட, அன்பர்கள் பலர் இதன் சந்தாதாரர்களாக இருந்து வருகின்றனர். தற்போது இவ்விதழ் பாராட்டத் தக்க வகையில் மிகவும் வளர்ச்சியுற்றும் கண்கவர் வனப்புடனும் ஒப்பனையுடனும் அழகுற வெளி வருகின்றது.

இத்தகைய சிறந்த நல்ல திங்கள் இதழை, மேலும் மேலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துப் போற்றி வளர்க்க வேண்டுவது, நமது அறநிலையத்துறையைச் சார்ந்த அனைவருக்குமே உரிய பொறுப்பும், கடமையும் ஆகும்.

''திருக்கோயில்'' திங்கள் இதழ், இன்னும் மேன்மேலும் சிறந்து வளர்ந்தோங்க விரும்பி, எல்லாம் வல்ல இறைவனின் திருவருளை இறைஞ்சி வாழ்த்துகின்றேன்.

---

## சந்தாதாரர்கள் கவனிக்க

'திருக்கோயில் திங்கள் இதழின் 18 -ஆம் ஆண்டுத் தொடக்கச் சிறப்பு மலராக வெளிவரும் இவ்விதழின் 79 - ஆம் பக்கத்தில்,

**''சந்தாதாரர் விவரக் கேட்புத்தாள்'' (COUPON)**

ஒன்று அச்சிட்டுச் சேர்க்கப்பட்டுள்ளது.

அதனைத் தனியே வெட்டி எடுத்து, அதன்கண் கேட்கப்பட்டுள்ள விவரங்களை நிறைவு செய்து, அதன் பின்புறம் உள்ள ஆணையரின் அலுவலக முகவரிக்கு, நூல் அஞ்சலில் (Book-Post), 15 காசு அஞ்சல் தலை ஒட்டி, இவ்விதழ் கிடைத்த ஒரு வாரத்திற்குள் தவறுமல் அனுப்பிவைக்குமாறு, சந்தாதாரர்கள் அனைவரும் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

புதிதாகச் சந்தாதாரர்கள் பட்டியல் தொகுத்துச் சரிபார்த்து அச்சிடுவதற்கும், இதழ்கள் சந்தாதாரர்களுக்குத் தவறுமல் விரைவில் கிடைக்கச் செய்வதற்காக முழுமுகவரிகளைத் தொகுப்பதற்கும், இவ்விவரப்பட்டியல் பெரிதும் தேவைப்படுகின்றது. ஆதலின் அன்பு கூர்ந்து சந்தாதாரர்கள் அனைவரும், உடனே இதனை நிறைவு செய்து அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

—*ஆசிரியர்.*

# அருள்திரு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

## பழனி

பழனி ஞானதண்டாயுதபாணியைப் பணிந்திட வாரீர் !
அழகான திருமுருகன் அருள் பெறவே திரண்டு வாரீர் !
செந்தேனும் பாலும் மணக்கும் சேயோனே வழிபட வாரீர் !
சந்தன விபூதி மணக்கும் திருமேனி கண்டு மகிழ வாரீர் !

முடிகாணிக்கை தரத் தனியிடம் !
தங்குவதற்கேற்ற வசதிகள் !
முதியவரும் முடியாதோரும் முருகன் அருகே செல்ல இழுவை ரயில் வசதி !
பொங்கியெழும் பேரழகினைத் தாங்கிவரும் தங்கரதம் காண வசதிகள் !
தங்கமயில் மீது பவனி வரும் முருகனுக்கு அர்ச்சனை, அபிஷேகத்தின் விசேஷ கவனம்.

1. அருள்மிகு பழனியாண்டவர் கலைக்கல்லூரி
2. அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக்கல்லூரி
3. அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி
4. அருள்மிகு பழனியாண்டவர் செந்தமிழ்க் கல்லூரி
5. பழனியாண்டவர் செந்தமிழ் கல்லூரி
6. செவிடர் பள்ளி
7. நாதசுரக் கல்லூரி
8. வேத ஆகமப்பாடசாலை
9. அன்பு இல்லம்
10. முதியோர் இல்லம்.
11. குழந்தைகள் காப்பகம்.
12. மருத்துவமனை
13. சித்த வைத்தியசாலை
14. நடமாடும் வைத்தியசாலை.

பழனித்திருமலையில் நாளும் பெருகிவரும் பக்தர்கட்குப் போதிய வசதிகள் செய்து தருவதற்காக ஒருகோடியே ஐந்து லட்ச ரூபாய் செலவில் மாபெரும் திருப்பணி திட்டம் செயல்பட உள்ளது. இந்த ஆலயத்திருப்பணிகளுக்குத் தாங்கள் கொடுக்கும் நன்கொடைகள் மத்திய அரசின் வருமானவரி இலாகாவில் வரி விலக்குக்கு உட்பட்டது. எனவே இம்மாபெரும் திருப்பணித் திட்டத்தின் வெற்றிக்குத் தங்களால் இயன்ற அளவு நன்கொடை வழங்கியருளி அருள்மிகு ஞான தண்டாயுதபாணி சுவாமியின் பேரருளுக்குப் பாத்திரராகி நல்வாழ்வு பெறுமாறு அனைவரையும் வேண்டிக் கொள்கின்றோம்.

திரு. புலவர் சி. பழனிச்சாமி, எம்.எல்.ஏ.,
திரு. ஏ. பச்சையப்ப கவுடர்
திரு. அ. தமிழரசு
திரு. ஆர். சின்னதுரை
திரு. கு. பழனியப்பன்
(அறங்காவலர்கள்)

**வி. எஸ். கோதண்டபாணி**, B.SC., B.L.,
துணை ஆணையர்/நிர்வாக அதிகாரி

# பஞ்சாமிர்தம்

டி. என். சுகிசுப்பிரமணியன்

**கௌரியும்—கமலையும் :**

கடவுள் தத்துவத்தைக் குடும்பச் சூழலில் அமைத்து விளக்குவது மரபு. தன் தங்கையை மற்ருெருவருக்கு மணமுடித்து, அவன் தங்கையை மணமுடித்துக் கொள்வது இயல்பு. இவ்வாறு செய்து கொண்டவர்கள், சிவனும் விஷ்ணுவும். சிவன் தங்கை லட்சுமி. விஷ்ணுவின் தங்கை பார்வதி.

பார்வதியும் இலக்குமியும் நாத்திகள். நாத்திகள் சந்தித்தால் அவர்கள் நாவில் தீப் பறக்கும். தத்தம் அண்ணன் பெருமையை இருவரும் பேசத் தொடங்கினுர்கள். பரம சிவனைப் பார்க்க இலக்குமி வந்தாள். பார்வதி தன் நாத்தனுரை வரவேற்ருள். இலக்குமி வந்து உட்கார்ந்ததும் சாப்பிடச் சொல்ல வேண்டும். திருவோடு ஒன்றைக் கொண்டுவந்து வைத்தாள் பார்வதி. அதிலே பிச்சைச் சோறு இருந்தது. இலக்குமிக்கு இந்த விருந்தும் உபசாரமும் பிடிக்கவில்லை.

''கமலா தேவி! இப்பிச்சைச் சோறு உங்கள் அண்ணன் எடுத்து வந்த சம்பாத்தியம். போதாது என்பதால் மேலும் பிட்சை பெறப் போயிருக்கிருர். இது உன் அண்ணன்பெருமை''

இலக்குமி சிந்தித்தாள். தன்னைப் பார்வதி குத்திக் காட்டுவது தெரிந்தது. ''அம்மா! கௌரி தேவி! உனக்காவது சோறு கிடைக்கிறது. என் அண்ணன் பிச்சை யெடுத்தாவது சோற்றைக் கொண்டு வந்தார். உன் அண்ணன் பெருமை தெரியுமோ? எல்லாம் மண். அவர் தின்பதும் அதுதான். நீ பாக்கியவதி.''

விஷ்ணு கண்ணனுக அவதாரம் எடுத்த போது மண்ணைத் தின்ருன். இதனைச் சொன்னதை உணர்ந்தாள் பார்வதி.

''இங்கே என்ன வாழ்கிறது. இருப்பது ஒரு மாடு—விடை. அதில் அவர் ஏறிக்கொள்வார். சமயாசமயத்தில் நானும் ஏறிக்கொள்ள கவண்டும். எல்லாரும் மாட்டுக்காரா! மாட்டுக்ரோரா! என்பார்கள். இது கேவலமாக உங்க அண்ணனுக்குத் தெரியவில்லை!''

தன் அண்ணனை—சிவனை மாட்டுக்காரன் என்று கூறியதும் இலக்குமிக்குக் கோபம் வந்தது. ''என் அண்ணன் ஒரு மாட்டை மேய்த்தவன். கொஞ்சம் மரியாதை உள்ளவர்.. மாட்டுக்காரன் என்று கூப்பிட்டாங்க : உங்க அண்ணன் கதை என்ன? ஊர் மாடுகள் மேய்த்தவர். எல்லோரும் மாட்டுக்காரப் பையா என்றே கூப்பிட்டார்கள். கோ—மாடு, பாலன்—சிறுவன். மாட்டுக்காரன் பெரியவரா? மாட்டுக்காரப் பையன் பெரியவனு!''

''பார்வதிக்கு முகம் சுருங்கியது. தன் அண்ணனை மாட்டுக்காரப்பையன் என்றுமடக்கி விட்டாள் நாத்தனுர்.

பார்வதி, ''இலக்குமி உங்கண்ணன் லட்சணத்தைக் கேள். உங்கண்ணன் தூது போனுர். அதுவும் பரத்தை வீட்டுக்குத் தூது போனுர்.''

இலக்குமி : அம்மணி! பக்தனுக்குத் தூது போக வேண்டியது எங்கண்ணன் கடமை. சுந்தர மூர்த்தி நாயனுருக்காகத் தூது போனுர்.

பார்வதி : நல்ல பக்தன், நல்ல கடவுள்! தூது வேலைக்குத் தகுதியானஆசாமி உங்கள் அண்ணன்!

இலக்குமி : எங்கண்ணன் தூது போய் நன்மையில் முடிந்தது. உங்கண்ணன் தூது போய்க் கௌவரர்களைக் கௌரவமாக முடித்தார். விதுரன் துரோகியானுன். கர்ணனைக் கொன்ற பெருமை அவன் தம்பிகளுக்குச் சேரும்! பாரதக் கதை அனைத்தும் உங்கண்ணன் தூதுவினுல் முடிந்த சாம்பல்! அத்தனையும் சூது!

பார்வதி பார்த்தாள். தன் அண்ணனை மடக்கிவிட்டாள் இலக்குமி. நினைவு வந்தது.

பார்வதி : உங்கண்ணன் கதை ஒன்றை நினைவு படுத்திக் கொள்ளுகிறேன். திருநீல கண்டரிடம் ஒடு ஒன்றைக் கொடுத்து, அதனை மறைத்து வைத்த திருட்டு வேலை!

இலக்குமி : உங்கண்ணன் திருட்டிலே பெரிய கை. ஆயர்பாடியிலே எத்தனை வீட்டிலே வெண்ணெய் திருடி இருப்பீங்க. உரலிலே கட்டி வைத்து அடிச்சது உலகம் அறிந்த கதை.

பார்வதி : இருக்கட்டுமே! உங்கண்ணன் சுடலையில் ஆடுகின்ற பேயாண்டி!

இலக்குமி : அவராவது பூமியிலே நடனமாடினார். உங்கண்ணன் ஆட இடம் கிடைக்காமல் பாம்பின் மேலே—காளிங்கன்—தலைமேலே ஆடினார்!

பார்வதி : பாம்பின் மேலே ஆடினால் நல்லது. ஆனால் உங்கண்ணன் மண்ணைத் தின்றார் என்று சொன்னே. ஆனா உங்கண்ணன் நஞ்சை உண்ட நபர்.

இலக்குமி நிறுத்தம்மா!

இவ்வாறு கௌரியும்—கமலையும், கலைமகளும், மலைமகளும் பேசிக் கொண்டிருந்தபோது—விளையாட்டாக இவர்கள் பேசிக் கொண்டு இருந்தபோது—பந்து மித்திரர்கள் அங்கே வந்து விட்டார்கள்.

அவர்கள் பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தார்கள். என்பதாகக் கற்பனை உரையாடல் ஒன்றைச் சிவப்பிரகாச சுவாமிகள்பாடுகின்றார்.

''கவுரிகம லாயர (ன்) இரந்த சோ றிதுவெனக்
கமலை மண் கண்டேன் எனக்
காளை யொன்றே அரற்கு எனமாடு மேய்த்ததைக்
கட்டிடையர் ஆரோ வெனச்
சிவனெருவர் தூது என்ன அத்தூது சென்ற கதை
செப்பில் லொரு பாரத மெனச்
சே (ந்) ஓடு திருடினன் அரசன் எனக் கட்டுண்ட
செய்தி நா மறிவோ மென
அவையி(ல்) நட மாடினன் அரன் என்ன
அவ்வாடல் அர வம் அறியா தோவென
ஆலமதை யுண்டனன் அரனென்ன, மண்ணுண்ட
அதனை யறி யோயோ வென
விவரமொடு மலைமகளும் மலர் மகளும் இவ்வாறு
விளையாடு (ம்) இவர்கள் துணையா
மேவிவரு புத்ரமித் திரகளத் திரருடன்
மேன்மேலும் மிக வாழியவே!''

**பெயரில் இருக்கிறது பெற்றவள் பெருமை :**

குழந்தைச் செல்வம் மற்றைய செல்வங்களைக் காட்டிலும் மேம்பட்டது. குழந்தையென்பது தெய்வம் தந்த பிறவியாக ஆத்திகர்கள் மதிப்புச் செய்வார்கள்.

எனவே பண்ணிய பயிரின் புண்ணியம் தெரிவது போன்று, பெற்ற பிள்ளைக்குப் பெயர் இடுவதிலும் இறைவனுக்கு நன்றி செலுத்துவது இந்து மதத்தின் இயல்பு.

எப்பெயர் வைத்தாலும் தெய்வத்தை நினைவூட்டும் பெயர்களாகவே இருக்கும். பக்தர்கள், தெய்வப் பெயர் தவிர்த்து வேறு பெயரை வைக்க மாட்டார்கள். வைக்கும் பெயர் இம்மைக்கு மட்டுமல்லாமல் மறுமைக்கும் பயன் தர வேண்டும். இறைவனை நினைப்பதற்கும், அவன் பெயரைச் சொல்லி அழைப்பதற்கும் குழந்தைப் பேறு ஓர் அரிய சாதனம்.

பெயர் வைப்பதில் பெற்ற தாய்க்கே அதிகமான உரிமையுண்டு. அவள் பெற்ற குழந்தை பரகதி அடைய வேண்டும். அவளும் நரகம் போகாமல் ஈசன் திருவடியைச் சேர வேண்டும்.

தெய்வப் பெயர்களை மக்களுக்கு வைப்பது அண்மைக் காலம் வரை நடந்து வந்தது. இக்காலத்தில் ஏதோ ஒரு பெயரைச் சூட்டுகிறார்கள். குழந்தை தெய்வத்தின் அருள் என்றறியாமல், பண்டைய மரபு அறியாமல், ஏதோ ஒரு பெயரைச் சூட்டுகிறார்கள். ஈசனோடு தொடர்புடைய நாமத்தைச் சூட்டாது விடுகிறார்கள்.

பெரியாழ்வார் பாடல் பல, தெய்வப் பெயர்களைக் குழந்தைக்கு வைக்க வேண்டுவதின் காரணத்தை வலியுறுத்துகிறது.

ஆங்கிலேயர்கள் தங்கள் பெயரோடு கல் (Stone) வீடு (House) மரம் (Tree) என்று எல்லாம் வைத்திருப்பதைப் பார்க்கிறோம். மானிட சாதியில் பிறந்த காரணத்தால் மானிடர் பெயரைக் கூட வைத்தல் தவறு என்கிறார் பெரியாழ்வார். பாட்டைப் பாருங்கள்.

''மானிட சாதியில் தோன்றிற்று
ஒரு மானிட சாதியை
மானிட சாதியின் பேர்
இட்டால் மறுமைக்கில்லை.''

மானிடர்களுக்கு மனிதப் பெயர்களை இடுவதால் இம்மைக்குப் பயன் உண்டு; மறுமைக்குப் பயன் இல்லை. மறுமைக்கும் நலன் தரத்தக்க பெயர்களை வைக்க வேண்டுமாம். எப்படி?

வான் உடை மாதவா! கோவிந்தா!
என்று அழைத்தக்கால்
நான் உடை நாரணன் தம்
அன்னை நரகம் புகாள்!

பெயர் வைக்கும்போது குழந்தையைப் பெற்ற தாய் நரகம் புகாவண்ணம் கடவுள் தொடர்புடைய பெயர் வையுங்கள். இவ்வாறு பெரியாழ்வார் பெயர் வைப்பதிலே பக்தி வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

இதனை மேலும் வலியுறுத்துவதற்காக மற்றொரு பாடலில் கூறுகிறார். மனிதப் பெயர் மனிதனுக்குப் போதும் என்று, ஏழை மனிதா எண்ணாதே! அவன் தெய்வத்தின் திருவுருவம். அவனுக்குத் தெய்வப் பெயரைக் கொடு!

எவ்வாறு பிறந்து மண்ணுகும்
மானிடப் பேரிட்டு அங்கு
எண்ணம் ஒன்று எண்ணியிருக்கும்
ஏழை மனிசர்காள்!
கண்ணுக் கினிய கருமுகில்
வண்ணன் நாமமே
நண்ணு மின்!

எவ்வாறு வலியுறுத்துகிறார்? பாடலைப் பாருங்கள்.

ஆண்டவனோடு தொடர்புடையபெயரைத் தேடுங்கள். அவ்வாறு தேடுவதால் தெய்வத்தைப் போன்ற குழந்தையைப் பெற்ற தாய் என்ன ஆகமாட்டாள்?

நண்ணுமின்! நாரணன் தம்
அன்னை நரகம் புகாள்!

ஆழ்வார்கள் நாயன்மார்கள் பெயரிடுவதைத் தெய்வப் பெயராக இடுங்கள் என்று பாடுவதற்கு முன்னதாகவே, பெயர் வழிப் பட்டியல் கடவுளோடு தொடர்புடையதாக இருந்து வந்திருப்பதை நம் குடும்பங்களில் அறிகிறோம். பாட்டன், பூட்டன், முப்பாட்டன், பாட்டி, பூட்டி, முப்பாட்டி ஆகியவர்கள் பெயர்கள் யாவும் தெய்வப் பெயர்களாக சைவ—வைணவ சமயத் தொடர்புடைய குடும்பங்களில் இருந்து வந்துள்ளன.

கருப்பன், இருளன், மாரியம்மா, காத்தாயி போன்ற சிறு தெய்வங்களின் பெயரும் பரம்பரை பரம்பரையாகச் சில குடும்பங்களில் இருந்து வருகின்றன.

குழந்தைக்குப் பெயர் வைக்கும்போது தெய்வ சிந்தனையுள்ள குழந்தையாக வளரத் தக்க முறையில் பெயரிட வேண்டுமென்று ஆத்திகர்கள் எண்ணுதல் வேண்டும்.



# நம்பிக்கையின் தேரோட்டம்

கே.எஸ்.ஜெகன்னாதன்

தேர் நிலையில் இருக்கிறது!

தேரோட்ட நாளில் வடம் . பிடிக்கும் முன்பே அதை அலங்கரிக்கின்றோம். ஆண்டவனைத் தேரினிலே வைத்துத் தேர் புறப்பட ஆயத்தம் செய்கிறோம்.

பலர் தேரினை வடம் பிடிக்கின்றனர். தேரோடும் வீதியிலே தேர் பவனி வருகிறது.

தேரோட்டம் ஒரே நாளில் முடிவதில்லை. மூன்று தினங்கள் நடைபெறுகின்றது.

முதல் நாள் வடம் பிடித்தவர்களே அடுத்த நாளும் வந்து வடம் பிடிப்பதில்லை.

அதனால் தேர் முதல் நாள் நின்ற இடத்திலேயே நின்று விடுவதில்லை.

அடுத்தடுத்த நாள் வருவோர் வடம் பிடித்த தேர் நிலையை அடைகிறது.

இதுபோலத்தான் மனித வாழ்வும் அமைந்திருக்கின்றது.

ஆண்டவனை ஆராதிக்கும் பக்தர்கள் தேரினை எப்படி நிலைக்குக் கொண்டு வந்து சேர்க்கின்றார்களோ, அதுபோல மனிதன் பிறரின் உதவியால் முன்னேறுகின்றான்.

ஒளிவிடும் நட்சத்திரம்!

சுடர் விட்டெரியும் தீபம்!

விளக்கை நாடிவரும் விட்டில்!

இவையெல்லாம் ஒன்றே.

எரிந்து விழும்போது நட்சத்திரம் ஒளி விடுகிறது.

அணையப் போகும் நேரத்திலே தீபம் சுடர் விட்டெரிகிறது.

தன் வாழ்வை முடிக்கப் போகும் நேரத்திலே விளக்கை நாடி விட்டில் வருகிறது.

எரிந்து விழும் நட்சத்திரத்தை வேடிக்கை பார்க்கிறான். அணைகின்ற தீபத்தைப் பார்த்து அங்கலாய்க்கிறான். விளக்கை நாடி வரும் விட்டிலைக் கண்டு பரிதாபப்படுகின்றான். இவையெல்லாம் நல்லிதயமுள்ள மனிதனின் இயற்கை குணங்கள்.

மனித வாழ்வில் எத்தனையோ வெற்றிகள், தோல்விகள், ஏமாற்றங்கள், நம்பிக்கைத் துரோகங்கள், மோசடிகள். இத்தனையும் ஒரு மனிதன் வாழும் குறுகிய காலத்தில் அவன் அனுபவிக்கின்றவைகளாகும்.

இவைகளிடமிருந்து விலகிப் போக முடியுமோ? மதியைப் புலனடக்குதலால் வென்று விடலாம். ஆனால் விதியை?

வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்பதைப் போல, விதி வகுத்த வழியிலேதான் நம் வாழ்வு செல்கிறது. விதி எழுதுகின்ற வழியிலே தான் மதி செல்கிறது.

மனிதன் ஒரு நாள் நிரந்தர ஓய்வுக்குப் போகிறான். இது நிச்சயமாக்கப்பட்ட ஒன்று. இதிலிருந்து மகான்களும் தப்பியதில்லை. மாமேதைகளுக்கும் விதி விலக்கில்லை.

நீலவானம்!

நட்சத்திரக் கூட்டங்கள்!

நிலவின் பவனி!

நீலவானம் இருக்கும்! நட்சத்திரக் கூட்டமும் நிலவும் ஒருநாள் இல்லாது போகும். அந்த நாளை அமாவாசை என்கிறோம்.

உலகம் இருக்கும். ஆனால் அந்த உலகில் ஓய்வின்றி வாழ்க்கைப் போராட்டங்களில் சிக்கித் தத்தளிக்க மனிதன் இருப்பதில்லை.

வாழ்க்கையிலும் மனிதன் போராடிப் போராடித்தான் முன்னேற முடிகிறது. அவனது அறிவும், ஆற்றலும் சூழ்நிலைகளால் முடமாக்கப் படுவதும் உண்டு.

அறிவும் ஆற்றலும் உள்ள மனிதன் முன்னேற முடிவதில்லை. எதுவுமே தெரியாதவன் என்று எள்ளி நகையாடப்படும் மனிதன் வசதியிலே, வாழ்க்கைத் தரத்திலே உயர்ந்து விடுகின்றான்.

இது எதைக் காட்டுகிறது? ஆண்டவனின் விநோத விளையாடல்களை நமக்கு உணர்த்து கிறது. ஊழ்வினைப் பயனை நமக்குத் தெளிவாக் குகின்றது.

இரவுக்குப் பின் பகல் வந்துதானே ஆக வேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க் கையில் முன்னேற்றத்திற்கான காலக்கட்டம் உருவாகியே இருக்கிறது.

உருவாகி இருக்கின்ற காலக் கட்டத்தை மனிதன் அவனது அறிவாற்றல் கொண்டு பயன் படுத்தும் முறையிலேயே அவனது வாழ்க்கை அமைகிறது.

வாழ்க்கை வாழ்வதற்கே என்ற உன்னத தத்துவத்தை இறைவன் நமக்கு உணர்த்துகின் றார். அதைப் புரிந்து நாம் சிறப்புடன் வாழ்கி றோமா?

இல்லை . . . . இல்லவே இல்லை!

பிறரை வாழ வைத்து நாமும் வாழ்வது தான் சிறப்புடைய வாழ்க்கை,என்று சான்றோர் களால் சொல்லப்படுகிறது. நாம் அத்தகைய வாழ்க்கை வாழ்கிறோமா?

இல்லை . . .இல்லவே இல்லை!

புதிய சமுதாயத்தை உருவாக்குகின்ற புத்துலகச் சிற்பிகள் என்று பாராட்டப்படும் போது, அதற்குத் தகுதியுள்ளவர்கள்தானா என்று நாம் சிந்திக்கின்றோமா ?

இல்லை . . .இல்லவே இல்லை!

பின் மனிதன் என்னதான் செய்ய எண்ணு கிறான். இல்லாத ஒன்றை இருப்பதாக எண்ணி இறுமாந்து போகிறான். அப்படிப்பட்டவன் வாழ்க்கையில் ஒரு நாள் இடறி விழும்போது ஆழம் காண முடியாத அளவுக்குக் கீழே போய் விடுகிறான்.

நம்பிக்கையின் அடிப்படையிலேதான் மனித வாழ்வு அமைந்திருக்கிறது. நம்பிக்கை யோடுதான் மனிதன் ஆண்டவனை ஆராதிக்கி றான்.

நம்பிக்கையை இழந்து விடும் மனிதன் வாழ்க்கையிலே முன்னேறுவது இல்லை.

நம்பிக்கை என்பதே தேரோட்டத்தைப் போன்றது.

மனிதனுடைய வாழ்க்கையில் பலதோல்வி கள் வரலாம். நம்பியவர்கள் ஏமாற்றலாம். இதுதான் வாழ்க்கை. இப்படித்தான் அமையும் என்று எண்ணி இருக்கும்போது அது அடியோடு மாறிவிடலாம். அதனால் மனச் சோர்வு வர லாம்.

தேர் நிலையிலிருந்து புறப்படும்போது யாரோ சிலர் வடம் பிடிக்கின்றனர். அடுத்த நாள் அவர்களே வருவதில்லை. மீண்டும் யாரோ சிலர் வடம் பிடிக்கத் தேர் நிலையை அடைகிறது.

முதல் நாள் வடம் பிடித்தவர்களே வரட் டும் என்று யாரும் காத்திருப்பதில்லை.

வாழ்க்கையிலும் அப்படித்தான் ஒருவரை நம்புகிறோம். அவரால் நம் வாழ்வு பூரணத்து வம் அடையும் என்று நினைக்கின்றோம். அந்தப் பற்றுக் கோட்டைப் பற்றிக் கொண்டு வாழ்வில் நிம்மதி அடையலாம் என்றும் நம்புகின்றோம்.

ஆனால் . . . .

நாம் யாரை இதயபூர்வமாக நம்பியிருக் கின்றோமோ அவர்கள் எதிர்பாராத சூழ்நிலை களுக்கு இலக்காகி நம்மையும் ஏமாற்றித் தன்னையும் மாற்றிக் கொள்கின்றார்கள்.

அதற்காக . . . .

வாழ்க்கை பூராவும் அதை எண்ணியே மருகிடவா முடியும்? ஏதோ சில நாட்கள் எண்ணங்கள் சிதறும். நினைவுகள் தடுமாறும். காலம் செல்லச் செல்லக் காயம் ஆறி வடுவாகி விடுகிறது அல்லவா? அந்த வடுவைப் பார்க் கின்ற போது இப்படி ஒரு காயம் ஏற்பட்டிருந் தது என்று உணர்கிறோம். நெஞ்சின் மூலையிலே ஏற்பட்டிருக்கும் காயம் ஆறினாலும் அந்த வடு நினைவுக்கு அடிக்கடி கொணர்ந்து நிறுத்தாவிட் டாலும் சில நாட்களுக்கு ஒரு முறையாவது நிறுத்தியே தீரும்.

எண்ணங்கள் மாறலாம். நினைவுகள் மாற லாம். மனதில் பதியாதவைகள் எத்தனையோ இருக்கலாம். ஆனால் மனதில் பதிந்துவிட்ட ஒன்று அவனது வாழ் நாள் உள்ளளவும் மறை யாது.

இப்படி மறையாத மனத்தைக் கொடுத்த ஆண்டவன் மனிதனுக்கு நம்பிக்கையையும் கொடுத்திருக்கின்றான்.

நம்பிக்கை என்னும் தேரோட்டம் மெது வாக நகர்கிறது. எப்படியும் தேர் நிலையை அடைவது போல நமது நம்பிக்கையும் அவனது அருளிருந்தால் நிச்சயம் நிறைவு பெறும். **





# புறக்கோயிலும் அகக்கோயிலும்!





ரா. கணபதி

காயமே கோயிலாகக்
கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக
மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா
நிறைய நீரமைய ஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப்
போற்றவிக் காட்டினோமே.

என்று ஓரிடத்தில் அப்பர் பெருமான் பாடுகிறார். இன்னோர் இடத்தில் ''தொண்டர் அகமலாற் கோயிலில்லை ஐயன் ஐயாறனார்க்கே'' என்கிறார்.

இவற்றை வைத்துக் கொண்டு இக்காலத்தில் சிலர் வெளிக்கோயில், புறவழிபாடு இவை யாவுமே அநாவசியம் என்ற ரீதியில் பேசுகிறார்கள். ''கோவிலாவது ஏதடா? குளங்களாவது ஏதடா? கோவிலும் மனத்துளே! குளங்களும் மனத்துளே!'' என்கிறார்கள்.

உண்மைதான். நம் உயிர்க்குயிராக, உள்ளுக்குள்ளே இறைவனை உணர்ந்துவிட்டோமாயின் வெளிக்கோயில் வேண்டாம்தான். புறப்பூசை வேண்டாம்தான். ஆனால் நெஞ்சுக்கு வஞ்சமின்றி நம்மை நாமே ஆய்ந்து பார்த்துக் கொண்டால், இவ்விதம் நம்முளே தெய்வீகத்தை, தெய்வீகத்துள்ளே நம்மைக் கண்டு கொள்கிறோமா? சில காலம், சிறிது நேரம் வேண்டுமாயின் இவ்வுன்னத உணர்வில் நம்மில் சிலர் இருக்கக் கூடும். மற்ற நேரத்தில் ஐம்புலன் அணைப்பில் அகப்பட்டுத் தவிக்கும் அற்ப சீவனாகத்தான் இருப்போம்.

இந்தத் தவிப்பைப் தணித்து இன்பம் ஊட்டவே, இறை நினைவூட்டவே ஆலயங்கள் வெளியில் வேண்டியிருக்கின்றன. அலைப்பை நீக்கி அமைதி நல்க ஆலயம் அவசியமாக இருக்கிறது. எங்கும் கடவுளை உணரும் உயர்நிலை எய்தும்வரை, எங்கோ ஓரிடத்திலாவது கடவுளை உணர்த்துவதற்காகக் கோயில் வேண்டியிருக்கிறது. எப்போதும் அவனை உணர்ந்து, அவ்வுணர்வே பூசையாக இருக்கும் உச்ச நிலையை அடையும் வரை, சில போதாவது அவனது பக்தியில் ஈடுபட்டு நிற்க அர்ச்சனையும், அபிஷேகமும் உற்சவமும், உலாச்சுற்றும் வேண்டும் தான்.

நம் சாமானிய நிலையில் கோயிலும், புறப்பூசையும் வேண்டாம் என்பது அகங்காரத்தால் நம் தலையில் நாமே மண்ணை வாரிப் போட்டுக் கொள்ளும் உற்பாத காரியம்தான். நம் முன்னோர் பதினாயிரங் காலம் பயிராக நமக்குத் தந்துள்ள செல்வத்தை நாமாக நஷ்டப்படுத்திக் கொண்டு தரித்திரராக நிற்கும் பேதைமைதான்.

மெய்யாலுமே மெய்யுணர்வு பெற்று ஆழ்வாராதிகளும், நாயன்மார்களும் ஆலய தரிசனத்தை நிறுத்தவில்லைதான். மேலே மேற்கோள் காட்டிய வாகீசப் பெருந்தகை உட்பட எங்கும் உள்ள இறைவனை எங்குமே அவர்கள் காண முடிந்த போது ஆலயத்தில் மட்டும் காணமுடியாதா என்ன? எனவேதான் பிறர்க்கும் ஒரு வழிகாட்டியாக, அந்த மகான்களும் தல யாத்திரை, தீர்த்த யாத்திரை செய்தனர். அவர்களுக்குப் பலப்பலபடிகள் கீழே உள்ள நாமோ, 'கோயிலெதற்கு? குளமெதற்கு?' என்கின்றோம். அவை மெய்யாகவே நமக்குத் தேவையில்லை என்று பக்குவத் தெளிவு வந்துவிட்டாலும் கூட, இதை வெளியில் சொல்லிச் சத்தம் போட வேண்டியதில்லை. ஆலயம் தொழும் சாலவே நல்ல பழக்கமுடைய பிறரது புத்தி பேதலிக்கும்படிப் பிரசாரம் செய்ய வேண்டியதில்லை. ஆன்மாநுபூதியே வந்துவிட்டாலும் கூட, அப்போதும் புறக்கோயில் அகக்கோயிலின் அற்புத அடையாளமாக இலகுமே தவிர, அகவின்பத்துக்கு ஊறு பயப்பதாக ஒரு போதும் இராது. அது அவசியமில்லாததாக வேண்டுமாயின் ஆகலாம்; ஆனால் அகக்கோயிலுக்கு ஆபத்து விளைவிப்பதாக எந்நாளும் ஆகாது!

'சாந்நித்தியம்' என்று ஒன்று மெய்யாலுமே உண்டு. மக்களுக்கு உயர்ந்த ஆன்ம நலன் பயக்கும் சக்தி அதற்கு உண்டு. இறைவன் அருளாலும், ரிஷிகள் தவத்தாலும், மந்திரங்களின் மகிமையாலும், ஆகம விதிகளின் அநுசரணையாலும் இந்தச் சாந்நித்தியம் உண்

டாக்கப்படுகிறது. தொடர்ந்து காக்கப்படுகிறது. அதன் பயனை மக்கள் யாவரும் பெறுவதற்கு மேலும் மேலும் ஊக்கம் தரவேண்டுமேயன்றி, வெற்று வேதாந்தம் பேசி இரண்டுங் கெட்ட நிலையை உண்டாக்கலாகாது.

சாந்நித்திய விஷயத்தில் வெற்றியைக் கொண்டு ஆராய்ந்து, மாறுதல்கள் செய்வது விஷப் பரீட்சையே ஆகும். நீண்ட நெடும் மரபுக்கு அடங்கியே நிற்பதால் ஒரு குறைவும் வந்துவிடாது. புது ஏற்பாடுகளைச் செய்வதால், குறை ஏற்படுமாயின் அதன் பின் அதற்கு நிவர்த்தி ஏது? பரிகாரம் ஏது?

ஆலயங்கள் இன்னொரு விதத்திலும் அவசியமாகின்றன. நம் அற்புதச் சிற்ப, சித்திரக் கலைகளின் உறைவிடம் அவைதாமே?

எனவே ஆலயங்களைச் செழிக்கவிடுவோம்; அவற்றில் ஆகமங்களையே அவற்றுக்குரிய விதிகளில் தழைக்க விடுவோம்.

முதலில் மேற்கோள் காட்டிய அப்பர் பெருமானின் மணிவாசகங்கள் சிலவற்றிற்கே முடிவிலும் திரும்புவோம் :

திருக்கோயில் இல்லாத திரு இல் ஊரும்....
பாங்கினொடு பல தளிகள் இல்லா ஊரும்....
அவையெல்லாம் ஊரல்ல, அடவி காடே (1)

ஆக்கையாற் பயன் என்? அரன்
கோயில் வலம் வந்து
பூக்கையால் அட்டி, ''போற்றி'' என்னாத
இவ் ஆக்கையாற் பயன் என்? (2)

கால்களாற் பயன் என்? கறைக்
கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரம் கோகரணம்
சூழாக் கால்களாற் பயன் என்? (3)

நிலைபெறுமா(று) எண்ணுதியேல் நெஞ்சே நீ வா
நித்தலும் எம்பிரானுடையகோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி,
''சங்கரா சய போற்றி போற்றி'' யென்றும்
''அலை புனல் சேர் செஞ்சடை எம் ஆதீ!'' யென்றும்
''ஆரூரா'' என்றென்றே அலறு நில்லே. (4)





செங்கோட்டையில் நிகழ்ந்த கருணையில்லத் திறப்பு விழாவிற் கலந்து கொண்டு சிறப்பித்த பெருமக்கள். (3-6-1975)



# திருப்புலியூர் மாயப்பிரான்



— ந. சுப்புரெட்டியார்

வைணவ சமயத்தில் சிறப்பாகக் கொள்ளப் பெறும் மந்திரங்கள் மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரம சுலோகம் என்பவை. மோட்சத்தை விரும்புகின்றவர்கள் இந்த மூன்று மந்திரங்களையும் தெரிந்து கொள்ள வேண்டும். இம்மூன்று மந்திரங்கள் சகல வேதசாரமான பொருள்களைத் தெரிவிப்பதாலும், இவற்றின் பெருமையை உணராதார் காதில் விழாதவாறு இவற்றை மறைக்க வேண்டியிருத்தலாலும் இவை 'இரகசியங்கள்' (மறைகள்) என்னும் பெயரைப் பெற்றுள்ளன என்பது ஈண்டு அறியத்தகும்.

இந்த மூன்று மந்திரங்களுள் முக்கியமானது திரு மந்திரம். இதுவே முதலில் அறியத் தக்கது. இம் மந்திரமே ஆன்மாவின் உண்மைச் சொருபம் இன்னதென்பதையும், அந்நிலைக்கேற்பச் சேதனன் விடவேண்டுவன இவை என்பதையும், பற்ற வேண்டுவன இவை என்பதையும் தெரிவிக்கின்றது. இவற்றை நன்கு அறிந்தவர்கட்கே உபாயத்தைக் கூறும் துவயத்திலும், பலனைக் கூறும் சரம சுலோகத்திலும் விருப்பம் ஏற்படும். ஆதலின் ஆன்மாவின் உண்மைத் தன்மையைத் தெரிவிக்கும் இத் திருமந்திரமே முதலில் அறியத் தகுந்த இரகசியமாகின்றது.

திருமந்திரத்தில் 'ஓம்', 'நம:', 'நாராயணாய' என்னும் மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்ற பிரணவத்தின் பொருளையே மற்ற இரு சொற்களும் நன்கு விரிவு படுத்துகின்றன. இவ்விரு சொற்களின் பொருளையே துவயம் விரிக்கின்றது. துவயத்தின் பொருளையே சமர சுலோகம் விவரிக்கின்றது. இங்ஙன்ம் மூன்று மந்திரங்களும் ஒன்றையொன்று விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன. இங்ஙனம் இவை விளக்கமாயிருக்கும் தன்மையை 'முமூட்சுப்படி' என்னும் நூலில் கண்டு தெளியலாம்.

இந்தத் திருமந்திரத்தையே வேதங்களும் விரும்பின. விஷ்ணு காயத்ரி, தைத்திரியோபநிடதம், மகோப நிடதம், சுபாலோப நிடதம் ஆகிய நூல்கள் இதனைச் சிறப்பித்துக் கூறுவதிலிருந்து இவ்வுண்மையை அறியலாம். அஷ்டாட்சர பிரம வித்யை, கருட புராணம், பாரதம் முதலிய நூல்களும் இந்த மந்திரத்தையே போற்றி உரைப்பதனல் முனிவர்களும் இதனையே ஆதரித்துப் போந்தார்கள் என்று தெரிகின்றது. அருளிச் செயல்களும் நாராயண பதத்தையே பாராட்டிச் சொல்லுகின்றமையின், ஆழ்வார் பெருமக்களும் இதனையே விரும்பினர் என்பது வெள்ளிடைமலை.

எம்பெருமானின் மேன்மையைக் காட்டிலும் அவனைக் குறிக்கும் திரு நாமத்தின் மேன்மையே உயர்ந்ததாகும். இந்நாமத்திற்கு உரியவனுகச் சொல்லப்படும் எம்பெருமான் அருகிலின்றித் தொலைவிலிருப்பினும் அவனைப் பற்றியதாக உள்ள இந்நாமம் தன்னைப் பக்தியுடன் சொன்னவர்களுடைய விருப்பங்களை முற்றுப்பெறச் செய்யும். இதனைச் சொல்ல வேண்டும் என்ற எண்ணமின்றியே சொன்னாலும், தம் குழவிகட்கு இப்பெயரிட்டு அழைக்கினும் பரிகாசமாகவோ, இழிவாகவோ, பொருளுணர்ச்சியின்றியோ சொன்னாலும் அப்படிச் சொன்னவர்களைக் காப்பதினின்றும் தவருது. சேதனர் நிலைக்குத் தகுந்தவாறு அவரவர் விரும்பியவற்றையும் தருவதாகும்.

''குலம் தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும்; நீள் விசும்பு அருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலந்தரும்; மற்றும் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணு என்னும் நாமம்''

(குலம்—உயர் குலம்; நிலம்தரம்—தரைமட்டம்; பெருநிலம்—பரமபதம்; வலம்—ஆற்றல்).

என்ற திருமங்கையாழ்வாரின் பாசுரத்தால் இம்மந்திரத்தின் ஆற்றலை அறியலாம்.

இம்மந்திரத்தின் மூன்று சொற்களும் மூன்று பொருள்களைக் குறிக்கின்றன. இவற்றினுள் முதற்சொல்லாகிய பிரணவம் சேதனனுடைய சேஷத்துவத்தையும் (அடிமை நிலையையும்), இரண்டாவது சொல்லாகிய 'நம:' பாரதந்திரியத்தையும், மூன்ருவது சொல்லாகிய 'நாராயணய' என்பது சேதனன் ஈசுவரனுக்குப் புரிய வேண்டிய கைங்கரியத்தையும் தெரிவிக்கின்றன.

பிரணவமாகிய "ஓம்' என்ற சொல்லும் அ, உ, ம, என்ற மூன்று எழுத்துக்களைக் கொண்டது. இம் மூன்று எழுத்துக்களும் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அகாரம் பகவா

னையும், அதில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும், உகாரம் அந்தச் சேஷத்துவத்தின் அநந்யார்கத்துவத்தையும், மகாரம் ஞானவானுகிய சீவனையும் தெரிவிக்கின்றன. இவற்றின் விரிவுகளை உரிய நூல்களில் கண்டு தெளியலாம்.

பகவானைப் பற்றிக் கூறும்நூல்ளில் திருவாய் மொழியும் ஒன்று. இது 'திருமாலவன் கவி' என்றும் சிறப்பிக்கப் பெறும். இந்நூலில் நம்மாழ்வார் பகவானை நூறு பதிகங்களால் அநுபவித்து இனியராகின்ருர். இவற்றுள். 73 பதிகங்கள் ஆழ்வார் தாமான தன்மையில் பேசினவை ; 27 பதிகங்கள் பெண் பாவனையில் பேசினவை. பெண் நிலையிலிருந்து பேசியவற்றுள்ளும் மூன்று வகுப்புக்களுண்டு. மகள் பாவனையில் பேசினவை பதினேழு பதிகங்கள்; தாய் பாவனையில் பேசினவை ஏழு பதிகங்கள் ; தோழி பாவனையில் பேசினவை மூன்று பதிகங்கள். இறுதியாகக் குறிப்பிட்ட மூன்று பதிகங்ளிலும் பிரணவத்தில் உகாரத்தின் பொருளான அநந்யார்கத்துவம் வெளியிடப்படுவதாக ஆன்ருேர்கள் குறித்துள்ளார்கள். இவற்றுள் திருப்புலியூர் எம்பெருமான் மீதுள்ள பாசுரங்கள் 'தோழி அறத்தொடு நிற்றல்' என்ற அகப் பொருள் துறையில் அமைந்துள்ளன.

''அறத்தொடு நிற்றல்'' என்பது என்ன? அதாவது, தானும் தலைமகளும் இதுகாறும் அறத்தொடு பொருந்தவே நடந்திருப்பதாகத் தோழி காட்டி நிற்றலே இது. அறம் என்பதை ஈண்டு முறை, தக்கது என்று கொள்ளல் வேண்டும். இறையனுர் களவியலுரையாசிரியரும், ''அறம் என்பது தக்கது, தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு; அல்லதூஉம், பெண்டிர்க்கு அறம் என்பதுகற்பு, கற்பின் தலைநிற்றல் என்பதூஉமாம்'' என்று உரைத்துள்ளமை ஈண்டுக் கருதத்தக்கது. தொல்காப்பியனுர் அறத்தொடு நிற்றலைப் 'புரைதீர்கிளவி' என்று குறிப்பிடுவர். இறையனுரோ 'மாறுகோள் இல்லாமொழி' என்பர்.

''தோழிக்குரியவை கோடாய் தேஎத்து
மாறுகோ ளில்லா மொழியுமா ருளவே''

(கோடாய்—செவிலித்தாய்; கொள்+தாய் எனப் பிரிந்து தாயாகக் கொள்ளப்படுவோள் எனப் பொருள்படும்).

என்ற நூற்பாவினுல் இதனை அறியலாம் — 'மாறு கோளில்லா மொழி' என்பதற்கு உரையாசிரியர் கூறும் விளக்கவுரை : ''எற்றிேனாடு மாறுகொள்ளாமையோ எனின், தலைமகள் பெருமையோடுமாறுகொள்ளமையும், தலைமகள் கற்பிெனாடு மாறுகொள்ளாமையும்தோழி தனது காவலொடு மாறுகொள்ளமையும், நாணிெனாடு மாறுகொள்ளாமையும், உலகிெனாடு மாறு கொள்ளாமையும், எனக் கொள்க'' என்பது. தலைவிக்கு வாய்த்த களவொழுக்க நிகழ்ச்சியினுல் தம் மேற்படுவதான குற்றம் ஏதுமில்லை என்று இவ்வாறெல்லாம் இவையனைத்திற்கும் மாறுகோளில்லாத வகையாய்த் (குற்றமில்லாத வகையாய்) தோழி ஆய்ந்து கூறுவாள்.

எவ்வெப்பொழுதெல்லாம் அறத்தொடு நிற்கும் நிலை ஏற்படும் என்பதையும் இறையனுர் அகப்பொருள் விரித்துரைக்கின்றது. காவல் மிகுதி காரணமாகத் தலைமகட்கு வேட்கை பெருகும்பொழுதும் அயலார் வரைந்து புகும் காலம் வரும்பொழுதும், வரைவு ஏற்றுக்கொள்ளாது தமர் அவ்விடத்து மறுக்கும்பொழுதும், தலைவனுக்கு நிகழும் ஏதம் பற்றி அஞ்சும் பொழுதும் தோழி அறத்தோடு நிற்பாள். தொல்காப்பியர் இதனை ஏழு வகையாக நிகழும் என்பர். பிறிதோரிடத்திலும் தலைவியின் மாறுபாட்டைக் குறித்துச் செவிலி அறிவரை வினுவிக் குறிபார்க்கும் இடத்திலும், வேலனைக் கொண்டு வெறியாடும்பொழுதும், பிறர் வரைவு வந்துழியும், தலைவனது வரைவு மறுத்த வழியும் அறத்தொடு நிலை வகையால் தலைவற்கும் தலைமகட்கும், தனக்கும், குலத்திற்கும் குற்றம் ஏற்படாதவாறு குற்றம் தீர்ந்த கிளவியைத் தாய்மாட்டு நிரம்பச் சொல்லாது தோற்றுவாய் செய்வாள் என்று குறிப்பிடுவர்.''

இந்த எண்ணங்கள் நம் சிந்தையில் குமிழியிட்டவண்ணம் பேருந்து மூலம் குட்டநாட்டுத் திருப்புலியூரை அடைகின்ருேம். ஊர் இயற்கைச் சூழலில் அழகுற அமைந்துள்ளது. ஊர் சுற்றிலும் வயல் சூழ்ந்துள்ளது. ''செழுநீர் வயல் குட்ட நாட்டுத் திருப்புலியூர்'' என்பது நம்மாழ்வார் திருவாக்கு. இந்தத் திருப்பதி எம்பெருமானை நம்மாழ்வார் மட்டிலும் ஒரு பதிகத்தால் மங்களா சாசனம் செய்துள்ளார். புன்னை மரங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்திருப்பதை ஆழ்வார் ''புன்னை அம்பொழில் சூழ் திருப்புலியூர்'' என்று சிறப்பித்துள்ளார். சோலையும் வயலும் சூழ்ந்துள்ளமையை,

''ஊர்வளம் கிளர் சோலையும்
கரும்பும் பெருஞ் செந்நெலும் சூழ்ந்து
ஏர்வ ளம்கிளர் தண்பணைக்
குட்டநாட்டுத் திருப்புலியூர்''

(வளம் கிளர்—வளத்தைத் தெரிவிக்கும் ; ஏர் வளம் கிளர்—உழுவது, நடுவது போன்றவற்ருல் அழகு தெரிவிக்கும்; தண்பணை—குளிர்ந்த வயல் களையுடைய பண்ணை; பண், பணணை என்று நிற்கின்றது.)

என்று காட்டுகின்ருள் ஆழ்வார் நாயகி. வயல்களிலும் சோலைகளிலும் உள்ள சுனைகளில் பெரிய தாமரை மலர்கள் மலர்ந்து சூழ்நிலைக்கே ஒரு பொலிவினைத் தந்து நிற்கின்றன. இதனைச் ''சுனையினுள் தடந்தாமரை மலரும் தண் திருப்புலியூர்'' என்று பாசுரம் தெரிவிக்கிறது. மேலும், பொய்கைகளிலும் இந்தத் தாமரை மலர்கள் நிலை விளக்குகள் போல நின்று அணி செய்யும். இந்தப் பொய்கைகளில் முதலைகளும் அதிகமாக வாழுமாம். இதனை,

''கரவார் தடந்தொறும் தாமரைக்
கயந்தீவிகை நின்றலரும்
புரவார் கழனிகள் சூழ்திருப்
புலியூர்''

(கரவு—முதலை; தடம்—பொய்கை; தாமரைக் கயம்—தாமரைத் திரள்கள்; தீவிகை—நிலை வளக்கு. அலர்—மலர்கின்ற).

என்ற பாசுரப் பகுதியால் அறியலாம்.

மலை நாட்டில் வெற்றிலைக் கொடிகட்கும் மிளகுக் கொடிகட்கும் குறைவே இல்லை. வீட்டைச் சுற்றிலுமுள்ள தோட்டங்களில்இவை மலிந்து காணப்படுகின்றன. இந்த வெற்றிலைக் கொடிகளில் அழகிய மெல்லிய இலைகள் நிறைந் திருப்பதைப் பார்க்கலாம். வெற்றிலை போடும் பழக்கம் உள்ளவர்கட்கு இவற்றைப் பார்க்கும் பொழுதே நாக்கில் நீர் சுரக்கும்; அவற்றைப் பறித்து மெல்ல வேண்டும் என்ற தினவும் நாக் கில் ஏற்படும் என்று கூறுவதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அந்த வெற்றிலைக் கொடிகள் அருகிலுள்ள அடியுரந்தையுடைய பாக்கு மரத் தைத் தழுவி அணைத்துக்கொண்டிருப்பதைக் கண்டு களிக்கலாம். மலை நாடு 'நேந்திரம்' என்ற ஒரு வகை வாழைப் பழத்திற்குப் பெயர் போனது. அதனை மலை நாட்டு மக்கள் முக்கிய உணவாகவும் கொள்கின்றனர். அந்த வகை வாழை மரங்கள் செறிந்த இலைகளையும் மடல் களையும் கொண்டு தோட்டங்களை அணி செய் கின்றன. அந்த வாழைகளில் பழக்குலைகள் தொங்கிக் கொண்டிருப்பதையும், அப்பழங் களின் மணம் எங்கும் வீசிக்கொண்டிருப்பதை யும் காண்கின்றோம். இந்தச் சோலைகளில் தென்னை மரங்கள் செறிந்து இருப்பதையும் காண்கின்றோம். இந்தத் தென்னை மரங்களின் செறிந்த ஓலைகளினூடே தென்றற் காற்று உலவிச் சூழ்நிலையை இன்பகரமாக்குகின்றது. இதனை ஆழ்வார் நாயகி,

''மெல்லிலைச் செல்வ வண்கொடிப்
புல்க வீங்கிளம் தாழ்கமுகின்
மல்லிலை மடல்வாழை ஈன்கனி
சூழ்ந்து மணங் கமழ்ந்து
புல்லிலைத் தேங்கினூடு
கால் உலவும் தண் திருப்புலியூர்''16

(இலைச் செல்வம்—இலையின் வளப்பம்; வண் கொடி—அழகிய கொடி; புல்க—தழுவ; தாள்—அடி; மல்—பெரிய; புல் இலைத்தேங்கு—ஓலைகளையுடைய புல்லாகிய தென்னைமரம்; கால்—காற்று.)

என்று குறிப்பிடுகின்றாள். இந்த இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்த வண்ணம் ''தென் றிசைத் திலதம்புரைக்குட்ட நாட்டுத் திருப்புலி யூருக்குள்'' நுழைகின்றோம்.

நம்மாழ்வார் காலத்தில் இந்த இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்த வண்ணம் ''தென் றிசைத் திலதம்புரைக்குட்டநாட்டுத் திருப்புலி யூருக்குள்'' நுழைகின்றோம்.

நம்மாழ்வார் காலத்தில் இந்தத் திருப்பதி அழகிய நீண்ட மாடங்கள் உயர்ந்து தோன்றுவ தாய் இருந்தது. இதனை ஆழ்வார் ''திகழும் மணி நெடுமாடம் நீடு திருப்புலியூர்'' என்று குறிப்பிடுவர். இன்றும் அந்த ஊரில் சிறியனவும் பெரியனவுமாக உள்ள பல்வேறு மாடமாளிகைகளைக் காணத்தான் செய்கின் றோம். இன்று அந்த ஊரில் அதிகக் கிறித்தவர் கள் வாழ்கின்றனர். ஆனால் அந்தக் காலத்தில் செல்வச் செழிப்புள்ள அந்தணோத்தமர்கள் எண்ணற்றவர்கள் அவ்வூரில் வாழ்ந்து வந்ததாக அறியக்கிடக்கிறது. அவர்கள் யாகங்கள் செய்யும்போது யாக குண்டங்களினின்றும் புகை சென்று விசும்பிலுள்ள உம்பர் உலகத்தை யும் மறைக்குமாம். இதனை ஆழ்வார்,

''மல்லைச் செல்வம்
வடமொழி மறைவாணர் வேள்வியுள்
நெல் அழல் வான்புகை போய்த்
திடவிசும்பில் அமரர் நாட்டை
மறைக்கும் தண்திருப்புலியூர்''

(மல்லைச் செல்வம்—அதிகச் செல்வம்; நெய் அழல்—நெய்யால் எரியும் நெருப்பு; வான்புகை—மிக்க புகை; விசும்பு—ஆகாயம்; அமரர்—தேவர்)

என்று குறிப்பிடுவதனால் அறியலாகும். வட மொழி மறைவாணர்களாகிய இந்த அந்தணர் கள் ஓதும் சாமவேத ஒலி கடல் ஒலிபோல் நிலைபெற்று ஒலித்துக் கொண்டிருக்குமாம். ''விரவார் இசைமறை வேதியர் ஒலி வேலையின் நின்றொலிப்ப'' என்ற பாசுரச் சொற்றொட ரால் இதனை அறிகின்றோம். இந்த எண்ணங்கள் மனத் திடல் அலையிட்ட வண்ணம் திருக்கோயி லுக்கு வருகின்றோம்.

—தொடரும்




வாலி, வன்மைக்கொரு வேலி. உலகத்தையெல்லாம் இராவணன் வென்றான். அவனைத் தனது வாலினாலேயே வாலி வென்றான். இந்த வாலியையும் வென்றவருளரேயெனலாம். அவர் இவனைப் படை கொண்டே வென்றார். இயற்கைப்பலம் கொண்டு வெல்லவில்லை. ஆதலால், வாலி உடல் வலிமைக்கொரு வரம்பாகின்றான். வரம்பு, எல்லை, வேலி, என்பன ஒருபொருட் சொற்கள்.

இத்தகைய வாலியைச் செய்து வரும் கேலியும் வரம்பற்ற பாங்கில் வளர்ந்து வருகின்றது. ''எங்கணும் பெரு வழக்காய் என்றைக்கும் உள்ளதெது'' என இறைவனைச் சுட்டினார் ஒரு பெரியவர். அது போலவே ''எங்கணும், என்றைக்கும், உள்ள வழக்காகத் திகழுகின்றது வாலி வழக்கு. வாலி, வாலால் இராவணனைப் பிணித்தவன். அவன் தனது வாக்கால் மன்னவர்க்கு மன்னனையும் பிணித்த மாவீரனாயினன். வாலி வாக்கின் பிணிப்பிலிருந்து இராமபிரான் இன்னும் வெளிவர முடிந்ததோ இல்லையோ வென்பது ஐயமாகவே உள்ளது. வாலியின் வழக்குரைகள், வாதங்கள், இன்னும் உலகப் பெரு மன்றத்தில் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. இராம பக்தர்கள் தலைமுறைத் தத்துவமாக விடையிறுத்து வருகின்றார்கள். ஆனால், ஒரே ஒரு நாள் எழுப்பிய வாலியின் வினாக்களுக்கு இன்னும் நிறைவான விடைகள் கிடைக்கவில்லை.

ஏன் எனலாம். வள்ளலின் பக்கமாக நின்று வாலி வினாவிற்கு விடை தர முயலும் ஒருவரே, ஒரே மன்றத்திலேயே மற்றொரு காலத்தில் வினா கிளப்புகின்றார். தாமே கிளப்பித் தாமே விடையிறுக்கவும் வருகின்றார். காரணமென்ன? தாம் கூறிவரும் விடை தமக்கே நம்பத் தக்கதாக இல்லை என்பதுதானல்லவா? இந்த வழக்கு ஏனிப்படி வளருகிறது? வாலிக்கு ஒரு கோயிலுமில்லை, அவனை வழிபடுவார் யாவருமில்லை. அவனுக்குப் பக்த பரம்பரையென்று ஒன்றையுமே காணோம். பின்னை இந்த வழக்கியலை வளர்க்கின்றவர்கள் யார்? இராம பக்தர்கள் தான். இப்பெருமக்கள், இராம பக்தர்கள் பட்டியலில் வாலிக்குக் கடைக்கோடியில் கூட இடம் தருகின்றதில்லை. ஆனால் ஒவ்வொருவரும் தங்களுக்கே முதலிடம் வகுத்துக்கொள்ள முற்படுகின்றார்கள். இவர்கள் வாலியை வதைத்தது இராமனாகவும் சில சமயம் கருதுவதில்லை. வாலியைத் தாங்களே வதைத்து வாகை சூடியதாக மார் தட்டுவதும் உண்டு. ஆனால், வாலியை வதைத்தது நேர்மையான செயல் தான் எனக் காரணங்கள் கூற முற்படுவதில் கொள்ளும் ஒற்றுமை, கூறுங் காரணங்களில் இருப்பதில்லை. இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணங் காட்டுகின்றார்கள். அப்படி இதுவரை வந்தவற்றைக் காண்போம். அவை எவ்வளவு தூரம் பொருந்துகின்றனவென்பதையும் சற்று ஆய்வோம்.

**விலங்கு வேட்டை வேந்தற்குரியதே :**

சிலர், வாலி வினாக்களுக்குத் தக்க விடை வான்மீகத்தில் வருகிறது. அது கம்பரில் காணோம் என்கின்றார்கள். அது என்ன என்றால், அரசர்களுக்கு விலங்கு வேட்டை புதியதல்ல, அது முறைகேடானதும் அல்ல. இராமனே அரசருக்கும் அரசன். அவன் ஒரு பொல்லாத மிருகத்தைக் கொன்றான். இதற்குக் கேள்வி என்ன? விடையளிக்க வேண்டிய அவசியந்தான் என்ன? என்று ஒரே சொல்லால் முடித்து விடுகின்றார் வான்மீகர் என்கின்றார்கள். எதற்கும், வளவளவென்று பேசிக் கொண்டு போகாமல், வெட்டெனப் பேசி முடிப்பது அழகாகத்தான் இருக்கின்றது.

ஆனால், வாலியான விலங்கு இம்மன்னனுக்கு என்ன தீங்கிழைத்தது, என்ற கேள்வி வரும். அது, தனது நண்பன் மனைவியைக் கவர்ந்தது, என்னலாம். மனைவி கணவன் என்ற மரபு விலங்கிற்கு இல்லையே. அச்செயல் எப்படி தப்பிதமாகும் என்ற வினாவிற்கு விடை வேண்டும். மேலும், இரு விலங்குகள், இரண்டும் உடன்பிறந்தவை. அவற்றில் ஒன்று, அரசர்க்கரசனுக்கும் நண்பாகும் நற்கதியில் உள்ளது. ஒன்று விலங்கு கதியில் உள்ளது. அதை வேட்டையில் வீழ்த்துவது, இது எப்படிப் பொருந்தும். வாலி, பாற்கடல் கடைந்தவன், வானவருக்கு அமுதளித்தவன், என்றொரு பக்கமும்; வாலி மிருகம்; அவனை அரசப் பெருந்தகை அடித்து வீழ்த்தினர்; என்றொருபக்கமும் இசைத்தால், பெருநூல்களுக்குப் பெருமை குறையுமே, என்ன செய்வது?

**பெருமாள் வாலியையும் வதைத்தார்; சிவனையும் சிறப்பித்தார் :**

வாலியைப் பெருமாள் மறைந்து நின்று கொன்றது ஏன் தெரியுமா? அது, சிவ பெருமானுக்குச் சிறப்புச் செய்வதற்காகத்தான்.

வாலி சிவனிடத்தில் வரம் பெற்றவன்; அவன் தனக்கு எதிர் நிற்பவர் பலத்தில் பாதி தனக்கு வந்துவிடும்படி வரம் பெற்றிருந்தான். பெருமாள் அந்த வரத்தையும்வாலியையும்சேர்த்துத் தமது பாணத்தால் ஒரே அடியாக அழித்து விடுவார். ஆனால், அப்படிச் செய்துவிட்டால், சிவனுக்குப் பெருமை குறைந்துவிடுமே என்ற கிருபையினால்தான் மறைந்து நின்று வென்றார் என்பவர் சிலர். இவர்களை ஒன்று கேட்கலாம். மும்மூர்த்திகளில் சிவனே சிறந்தவன் என்கின்றார்கள் சைவர்கள். திருமாலே சிறந்தவன் என்கின்றார்கள் வைணவப் பெருமக்கள். பிரமன் திருமாலுக்கும் கீழ் நிலையில் உள்ளவனே என்பதை வைணவப் பெருமக்களும் ஒத்துக் கொள்ளுகின்றனர். இங்கே இராவணன் வரம் பெற்றது பிரமனிடத்தில்தான். இராவணன் மானிடர்களைத் தவிர மற்றெல்லோரையும் வெல்ல வரம் பெற்றிருந்தான். அவனை வெல்ல மானிட வடிவெடுத்து வந்தனர் திருமால் என்பதுதான் இராமாயணம். வாலிக்குச் சிவன் தந்த வரத்தை மாற்ற வல்ல திருமால், இராவணனுக்குப் பிரமன் தந்த வரத்தையும் மானிட வடிவு கொள்ளாமலேயே மாற்றி அழித்திருக்கலாமே, பிரமன் வரத்தைச் சிறப்பிக்கத்தான் இப்படி வந்தனரா? என்ற வினாவிற்கும் விடை தர வேண்டும். எந்தத் தெய்வத்தினால் யார் வரம் பெற்றிருந்தாலும், அவ்வரத்திற்கு இடையில் ஏதேனும் இடம் உண்டாவெனத் தேடி அவ்வழியால் வெல்வதுதான் தெய்வ மரபு. அதை விட்டுச் சிவனைக் கௌரவிக்கப் பெருமாள் மறைந்து நின்று தமக்கொரு பழி தேடிக் கொண்டாரென்பது, சிறிதும் சிந்திக்காது செப்பும் சிரிக்கத்தக்க விடையாகும்.

**இராமன் மறைந்திருந்து கொல்லவில்லை:**

சிலர், வாலியின் விலாப்புறங்களிலோ முதுகிலோ இராமபாணம் பாயவில்லை. அது நடு மார்பில் பட்டு முதுகில் ஊடுருவிற்று. மறைந்து நிற்கும் ஒருவன் எய்வது மார்பில் எப்படிப் படும்? மார்பில் பட எய்பவன் எதிர் நின்று தானே எய்ய முடியும்? இதனைச் சற்றும் சிந்திக்காமலே, மறைந்து நின்று கொன்றார் என இத்தனை காலமும் பேசி வந்திருக்கின்றார்களே என்ன அறியாமை, என்ன அநியாயம் என்கின்றார்கள். இது மிகப் பொருத்தமான விடை. இந்தச் சிந்தனை சக்தி மிக்க செல்வங்கள், கம்பரைப் படிக்காவிட்டாலும் அருணாசலக் கவிராயர் இராம நாடகத்தையாவது படித்துப் பேசினால் நன்றாக இருக்கும். கவிராயர் வாலி வாக்காக ''ஏனிந்த மதி குறித்தாய் மறைந்து வாள் எடுத்தென்மேல் ஏன் எறிந்தாய்'' என்கின்றனர். கம்பரோ, தாரை வாக்காக ''ஓயா வாளி ஒளித்து நின்று எய்வான் ஏயா அந்த இராமன் என்றுளான்'' என்கின்றனர். வாலியின் வினாவிற்கு விடையிறுக்க முன்வந்த இலக்குவனார், முன்னர் உனது தம்பி வந்து அடைக்கலம் புகுந்து முறையிட்டான். அவனுக்குப் பெருந்தீங்கு செய்த உன்னை அழித்தொழிப்பேன் என வள்ளல் வாக்களித்தாயிற்று. அப்படி அவனை ஆதரித்து விட்ட அண்ணல், உனக்கும் எதிர் வந்தால் நீயும் அடைக்கலம் என்றால் முன்கொடுத்த அபயம் என்ன ஆவது? அதற்காகத்தான் வள்ளல் மறைந்து நின்று எய்தது'' என உரைத்தனன் என்று கம்பர் கூறுகின்றார். இது வாலி வதை 177. ''முன்பு நின் தம்பி வந்து சரண்புக முறையிலோயைத் தென்புலத்துய்ப்பனென்று செப்பினன்செருவில் நீயும்—அன்பினை உயிருக்காகி அடைக்கலம் யானும் என்றி—என்பது கருதி அண்ணல் மறைந்து நின்று எய்தனன் என்றான்'' என வருகின்றது. அன்றியும் இராமன் சிறப்பியல்புகளை நன்குணர்ந்தவன் வாலி. சுக்கிரீவனொடு போர் செய்ய உறுத்தெழுந்த வாலியை அவன் மனைவியான தாரை தடுத்தனள். அவள், உன் தம்பிக்கு யாரோ இராமனும், அரசனும், அவன் துணை வந்துளனும் என்றனள். வாலி அப்படியா? தருமமே உருவமாக வந்த இராமனையா நீ யாரோ இராமனென்கின்றாய். பாவீ! இனி இப்படிச் சொல்லாதே. இங்கு அவன் வாரான். வருந்தரமுமல்ல என்று கூறிப் போருக்கு வந்தவன் வாலி. அவன் கண்ணெதிரே இராமன் தோன்றியிருந்தால் என்னவாகியிருக்கும்? இராமாயணம் கிட்கிந்தையிலேயே முடிந்திருக்கும். ஏன்? இராமனை வாலி வணங்கிப் போற்றியிருப்பான். இராமன் சுக்ரீவனுக்குஅவன்மனைவியைத் தரச் சொல்ல வாலியும் தந்திருப்பான். வாலி இராமனோடு பேசிக் கொண்டிருக்கும்போதே வாலியின் வால் இலங்கைக்குச் சென்றிருக்கும். அவ்வாலுக்கு அஞ்சும் இராவணன் ''சீதையைத் தலைமேல் தூக்கிக் கொண்டு ஓடோடி வந்திருப்பான். அன்னையைத் தந்து அண்ணல் அடியில் விழுந்து இராவணன் மன்னிப்புக் கேட்டிருப்பான். இராவணன் மடியமாட்டான், இராமாயணம் முடிந்திருக்கும். எதிர் நின்றே எய்தனரென்னும் மென்மொழியார், இவ்வளவு அசைப்பரும் வன்மொழிகளும் வருமென எதிர்பார்த்து இசைக்க வேண்டும்.

நல்லது. மறைந்து மார்பில் எய்வது எப்படி? என்ற அவர்களது வினாவிற்கு விடை எங்கேயெனலாம். வாலியைத் தாரை தடுத்தனள், அவளுக்கு அப்படி இராமன் வாரான் எனக் கூறி வாலி போர்க்களம் புகுந்தனன். வாலியின் போர்க்களம் முக்கோண வடிவானது. ஒரு கோணத்தில் வாலியின் கோட்டை வாயில், மற்றொரு கோணத்தில், அநுமனுதிய வானரப் படைஞர்கள் கூட்டம். மற்றொரு கோணம் இராம இலக்குவர் இருக்கும் சோலை. இவரிருவரிருக்குமிடத்திலிருந்தே சுக்கிரீவன் வந்து வாலியை அறை கூவினான். வாலியும் வெளிப்பட்டனன். போருந் தொடங்கினர். சிறிது நேரம் நடந்தது போர். அதற்குள் அடி தாங்காமல் வாலிக்குப் பயந்து சுக்கிரீவன் ஓடினான். ஓடிச் சோலையிற் புகுந்து சிறிது நேரத்திற்கு எல்லாம், அச்சம் நீங்கி ஆற்றல் கொண்டு திரும்பினான் சுக்கிரீவன். ஈதென்ன வியப்பு! ஆருங் காணாத மூலைக்கு ஓடினான். தளர்ந்து சென்றவன் கிளர்ந்து வருகின்றனன், அவனது படைஞர் அங்கில்லை. அதோ காண்கின்றார்கள். பின்னை ஏன் அங்குச் சென்றான். யாரால் தளர்ச்சி நீங்கினான், என ஐயமுற்றனன் வாலி. ''அயிர்த்த சிந்தையன் அந்தகன் குலை குலைந் தனுங்கச் செயிர்த்து நோக்கினன்''. இது, வாலி வதை 54-ல் வருகிறது. அந்தகனும் அஞ்ச, அப்படி வாலி விழித்த நோக்கிற்கு

யாவரும் எதிர்ப்படவில்லை. ஆனால் வாலியின் கருத்திற்கு ஒன்று புலப்பட்டது. அது யாது எனில், அங்கே தாரை யாரோ சுக்கிரீவனுக்குத் துணை வந்திருப்பதாகச் சொல்லினள். இடி பட்ட இவனும் யாரையும் காணாத மூலையில் ஓடினான். முரண் கொண்டு திரும்புகின்றான். ஆகவே, அங்கு யாரோ மறைந்திருக்க வேண்டும் என்பதுதான் வாலி கருத்தில் தோன்ற நிற்கும் ஒன்று. அதனால்தான் அயிர்த்த சிந்தையன் ஆனான் வாலி. அயிர்ப்பு—சந்தேகம்.

வாலி, இனி இப்போரை நீளவிடக்கூடாது என எண்ணினான். அவன் சுக்கிரீவனுடைய கழுத்திலும் இடுப்பிலுமாகக் கைகொடுத்து உயரத் தூக்கினான். ஏன்? ஒரே அடியாக நிலத்தில் அடித்து ஒழித்துவிடுவது என எண்ணினான் அவன். அப்படி வாலி சுக்கிரீவன் உடம்பினை உயர்த்தும் பொழுது அவ்வுடலம் வாலியின் கண்களை மறைத்தது. அந்த நேரத்தையும் செயலையும் தனக்குத் தக்கனவாகக் கொண்டனன் இராமன். வாலியின் பார்வையிலும் படாமல், தனது பலத்தில் பாதியையும் இழக்காமல், வாலியின் மார்பகமும் வடிவாகத் தோன்றத் தடையேதுமின்றித் தனது வாளியும் வாலி மார்பில் ஊன்ற எல்லாம் ஒத்து வந்தது. மறைவினின்றும் வெளிப்பட்டு, கணை விட்டு, மறுபடி மறைவுற்றும் நின்றனன் இராமன். ''எடுத்துப் பாரிடை எற்றுதும் என்றுதன் இளவல்—கடித் தடத்திலும் கழுத்திலும் தன் இரு கரங்கள்—மடுத்து மீக்கொண்ட வாலிமேல் கோல் ஒன்று வாங்கித்—தொடுத்து நாணொடும் தோளிறுத் திராகவன் கரந்தான்''. மீக்கொளல்—மேலே தூக்குதல். இதுதான் மறைந்து நிற்கவும் மார்பில் எய்யவும் கிடைத்த வழி, என்பர் சிலர்.

**வாலி வதை ஒரு தேவ நாடகம்:**

சிலர், வாலி வதையல்ல. அது, வாலியின் மோட்சமே. அதன் தத்துவம் சாமானியர்களுக்குத் தெரியாது. தேவர்கள் பலர் கூடி இராவண வதம் என்னும் நாடகத்தை நடத்தப் பூலோகத்திற்கு வந்தார்கள். அவர்களில் வாலியும் ஒருவன். இராவணனை வதைக்க வந்த அவன், தான் வந்த செயலையே மறந்து தன் தம்பியையே வதைக்க முற்பட்டனன். அதையறிந்து அக்குழுவிற்குத் தலைவனான இராமன், இப்படித் தப்பிதமாக ஆடிப் பெயரைக் கெடுக்காதேயென ஒரு அறை அறைந்துதிரைக்குள்ளே தள்ளி விட்டனன். தன்னைஅடித்தது யாரெனத் தெரியாமல் வாலி திகைத்தனன். இராமன் அவனுக்குத் தனது திருமால் வடிவத்தைக் காட்டியருளினான். உண்மையை உணர்ந்து வாலி தனது குற்றத்திற்கு- மன்னிப்புக் கேட்டு வணங்கினான். திருமால் அவனுக்கு மோட்சம் கொடுத்தார். வாலி பெறல் அரும் வீடுபேறு பெற்றனன். இதற்குக் கம்பர் கழறும்சான்றும் உண்டு. வாலி வதைப் படலம் 75-ல்:

''கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து
மண்ணுற்று வரிவில் ஏந்தி வருவதே போலும் மாலைப்
புண்ணுற்ற தனைய சோரிப் பொறியொடும்
பொடிப்ப நோக்கி
எண்ணுற்றாய் என்செய்தாய் என்று ஏசுவான்
இயம்ப லுற்றான்''

எனவரும் பாடலைப் பாருங்கள் என இங்கிதமாக இசைக்கின்றார்கள். இத்தனைபேரிலும், கம்பரைத் தொட்டு வாலி வழக்கிற்கு வழி காண வந்த இவர் பெருந்தன்மை பாராட்டற்குரியதே. ஆனால், இவர் கடைப்பிடித்த பாடலால், இவர்களது திருமால் காட்சி நிலையாவதற்கு ஏதுவில்லை. இவர்கள் கருத்தினைச் சிறிதே ஆராய்வோம்.

இங்கே, ''கண்ணுற்றான் வாலி நீலக் கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்று வரிவில் ஏந்தி வருவதே போலும் மாலை'' என்ற இந்தத் தொடரைக் கொண்டே திருமாலாகத் தரிசனம் தந்தார் வாலிக்கு இராமன் என்பார்களானால், நாமும் இராமன் இராவணனுக்கும்திருமாலாகக் காட்சி தந்தான் எனக் கூறலாம். அது எங்கே என்கின்றீர்களா?

இராமன் இலங்கையை ஒரு குன்றின் மேல் ஏறிப் பார்க்கின்றான். அச்செயலைத் தனது தூதுவரால் இராவணன் தெரிந்து கொண்டான். அவனும் தனது அரண்மனைச் சிகரியின் மேல் ஏறி இராமனது சேனைகளையும் தலைவர்களையும் காண்கின்றான். (இராவணன் தானை காண் படலம் 17):

''தோரணத்தின் மணி வாயின்மிசைச்சூல்
நீரணைத்த முகிலாம் என நின்றான்
ஆரணத்தை அரியை மறைதேடும்
காரணத்தை நிமிர்கண்கொடுகண்டான்.''

அங்கே வாலி கண்ணுற்றான் என்று எளிதாகச் சொல்லிய கம்பர், இங்கே, இராவணன் நிமிர் கண்கொடு கண்டான் என்றார். நிமிர்தல்—உயர்தல். இங்கே, அது அளவால் உயர்ந்த கண் என பொருள் தரும். அதாவது யாவருக்கும் உள்ள இரண்டே கண்ணினன் அல்லன் இராவணன். இருபது கண்களுடையவன் அவன். அந்த இருபது கண்களினாலும் இராவணன் இராமனை நன்றாகக் கண்டனன் என்பதுதான் பொருள். இதை விட்டு 'அரியை, மறைதேடும் காரணத்தை, நிமிர் கண்கொடு கண்டான்' என வருகிறது. ஆதலால் இராவணனுக்கும் இராமன் திருமாலாகக் காட்சி கொடுத்து விட்டார் என்று கூறி விடலாமா? அரி திருமால் என்றெல்லாம் இராமாயணத்தில் இராமனைச் சுட்டுகின்ற இடங்கள் பற்பல. இவையெல்லாம் இராமனுக்குப் பரியாயப் பெயர்கள் எனத்தான் கொண்டு வருகின்றார்கள். முறையும் அதுதான். அதைவிட்டு ஏதோ கண்டு கொண்டதைப்போல வாலிக்கு இராமன் இரகசியமாகத் திருமால் காட்சி தந்தார் என்றால், ஏன் தந்தார்? அப்படித் தந்ததற்குக் காரணம் என்ன? என்ற கேள்விகள் எழத்தான் செய்யும்.

ஒருவனைத் தம்பியின் மனைவியைக் கவர்ந்த கொடியவன் என்று கொன்று, வீழ்த்தினான் இராமன். விழுந்தவன் எழுந்திருப்பதற்குள் அவனுக்குத் திருமாலாகக் காட்சி தந்தனன் என்றால், அவ்வளவு கொடியவன் அதற்குள் எப்படி மோட்சம் பெறக்கூடிய நல்லவனாகி விட்டனன்? அவன் எழுந்து தன் குற்றத்தை உணர்ந்து வருந்தினானா? மன்னிப்புத்தான் கேட்டனனா? அல்லது மோட்சமும் காட்சியும் அவ்வளவு மலிவாகிவிட்டன என்று பொருளா?

சான்று காணும் 75-வது பாடலுக்கு முன் பின் உள்ள பாடல்கள் இக்கருத்திற்கு ஒத்து வரவும் காணேமே. இதற்கு முதற் பாடலான 74-வது பாடல்: ''இறை திறம்பினனல் என்னே இழிந்துளோர் செய்கை யென்னின்—முறை திறம்பினனல் என்று மொழிகின்ற முகத்தான் முன்னர்—மறை திறம்பாத வாய்மை மன்னர்க்கு மனுவிற் சொல்லும்—துறை திறம்பாமல் காக்கத் தோன்றினன் வந்து தோன்ற''.

இதில் தோன்றினன் என்ற சொல் ஒன்றே எங்ஙனம் திருமாலாகத் தோன்றினன் என்ற பொருளேத் தரும். பின்னே மாலேக் கண்ணுற்ருன் என்பதற்கேற்ப எங்கும் காட்சி தருவது போல சங்கோ சக்கரமோ வயின தேவனுகிய வாகனமோ கொண்டு தோன்றியதாக எதுவும் இல்லே. அன்றி 76-வதாக வரும் பாடலிலோ திருமால் காட்சி தெவிட்டாத தெள்ளமுதம் உண்ட ஒரு பரம பக்தன் வாக்காக ஒன்றும் காணேம். அது குல தருமத்திற்காகவும் சத்தியத்திற்காகவும் உயிரைக் கொடுத்தனன் தயரதன். அவனுக்கு மகனு நீ? உத்தமன் பரதன். அவனுக்கு அண்ணனு நீ? என மிகக் கடுஞ்சொற்கள் அமைந்தனவாக வருகின்றது (76)

'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே நீ? பரதன்முன் தோன்றினுயே?
தீமைதான் பிறரைக்காத்துத் தான் செய்தால் தீங்கு அன்ருமோ
தாய்மையும் நட்பும் அன்றித் தருமமும் தழுவி நின்ருேய்'',

என வருகிறது. பின்னரும் தொடர்ந்து வரும் ஒரு 50 பாடல்கள் வரை கடுமையான விவகாரமாகவே வருகின்றதே, இவையெல்லாம் திருமால் காட்சி கண்டவன் தேனெழுகத் தந்த தோத்திரங்கள் தானு? எனவும் எண்ண வருகின்றது.

இராமாயணம், பாரதம் இரண்டினும் வரும் அவதார மூர்த்திகளான இராம கிருட்டினர்கள்பால் மாறுபட்ட இருவிதச் செயல்களேக் காணுகின்ருேம். கண்ணன், தோன்றிய பொழுதே நாற்புயமுள்ள தெய்வத் திருமேனியைக் காட்டிப் பெற்ருேர் பயந்தீர்த்த பெம்மான். மற்றும் பற்பல இடங்களில் அவர் தமது ப்ராங்கான தெய்வ வடிவம் காட்டி மகிழ்வித்த சரிதங்களேக் காணுகின்ருேம். இராமாவதாரம் அப்படியல்ல.

கம்பர் ஒவ்வொரு கதாபாத்திரங்களின் வாயிலாகவும் இராமன் அவதார மூர்த்தியே என்பதனை வெவ்வேறு காலங்களில் வைத்துக் காட்டுகின்ருர். ஆனல், தான் ஒரு அவதார மூர்த்திதான் என்பதனை இராமபிரான் ஒப்புக் கொண்டதாக வரும் இடம் ஒன்று கூட இல்லே. இராமாவதாரம் மக்களோடு மக்களாக நின்று வாழ்வையும் தாழ்வையும் ஊரொக்க அநுபவித்துக் காட்டிய அவதாரம் என்பார்கள். நாகபாசத் துன்பம் தீர்க்கவந்த தோன்றல் கருடதேவனே, ''நீர் யாரையா'' வெனக் கேட்கின்ருன் வள்ளலென்பார் :

''ஐய நீயாரை எங்கள் அருந்தவப் பயனல் வந்து எய்தினே உயிரும் வாழ்வும் ஈந்தனே யெம்மனேரால் கையுறை கோடற்கு ஒத்த காட்சியை அல்லே மீட்சி செய்திறம் இலேயால் என்ருன் தேவர்க்கும் தெரிக்கிலாதான்''

என நாகபாசப் படலத்தில் வருகிறது. இப்படித் துயர் களேய வந்த கருடனுக்கே தனது காட்சியை அளிக்காது மறைந்து நின்று, நீ யாரையா எனக் கேட்கும் இராமன் வாலிக்கு முன்னின்ருன் திருமாலாக என்ருல் எப்படிப் பொருந்தும்? மேலும் வலிய அவனுக்கு மால் வடிவம் காட்டியது வாலியின் பொருட்டா அல்லது தம் பொருட்டா என்ற கேள்வியும் எழுகின்றது. வாலிக்காக என்ருல் கெட்டவன் அவ்வளவு விரைவில் நல்லவனுகி விட்டனன் எனத் தக்க செயலொன்றும் இடையில் வரவில்லே. அல்லது தம் பொருட்டே என்ருல் இராமனது பெருமை குறையும். ஏன் எனில், ஒரு சிறுவன் அயலிடத்தில் சென்று ஒரு தீங்கான செயலேச் செய்து அவர்களால் வருத்தமுற நேருங்கால் அவன் தனது குடிப் பெருமையைக் காட்டியே மீண்டு வர வழி தேடுவான். அதுபோல இராமன் செயலுக்கு இராமனுகவே நின்று தீர்வு காண முடியாமல் தமது பரமபத நிலேயைக் காட்டித் தான் மீள வேண்டி வருகிறது என்ருல், வாலி கூறும் குறைபாடுகள் மேலும் வலியுற்றனவாகி விடும். அன்றியும் தமது திருவடி பட்டு வீடு சேர்ந்த விராதன்

''நீயாதி பரம்பொருளும் நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும் உன் அடியவே அயலில்லேத்
தீயாரின் ஒளித்தியால் வெளிநின்ருல் தீங்குண்டோ
வீயாத பெருமாயை விளேயாட்டும் வேண்டுமோ''

எனத் திருமாலாகவே அறிந்து போற்றுகின்ருன். அவனுக்குக் காட்சியளிக்கவில்லே. அடுத்துக் கண்ட பெருமாதவர் சரபங்கரும் இராமனுகவே கண்டார். கரை சேர்ந்தார். அவருக்கும் இந்தக் காட்சியில்லே. கவந்தன் காந்தருவனுகி நின்று உண்மைத் தத்துவமான பாமாலேகளேப்பாடித்துதித்தனன். அவன்,

''காண்பார்க்குங் காணப்படுபொருட்கும் கண்ணுகி
மாண்பால் உலகனைத்தும் வயிற்ருெளித்து வாங்குதியால்
பூண்பார்போல் நிற்றியால் யாதொன்றும் பூணுதாய் நீ
ஆண்பாலோ பெண்பாலோ அப்பாலோ எப்பாலோ

என்றெல்லாம் பாடிப் பரவினன். அவனுக்கும் இந்தப் பெருங் காட்சியில்லே. இராமாவதாரம் வரப்போகிறது என்ற தொன்னுள் முதலே தீங்கனிகளேச் சேர்த்து வைத்திருந்து விருந்திட்டு அருந்தச் செய்த பெருந்தவச் சபரிக்கும் இப்பெருங்காட்சி எய்தியதாகவில்லே. என்னே பெண்ணேக் கவர்ந்து பேரபசாரம் செய்த வாலிக்குக் கண்ணேக் கவருமாறு கலிவரதன் தந்த காட்சி! மேற்கண்ட காரணங்களால் தேவ நாடகம் தெளிவானதாகத் தெரியவில்லே. இராவணன், திருமாலின் வாயிற் காவலனுக நின்ற நிலேமாறி இரண்டு பிறவியெடுத்து நிற்பவன். வாலியோ பாற்கடல் கடைந்த திருமா

லோடு ஒன்றுபட்டுப் பணி செய்த வடிவத்துடனே உள்ளவன். அவன் இராமனைத் திருமாலேயென முன்னமே தெளிந்து தாரைக்குச் சொல்லியவன். அதனால் திருமால் வடிவம் அவனுக்குப் புதியது ஒன்றல்ல. இராமன் நிலையையே அவன் மேலாகக் கருதியிருப்பவன். திருமால் காட்சிக்காக வாலி தொடுத்த வழக்கு விடைபெற்று வீறடங்கி விட ஏதுவுமில்லையென விடுமோமாக.

**கம்பர் கவிதையைப் போற்றுவோம், கதையை விரும்புவோம்:**

இப்படி ஒரு வாதம். இதற்கு விடை கூற உண்மையில் அச்சமுறுகின்றேன். ஏனெனில் நன்கு கற்றவர்களே சில சமயம் இப்படிப் பேசுகின்றார்கள். இது கம்பரைப் பெருமைப்படுத்தியதாகாது. இராமன் வேறு கம்பர் வேறாகக் காணவே இராம காதையின் பாக்கள் இடந்தருவதில்லை. கூலிக்கு இராமனைக் கொண்டாடியவரல்லர் கம்பர். பரமபதம் பாலிக்க இராமனையேத்திய பக்தரவர். இந்தக் காலத்திலும் மேடைப்பேச்சாளர்களில் ஒருவர்க்குஒருவரைப் பிடிக்காதவர்கள் உண்டு. அவர்கள், தமக்குப் பிடிக்காதவர்களை நேரில் தாக்குவதில்லை. பிடிக்காதவர்கள் எடுத்துக் கொண்ட பொருளையே தாக்கிப் பேசுவார்கள். கம்பர் தேடியெடுத்தகதையைத் தகர்த்துவிட்டுக் கம்பரைப் போற்றுவது என்பது எப்படி நாகரிகமாகும்?

மக்கள் உணவை உண்ணுகிறார்கள். தண்ணீரைப் பருகுகின்றார்கள். மூச்சு விடுகின்றார்கள். வாங்குகின்றார்கள். இம்மூன்று செயலாலுமே நிலத்தில் நீடு வாழ்கின்றார்கள். இவற்றுள் தாமறிந்து செய்யும் செயல்கள் உண்பதும் பருகுவதும். அறியாமலே செய்யும் செயல் சுவாசித்தல். இவற்றைப் போலவே, உலகத்தில் மக்கள் கருத்தறிந்து கற்ற நூல்கள் மற்றவைகளெல்லாம். பாரதமும், இராமாயணமும் அப்படிப் பட்டவையல்ல. அவை தாய்ப்பாலோடு சேர்ந்து மக்கள் உள்ளத்தில் அவ்வுள்ளம் அறியாமலே புகுந்து உறைந்து நிற்கும் பெருங் கதைகளாகும். பேச்சாளர் எனப் பெயரெடுக்கும்போதே பாரத இராமாயணத்தைப் புகழ வேண்டும் அல்லது இகழ வேண்டும். இப்பெரு நூல்கள் தம்மைப் புகழுகின்றவர்களுக்குச் செய்யும் வாழ்வைவிடஇகழுகின்றவர்களுக்குப் பெருஞ் சிறப்பைச் செய்து விடுகின்றன. கலியாணங்களில் அழைக்காமல் வருபவர் யாவருமிலர். தெருச் சண்டைகளுக்கு அழைத்து வருபவர் யாவருமிலர். ஆனால், அழைத்ததைவிட அழையாமைக்குத்தான் அதிக கூட்டம். காவியங்களைப் புகழுகின்றவர்கள் கடின உழைப்பினர்களாக இருக்க வேண்டும். இகழுகின்றவர்கள் இங்கொன்று அங்கொன்று படித்தால் போதும். புகழ்வாருக்கு ஊதியம் குறைவு, இகழ்வாருக்கு ஊதியம் நிறைவு. இப்படி காய்தல்உவத்தலின்றிப், பேச்சாளரைக் காக்கும் நூல்கள் பாரத, இராமாயணங்கள்.

இக் கதாபாத்திரங்கள் சில சமயங்களில் சிறு சிக்கல்களில் அகப்பட்டு அமுங்குவதும் உண்டு. அக்காலங்களிலெல்லாம் உலக மக்களில் தக்கவர்கள் தகும் என்று நம்பும் வண்ணம், சிக்கல்களிலிருந்து தப்பித் தலையெடுப்பதே கதாபாத்திரங்களின் கண்ணியமாகக் கருதப் படுகின்றது. இந் நெருக்கடியான செயல்களில் கவிகள் தாம் அறமுடையாரென மெச்சும் கதாபாத்திரங்கள் பக்கம் சாய்ந்து சிலவற்றை மூடி மறைக்க முற்படுவதும் உண்மைதான். சமயப் பற்றுள்ள நூல்களில் இது சற்றுத் தலைகாட்டுவதும் உண்டு. ஆனால் பொது நூல்களாகிய இராமாயண பாரதங்களில் அப்படியில்லை. உள்ளதை ஒளிவு மறைவின்றி உரைத்து, அக் கடுஞ் சூழ்நிலையில் தமது கதாநாயகன் எப்படிக் கரை கண்டானென்பதனை வடித்து எடுத்துக் கொடுத்துவிடும் மதுகை சார்ந்தவர் நமது கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர்.

ஆனால்; கம்பரில், மிக நுண்ணிய இடங்களில் ஒன்றிரண்டு சொற்களில் இவ்வகை அச்சாணிகள் இருக்கின்றன. அவற்றைத் தேடிப் பிடிக்க வேண்டும். அதைவிட்டு, கதாபாத்திரங்களைக் குறை களைந்து பெருமை படுத்துவதில் நாம் ஆற்றலுள்ளவர்கள், கம்பரைவிட அக் கறை உள்ளவர்கள் என நம்மை நாமே மதித்துக் கொண்டு நமக்குக் கைவரும் யுக்தி வாதங்களில் இறங்கினால், அறிஞர்கள் ஒப்பும் வண்ணம் அமைத்துக் காட்ட முடியாது. அது முறையுமல்ல. கம்பர் ஒரு இடத்தில்இராமனைச் சிறந்த மனிதர் என்பார். ஒரு இடத்தில் அவன் தேவதேவன் என்பார். இந்த இடங்களை நாம் மாற்றிப் பார்த்தால் உலகத்திற்கு அந்நூலால் பயன் ஒன்றும் கிடைக்காது; அதற்காகத்தான் அவர் அப்படிக் கூறியுள்ளார் என்பதனை நன்கு உணரலாம். இராமன் இலக்குவன் கொண்ட கோபத்தைத் தணிக்க முற்படுகின்றான். அவன் ''தம்பீ! உப்பு நெய்தல் நிலத்தில் விளையும். அது மருத நிலத்தில் விளையாது. கரும்பு, மருத நிலத்தில் விளையும். அது நெய்தல் நிலத்தில் விளையாது. அவற்றைப் போலவே, தீய உள்ளத்தில் அமைதி பிறக்காது. நல்ல உள்ளத்தில் வெகுளி பிறக்காது. உனது உள்ளம் நல்ல உள்ளம். இதில் கரும்பு போன்ற சாந்தம் பிறப்பது வழக்கம். இன்று வேண்டாத அளவு உப்பையொத்த கோபம் பிறந்துளதே ஏன்?'' என்று கேட்டனன் இராமன். ''விளையாத நிலத்தில் இது எங்ஙன் விளைந்தது என்றான். இலக்குவன், நான் ஆண்மையுள்ள அரசிளஞ் செல்வன். எனக்கு வீர உணர்வு உண்டு. வீர எழுச்சிக்குக் கோபம் அடிப்படை. ஆதலால் யான் கோபத்தை வேண்டுமென்றே கொண்டுளேன். இக்கடுங் காலத்தில் அன்றி எப்பொழுது தான் வீரத்தையும் கோபத்தையும் மேற்கொள்ளுவது. நீங்களே சொல்லுங்கள்'' என்றனன் இலக்குவன். ''யாண்டோ அடியேன் சினம் ஏற்பது'' என்றான். அண்ணல், யார் மேல் கோபம் என்றான். இலக்குவன் நினது பட்டத்தைக் கலைத்தார் மேல் கோபம் என்றனன். இராமன் அது வினையின் செயல் என்றனன். இலக்குவன் இதோ ''வினைக்கும் வினையாகும் என் விற் செயல் காண்டியென்றான்.''

இடுக்கணுக்கு இடுக்கண் படாத இந்த வீரசிங்கம் அடங்க வேண்டும். அச்செயல்தான் மேற்கொண்டு வெற்றி பெற வேண்டும். இங்கு

இராமன் என்ன செய்தன்ன்? தம்பீ என்னை நாளும் நல்லுரைகளை ஊட்டி ஊட்டி வளர்த்த வர் தந்தை தசரதனர். அவருரையைக் கடப் பதைத் தவிர எனக்கு இழி செயல் வேறு கிடையாது. இது போலவே என் சொல்லைத் தட்டுவதைத் தவிர உனக்கு இழி செயல் ஏதே னும் உளதோ, இசை என்றனன். இதற்கு வேறு விடையின்றி நின்ருன் இலக்குவன். அவனது வெகுளி துக்கமாக மாறிற்று. கண் ணெரி தண்ணீராக மாறிற்று. இந்த இடத்தில் இராமனுக்கு இந்தக் காலத்திற்கேற்ற உணர்வு எப்படி வந்தது என்பார். இராமன் வடமொழிக் கடலும் தமிழ் மொழிக் கடலும் கரை கண்ட வன். அதனல் அவன் அறிவு கற்றனைத்து ஊறிக் கரைபுரண்ட அறிவு என்றனர்.

''நன்சொற்கள்தந்து என்னை நாளுமவளர்த்த
தந்தை
தன்சொற் கடந்து அரசாள்வது எனக்குத் தக்கது
அன்ருல்
என்சொற் கடந்தால் உனக்கு யாதுளது ஈனம்
என்ருன்
தென்சொற்கடந்தான வட சொற்கடற்கு எல்லை
தேர்ந்தான்.'

இங்கே இராமனைத் தேவன், அவன் இலக்குவன் கோபத்தை மாற்றிவிட்டான் என்று கூறவில்லை. அவன் அனைத்தும் கற்றவன்; அதற்கேற்றஅறிவு நுட்பமும் உள்ளவன்; தீராக் கோபத்தைச் சிறு வரையில் தீர்த்துவிட்டான் என்றனர் கம்பர். பார்த்தீர்களா? நீங்களும் படியுங்கள். எதை யும் அடக்கி ஆளும் அறிவைப் பெறுவீர்கள் என மக்களுக்குக்கதையைச் சொல்லிப் பராக்குக் காட்டி ஊட்டுகின்ருர் அவர். அவன் தேவன் என்ருல் பயன் இல்லை இங்கு.

அண்ணல் மரவுரி தரித்துக் காட்டிற்குப் புறப்பட்டு விட்டான். தடுப்பார் யாவருமில்லை. தாய்ச்சொல், வீரன் நய மொழிகளின் முன்னே எடுபடவில்லை. வந்தார் வதிட்டர். இவன் எப்படிச் சொன்னுல் தட்டாமல் நிற்பான் என நீடு நினைத்தார்; பேராசிரியர் வதிட்டர். அவர், ஆண்டகையே நீ காட்டில் அடி வைக்கும் நேரம் மன்னவன் தேவலோக மேட்டில் அடி வைப் பான் போலிருக்கிறதே, என்ன செய்வதப்பா என்றனர். இராமன், அரசன் இறந்தால் இறக் கட்டும், எனக் கூற வேண்டும். அல்லது, தந்தையை விட்டு எப்படிப் பிரிவேன்? மரணச் சூழலா? இதோ நின்றுவிட்டேன் என முடிவு கொள்ள வேண்டும். கரை கண்ட கல்விமானு கிய வதிட்டர் இவ்வளவு பெரிய முட்டுக்கட் டையைக் குறுக்கே இட்டு விட்டார். இராம னுகிய பெரிய தேர் இதை விட்டு எப்படி அப் புறம் அசையும் என எண்ணினர் அவர். ஆனல், அண்ணலுக்கு அப்பெரிய முட்டுக்கட்டை ஒரு சிறிய துரும்பாகத் தெரிந்தது. அதனை மெல் லென எடுத்து அப்புறமிட்டுப் புறப்படலானுன் ஐயன். இராமன் என்ன சொல்லினன். ஐயனே எனது தந்தையின் கட்டளையைத் தலை மேற் கொண்டு நடப்பது எனது கடன். அவ னது இடரை நீக்குதல் உங்களுக்குள்ள கடன். இத்தருமம் தாங்களே என்க்குக் கற்பித்த அற நூற்களிலுள்ளவைதான். யான் ஏகுகின்றேன். நீங்கள் காத்தருளுங்கள் எனச் சொல்லிப் புறப்படலாயினர். இவன் யார், பாம்பணைப் பள்ளியை விட்டு அயோத்திக்கு வந்த அமலன் என்கின்ருர் கம்பர்.

''அன்னவன் பணிதனை யேந்திஆற்றுதல்—
என்னது கடன் அவன் இடரை நீக்குதல்—
நின்னது கடன் இது நெறியும் என்றனன் —
பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினுன்.'' அங்கே இராமனைத் தென் சொற் கடந்தான் வடசொற் கடற்கு எல்லை தேர்ந்தான் என்றனரே, அதை இங்கே வைத்திருந்தால் இராமன் கற்றவன் இவனைத் தடுக்க முயன்ற வதிட்டர் கல்லாத வன் என்று ஆகிவிடும். அப்படிக் கூறுவதால் பயனும் இல்லை. வதிட்டன் எதிர் நிற்கும் இராமன் தோற்றத்திலேயே ஈடுபட்டு இவன் நமது மாணவன் இவனைக் கல்வியாற்றலால் கட்டுப்படுத்தி விடலாமெனஎண்ணினன்பாவம். முனிவன் இராமன் பூர்வீகத்தைத் தெரிந்திருந் தும் அதை எண்ணிப் பார்க்காமல் ஏமாந்தனன் என்கின்ருர், கம்பர். வதிட்டன் பிரம்ம புத் திரன். பிரமன், திருமாலின் திருமகன். எனவே எதிர்நிற்பவன் தனக்குப் பாட்டன், நாம் அவனுக்குப் பேரன். அவன் அநுபவத்தை நாமெப்படி வெல்லுவது எனக் கருதாது கவன் றனன் என்றனர் கம்பர். இங்கே மற்றவர்கள் கற்றவர்கட்கு அடங்க வேண்டும். கற்றவரும் தெய்வத்திற்கு அடங்கித்தான் ஆக வேண்டும் என்ற தேற்றப் பொருள் கிடைக்கின்றதல்லவா? இது கம்பர் வழி.

இனி நாம், வாலி வழக்கை வடித்தெடுக்க, முதலில் வாலி, சுக்ரீவன் பண்புகளைப் பார்க்க வேண்டும். இரண்டாவது, சீதாதேவியார், உருமை இருவரது ஒழுக்கங்களையும் உற்று நோக்க வேண்டும். ஏனெனில், களவின் கடுமை களவாடிய பொருள்களின் தரத்திற்கேற்ற அளவாக மாறுகின்றது. வழியிற் கிடந்த பொருளைக் கண்டெடுத்துக் கொண்டு போன வனையும், கன்னமிட்டுக் களவு செய்தவனையும் ஒன்ருக மதிப்பதில்லை. இராவணனையும், வாலி யையும் பெண் திருடிகளாகப் பேசுகின்ருர்கள். அதிலும் இராவணனைத் தூதனுப்பிக் கேட்டுப் பார்த்துத் தண்டிக்கின்ருர்கள். வாலியைக் கேள்வி முறைக்கும் அப்பாற்பட்ட தண்டனைக்கு உள்ளாக்குகின்ருர்கள். ஆதலால் இவர்கள் இருவரும் களவு செய்ய ஏதுவாக இருந்த இரு நங்கை நல்லார் தரங்களையும் சற்றே ஆய வேண்டும்.

மூன்ருவதாக, இப்பெருஞ் செயலில் பெரும் பங்கெடுத்துக் கொண்ட அநுமனைப் பற்றியும் பார்க்க வேண்டும். அநுமன் வாலி வதைக் காலத்தில் இருந்த நிலை என்ன? இராம னுக்குத் தொண்டனுகவா, சுக்ரீவனுக்கு அமைச்சனுகவா? அன்றி அநுமன் ஆர்வம் எதில் அதிகமாக இருந்தது? அநுமன் நிலை முன்பின் மாற்றங்களுக்கு உள்ளாயினவா? இளமை முதல் என்றுமே ஒரே நிலைதானு என்பதும் தெரிய வேண்டும்.

நான்காவதாக, பிறந்த நாள் முதல் வள் ளலைப் பிரியாதிருக்கும் பெருந்தகை, இலக்குவ ஞர் நிலையையும் நினைவு கூர வேண்டும். வாலி

திறத்தில் அவர் எவ்வண்ணம் ஈடுபட்டிருந்தார்; எடையிடும் தூக்கின் முனை தப்பிச் சாய்ந்தாலும் இலக்குவன் நோக்கின் முனை நடுநிலை மாறாதே; அவருளப் பாங்கு எப்பக்கம் சாய்ந்திருந்தது என்பதே தேற்றத்திற்குரிய செய்தியாகும்.

ஐந்தாவதாக, வாலி வதைக்கு முன்னும் பின்னும், வாலியும் வாலியின் குடும்பத்தினரும் இராமபிரானை எப்படி மதித்து வந்தார்கள்? வள்ளலின் மனம் அக் குடும்பத்தினரை எப்படி மதித்து வந்துள்ளது என்பதனையும் காண வேண்டும். இவ்வைந்து வகை ஆய்வுகளும் வாலி வழக்கியலுண்மையைப் படம் பிடித்துக் கண்முன் காட்டி விடவல்லவை எனக் கருது கின்றேன்.

[ தமிழுலகிலும், சமய உலகிலும், முதுபெரும் புலவர்-முத்தமிழ் வள்ளல்-விரிவுரை வித்தகர் திரு. புரிசை. சு. **முருகேச முதலியார்**, அவர்களை அறியாதவர்கள் எவரும் இரார். வில்லிபாரதம்-கம்பராமாயணம்-கந்தபுராணம்-பெரிய புராணம் முதலிய சமய இலக்கியங்களில், எல்லையற்ற புலமையும், இணையற்ற சொல்வன்மையும் வாய்ந்து, சமயச் சொற்பொழிவுத் துறையில் பெருமூப்பர் (ஜாம்பவான், DOYEN) என விளங்கி வரும் அப்பெருந்தகையாரின் அருமை பெருமைகள் அளப்பரியன. தமிழ்த்தென்றல் **திரு. வி. கல்யாண சுந்தரனார்**, போன்ற பல தமிழ்ப் பெருஞ்சான்றோர் களின் நட்பினையும், நன்குமதிப்பினையும் பெரிதும் பெற்ற இப்பெருமகனாரின் செந்தமிழ்ச் சமயச் சொற்பொழிவுகள், தமிழ் நாட்டில் பல்வேறு பகுதிகளிலும், இலங்கையாழ்ப்பாணம் மலேசியா ஆகிய அயல்நாடுகளிலும், பல்லாயிரக்கணக்கான மக்களாற்கேட்டுப் போற்றப்பட்ட சிறப்புடையன. பழம் பெரும் புலவர்களின் வரிசையில், இஞ்ஞான்று முதிர்ந்து கனிந்த நிலையில் இருந்துவரும் பெரியவர்கள் சிலருள், ஒருவராகத் திகழும் இவர்தம் அரிய இனிய கட்டுரை, சிந்தனையைத் தூண்டும் சிறப்புடையதாக விளங்குதலின், இங்கு வெளியிடப்பெறுகின்றது. —ஆசிரியர். ]

—தொடரும்





# திருமங்கலக்குடித் திருக்கோயில்கள்

வித்துவான்
வே. மகாதேவன்

**திருமங்கலக்குடி :**

ஆடுதுறைக்கும் திருப்பனந்தாளுக்கும் அமைந்த சாலையின் இடைப் பகுதியில், ஆடு துறைக்கு மிக அருகில், ஒருகல் தொலைவில் காவிரிக் கரையோரம் அமைந்துள்ள சிற்றூர் திருமங்கலக்குடி. இச் சிற்றூரில் உள்ள புரா ணேசுவரர் ஆலயம், திருஞானசம்பந்தர் திரு நாவுக்கரசர் ஆகியோரால் பாடப்பெற்ற திருக்கோயில். இவ்வூரினைப் பற்றியும், இங் குள்ள கோயில்கள் பற்றியும் கல்வெட்டடி யாகக் காண்போம்.

திருமங்கலக்குடி காவிரியாற்றின் வட கரையில் இருப்பது; பாடல் பெற்ற தலங்களில் 38 ஆவது தலம்.

''சீரினுர் மணியும் அகில்சாந்தும் செறிவரை
வாரிநீர் வரு பொன்னி வடமங்கலக் குடி''

''காவிரியின் வடகரைக் காண்தகு
மாவிரியும் பொழில் மங்கலக்குடி''

எனத் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் குறிப்பர். கல்வெட்டுக்கள், காவிரியின் வடகரை யில் அமைந்த விருதராச பயங்கர வளநாட்டுச் சிற்றூர்களில்ஒன்ருக இதனைக் குறிப்பிடுகின்றன.

**வளநாடும் நாடும் :**

விருதராச பயங்கர வளநாடு பல நாடு களாகப் பிரிக்கப் பெற்றிருந்தது. அப்பிரிவு களில் மண்ணிநாடு என்பதும் ஒன்று. திருப் பனந்தாளுக்கு அண்மையில் ஓடும், மண்ணி யாற்றை ஒட்டியமைந்த பல சிற்றூர்கள் மண்ணி நாட்டில் இருந்தன. திருமங்கலக்குடி, விருதராச பயங்கர வள நாட்டில் மண்ணி நாட்டில் இருந்த ஊர் எனக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. இந்தக் குறிப்பில் எவ்வித மாற்றமும் கல்வெட்டுக்களில் இல்லை.

கோப்பெருஞ்சிங்கன். மூன்ரும் இராச ராசன் முதலிய வேந்தர்தம் கல்வெட்டுக்கள் திருமங்கலக்குடியை, ''விருதராச பயங்கர வளநாட்டு, மண்ணிநாட்டு மங்கலக்குடி'' எனக் குறிப்பிடுகின்றன.

விக்கிரம சோழன் காலத்தனவான திரு விடைமருதூர்க் கல்வெட்டுக்கள் மூன்று,

''மண்ணி நாட்டுச் சோழ மார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலத்துப் பிடாகை மங்கலக்குடி''

என்று குறிப்பிடுகின்றன. இவற்றுள் ஒரு கல்வெட்டுச் சோழமார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலத்துக் கீழ்ப் பிடாகையாகத் திருமங்கலக் குடி இருந்ததாகக் கூறும். மூன்ரும் குலோத் துங்கனுக்குப் பிற்பட்ட ஒருசோழ அரசனு டைய திருமங்கலக்குடிக் கல்லெழுத்து,

''வேப்பத்தூரான எதிரிலிசோழச் சதுர் வேதி மங்கலத்துப் பிடாகை மங்கலக்குடி'' எனக் குறிப்பிடுகிறது.

மண்ணிநாட்டுச் சிற்றூர்களில் ஒன்று வேப்பத்தூர். வேப்பத்தூர் முன்பு திருவிசலூர் திருக்களித்திட்டை என்னும் சிற்றூர்களைத் தன் னகத்துக் கொண்டு நிலவிய பேரூர். வேப்பத் தூரின் முற்காலப் பெயர்களுள் ஒன்று சோழ மார்த்தாண்டச் சதுர்வேதி மங்கலம்; பிற் காலப் பெயர் எதிரிலிசோழச் சதுர்வேதி மங் கலம். எனவே திருமங்கலக்குடி வேப்பத்தூரின் ஒரு பகுதியாக இருந்தமை புலனுகும்.

கல்வெட்டுக்களில் மங்கலக்குடி எனக் குறிக்கப் பெறும் பெயர் உண்டானது எவ்வாறு? புரோணேசுவரரின் கல்வெட்டுப் பெயரில் ஒன்று புராண விடங்கர். இவ்வூர்ப் பகுதி யாகிய புராண விடங்கன் எனப்படும் பகுதி, பண்டு, 'புராண விடங்கமங்கலம்' எனப் பெற் றது. இதனை, 'இவ்வூரில் கும்பிட்டு இருக்கும் புராண விடங்கமங்கலத்து ஆண்டார்கள்' என் பது முதலான பகுதிகளால் அறியலாம். புராண விடங்கனின் பெயரால் அமைந்த புராண விடங்கமங்கலம் என்பது மங்கலக்குடி என்று பெயரெய்தியது என்று கொள்ள இடமுண்டு.

### (1) புராணேசுவரர் திருக்கோயில்

திருமங்கலக்குடித் திருக்கோயில்களில் சமயத்தொன்மையும் வரலாற்றுத்தொன்மை யும் உடையது புராணேசுவரர் திருக்கோயில்.

புரானேசுவரர் திருக்கோயிலைப் போற்றித் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடியுள்ளமை, இதன் பல்லவர் காலத் தொன் மையைக் காட்டும். திருஞான சம்பந்தரின் திருப்பதிய முதல் பாடலால், 'முனிவன் ஒருவன்

இருந்தபடியே கைநீட்டிக் காவிரியின நீரெடுத்துத் திருமஞ்சனமாட்டிப் புராண நாதரை வழிபட்டமை' யையும்,

''மங்கலக் குடி ஈசனை மாகாளி
வெங்கதிர்ச் செல்வன் விண்ணொடு மண்ணும்நேர்
சங்கு சக்கர தாரி சதுர்முகன்
அங்ககத்தியனும் அர்ச்சித்தாரன்றே'' என்னும்

திருக்குறுந்தொகையால், 'காளி' சூரியன், திருமால், பிரமன், அகத்தியன் ஆகியோர் பூசித்தமை' யையும் அறியலாம். பல்லவர் காலத்திலேயே புராணநாதராலயம் புராணப் பெருமை உடையதாக இருந்தது.

## இறைவனின் திருநாமம்

திருஞான சம்பந்தர் தம்பதிக முதற்பாடலில், ''நீரின் மாமுனிவன் நெடும் கைகொடு நீர்தனைப் பூரித்து ஆட்டி அர்ச்சிக்க இருந்த புராணன்'' என இறைவனைக் குறிப்பர். முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனாய் இலங்கும் பேரருள்தன்மை கருதி இவ்வூரிறைவன் 'புராணன்' எனக் குறிக்கப் பெறுவார். கல்வெட்டுக்களில்,

'மங்கலக்குடி உடையார் புராணவிடங்கர்'
'மங்கலக்குடி புராணவிடங்கர் கோயில்'
'திருமங்கலக்குடிப் புராண நாயனர் கோயில்'

எனும் தொடர்களால் மூவரும், கோயிலும் கூறப்பெறுவர். இவற்றால் இறைவனுக்குப் புராணவிடங்கர், புராணநாயனர் என்னும் பெயர்கள் நிலவியமை புலனுகும்.

## சிலைகளின் கீழ்ச் சிலாலேகைகள்

இரண்டாவது கோபுரத்தில் வடபுறம் சிறிது மேற் பகுதியில், அருகில் துணைவியுடன் கை குவித்த நிலையில் ஒருருவம் அமைக்கப்பட்டுள்ளது. இவ் உருவத்தின் கீழே,

''வரகுணப்பெருமாள்''

என்று பெயர் எழுதப் பெற்றுள்ளது. இவ்வாண்டகை இக்கோபுரத் திருப்பணி ஆற்றியவனுதல் கூடும்.

புராணேசுவரர் கோயில் கருவறையின் தென்புறப் புழையுருவான ஆலமர் கடவுளின் திருவுருவின் முன்புறம், சிறு மண்டபம் பிற்கால இணைப்பாகக் கட்டப்பட்டுள்ளது. நான்கு கால்களால் ஆன இச்சிறு மண்டபத்தின் தூண்கள் 15 ஆம் நூற்றுண்டுக் கலையமைப்புடைய போதிகைகளைக் கொண்டவை. வடமேற்புறத் தூணில் கிழக்கு நோக்கியதாக ஒருவனின் உருவம் அஞ்சலிமுத்திரையுடன் அமைக்கப்பட்டுள்ளது. கற்பிரதிமத்தின் கீழ் அமைந்த கல்வெட்டால் இவன், ''முல்லைக் குடையான் தியாகப்பெருமாள் ஆன வானவன் பல்லவரையன்'' என அறிகிறேம். இவன் இந்த மண்டப இணைப்பினைச் செய்தவனுதல் கூடும்.

## கோயிலின் நிலை

கோநேரின்மை கொண்டான் என்னும் பெயரில் அமைந்த சோழ வேந்தனின் திருமங்கலக்குடிக் கல்வெட்டு, புராண விடங்கர் கோயிலைப் பற்றிய செய்திகளைத் தருகிறது. சுங்கம் தவிர்த்த முதற்குலோத்துங்கனின் பதினுருவது ஆண்டில் இவ்வூரில் அளந்து வரி நீக்கப் பெற்ற நில விவரங்களைக் கூறுங்கால், ''புராண விடங்கர் ஸ்ரீகோயில் திருமுற்றம், திருநந்தவனம், திருமடைவிளாகம், தீர்த்தக்குளம், திருவீதி, செங்கழுநீர்த் திருஓடைகள், திருமுற்றமும் திருநந்தவனமும் தமக்கெனத் தனியாகக் கொண்ட திருவீதிகளில் எழுந்தருளி இருக்கும் தேவர்கள் ஸ்ரீகோயில்கள் உடையது'' எனக் கூறுகிறது. இப்பகுதியில் இவ்வூரில் மடங்களும் வேதம் ஓதும் பிராமணர்க்குக் குடியிருப்பும், குளமும் கரையும், வணியருக்கும் பணிசெய்வார்கட்கும் குடியிருப்பும் செக்கு நிலைகளும் இருந்தமை கூறப்பட்டுள்ளது.

## பிற கல்வெட்டுச் செய்திகள் :

இரண்டாம் இராசராசனின் 24-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு 'ஆண்டாராண்டான்' என்பவனும் இவனுடைய தம்பியரும் திருநாமத்துக் காணிகளிலும் தேவதானங்களிலும் கைவந்தபடி கொண்டமையால் ஊரவரும் மற்றுமுள்ளாரும் விசாரித்து ஒறுத்தமையைக் காட்டுகிறது. கல்வெட்டின் இடைப்பகுதி கட்டுண்டமையால் செய்தி முழுமையும் தரவில்லை.

திரிபுவனச் சக்கரவர்த்திகள் கோநேரின்மை கொண்டான் என்னும் பொதுப் பெயரால் அமைந்த கல்வெட்டொன்று இங்கு உள்ளது. இவ்வரசன் யாவன்? எனக் கல்வெட்டு ஆண்டறிக்கை குறித்திலது. ஆயினும் இவ்வரசன் மூன்றும் குலோத்துங்க சோழனுக்குப் பிற்பட்டவனுதலை, எதிரிலி சோழ மங்கலம் என வேப்பத்தூரைக் குறித்தலாலும், திரிபுவன வீரேசுவரமுடையோர் இறையிலி நிலத்துத் தரம் பெற்ற நிலம் பற்றிக் குறிப்பதனுலும் அறியலாம். முதல் குலோத்துங்க சோழனின் 16 ஆம் ஆட்சியாண்டில் நிலமளக்கப் பெற்றமை, கஞ்சனூரான விக்கிரம சோழநல்லூரிலும், திருமங்கலக்குடியிலும் தரம் குறிக்கப் பெற்ற நிலம் முதலியன பற்றிக் கூறுகிறது.

கி.பி. 1517-க்குரிய கிருஷ்ணதேவ மகாராசனின் கல்வெட்டுத் திருமுட்டம், குற்றுலம், கோடிகா, சிறுகுடி, விற்குடி, சேந்தவனம், ஆக்கூர், நாவலூர், திருநறையூர், காணுட்டம் புலியூர், நல்லூர், ஆண்டார்கோயில், விண்ணகர், திருவெள்ளியங்குடி, திருமேய்ச்சூர், திருவேள்விகுடி, பந்தநல்லூர், திருவாலங்காடு, தலைச்சங்காடு, குறிச்சி முதலான பல சிவ விட்டுணுத் தானங்கட்குச் சர்வமான்ய இறையிலிகள் தரப்பட்டமையைக் காட்டுகிறது.

## (2) ஆளப்பிறந்தீசுவரம்

கி.பி. 1243 முதல் 1279 வரை ஆட்சி புரிந்த கோப்பெருஞ்சிங்கனுடைய 2 (5) ஆம் ஆட்சியாண்டுக் (126 (8)) குரிய கல்வெட்டுத் திருமங்கலக்குடிக் கோயிலில் ''ஆளப்பிறந்தீசுவரம்'' என்னும் சிற்றுலயம் இருந்தமையைக் கூறுகிறது.

கோப்பெருஞ்சிங்கனின் கிளைவழியில் முன்னோன் ஒருவனின் பெயர் கூடல் ஆளப் பிறந்தானை அழகிய பல்லவரான காடவராயர் (620-1919) என்பது. இவனே அன்றியும் இக் கிளை வழியினரில் பலர், கூடலாளப் பிறந்தான், கூடலவனி ஆளப் பிறந்தான், ஆளப் பிறந்தான் என்னும் சிறப்புப் பெயர்களைச் சூடிக்கொள்வர். ''கூடலாளப் பிறந்தான் அழகிய சீயன்'' ''அழகியசியன் அவனியாளப் பிறந்தான்'' என்றெல்லாம் கல்வெட்டுக்களில் கூறப்பெற்ற பல்லவன் கோப்பெருஞ்சிங்கனின் காலத்தில் ''ஆளப்பிறந்தான்'' என்னும் சிறப்புப் பெயரால் திருமங்கலக்குடிக் கோயிலினுள் ''ஆளப் பிறந்தீசுவரம்'' எடுப்பிக்கப் பெற்றது.

திருமங்கலக்குடி புராணேசுவரர் கோயிலில் அரையன் உதையஞ் செய்தானை தொண்டைமான் என்பவன் ஆளப்பிறந்தீசுவரம் உடையாரை எழுந்தருள்வித்தான். இவ்வரசியல் தலைவன் பாண்டிய குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பெருமங்கலம் என்னும் ஊரினன்.

திருமங்கலக்குடிப் புராணேசுவரர் கோயிலில் மதிலை ஒட்டி மேலே மறைப்புடன் அமைந்த நடப்பதற்கேற்ற நீண்ட திருச்சுற்று மாளிகை மேடை இன்றும் இருக்கிறது. இதனைத் 'திரு நடை மாளிகை' என்று கல்வெட்டுக்கள் கூறும். முதல் பிரகாரத்தில் மேற்குப் புறத் திருச்சுற்று மேடையில், வடக்குப் புறத்தில், நாயகர் திருமண்டபத்துத் தெற்குப் பத்தியில் ஆளப்பிறந்தீசுவரம் உடையார் எழுந்தருளு விக்கப் பெற்றூர்.
''அரையன் உதையஞ்செய்தானை தொண்டைமானேன் விருதராச பயங்கர வளநாட்டு மண்ணிநாட்டுத் திருமங்கலக்குடி உடையார் புராண நாயனுர் கோயிலில், முதல் பிரகாரத்து மேலைத் திருநடை மாளிகையில், வடபக்கத்து நாயகர் திருமண்டபத்துத், தெற்கில் பத்தியில், நான் ஏழுந்தருள்வித்த உடையார் ஆளப் பிறந்தீசுவரமுடையார்....'' என்பது கல் வெட்டுப் பகுதி.

இவ்வரசியல் தலைவன் தான் எழுந்தருள்வித்த இறைவனுக்குத் திருநாமத்துக் காணியாகத் திருமங்கலக்குடியில் வழிபாடு ஆற்றியிருக்கும் புராணவிடங்கமங்கலத்து ஆண்டார்களிடம் இருந்து, ஆதிசண்டேசுவர தேவரின் பேரினல் சதுரக்கோலினல் 512 குழிகள் கொண்டது 1மா என்ற கணக்குப்படி நிலம் விலையாகப் பெற்று நிவந்தத் தேவைகளுக்கு அளித்தான். இந்நிலப்பரப்புக் கூறும் கல்வெட்டுப் பகுதி, 'புகலிவேந்தன் புராண தேவனிடம் விலை கொண்ட இராம தேவ நல்லூர்க் கட்டளையில் அமைந்த நிலம்; புகலிவேந்தன் திருஞானசம்பந்தனிடம் விலைகொண்ட இவ்வூர் வீரசோழு நல்லூர்க் கட்டளையில் அமைந்த ஊமத்தைக்கண்டன் என்னும் பெயருடைய நிலம்; நீறணிந்தான் திருவெழுந்தூர் என்று பேர் கூறப் பெற்ற நிலங்கள் ஆளப் பிறந்தீசுவரம் உடையார்க்குத் தரப்பெற்ற பகுதிக்குட்பட்டன என எல்லை தெரித்துக் கூறல் அறிந்தின் புறற்பாலது.

தற்காலத்துப் புராணேசுவரர் கோயிலின் உள்ளே ஆளப்பிறந்தீசுவரமுடையார் உள்ளவாறு அறிய முடியவில்லை. முதல் திருச்சுற்றின் வடமேற் புற மூலையில் கீழ்த் தடுப்புச் சுவரின்றிச் சுதை உருவங்கள் காணப்படும். இப்பகுதியின் மேற்புறம் திருநடை மாளிகையில் விமானம் ஒன்று அமைந்துள்ளது. இந்த விமானத்தின் கீழ் ஆளப்பிறந்தீசுவரமுடையார் எழுந்தருள்விக்கப் பெற்றிருக்கலாம் எனக் கருத வியல்கிறது.

## (3) திருப்பூந்துறையுடையார் திருக்கோயில்

திருமங்கலக்குடியில் உள்ள பேராலயமான புராணேசுவரர் கோயிற்கு மூன்றும் திருச்சுற்று பண்டு இருந்துள்ளது; இன்று அப்பிராகாரம் இல்லை. மூன்றும் பிராகாரத்தில் திருப்பூந்துறையுடையார் என்னும் திருநாமத்தால் அமைந்த இறைவற்குத் தனியாலயம் இருந்துள்ளது. கோநேரின்மை கொண்டானின் திருமங்கலக்குடிக் கல்வெட்டில்,

''இத்தேவர் திருநாமத்துக்காணியான நிலத்துச் செய்நிலமும், இக்கோயில் மூன்றும் பிராகாரத்துட்பட்ட தன்மதான விநேதசதுப்பேதி மங்கலத்துத் திருப்பூந்துறையுடையார்க்கு...... இவ்வூர்...செய்கோயிலும் திருமுற்றமும் திருமடை விளாகமும் ஆன நிலத்து....'' என்ற பகுதி அமைந்துள்ளது.

''திருப்பூந்துறை உடையார் திருக்கோயில் திருமுற்றம், திருமடைவிளாகம் ஆகிய பகுதிகளை உடையது; திருமங்கலக்குடி புராணவிடங்கர் கோயில் மூன்றும் பிராகாரத்தில் உள்ளே இருந்தது; இக்கோயில் இருந்த மூன்றும் பிராகாரப் பகுதி திருமங்கலக் குடிக்கு உரிய பகுதியன்று, தன்மதான விநோதச் சதுர்வேதி மங்கலத்திற்கு உரிய பகுதி'' என்ற குறிப்புகளைக் கல்வெட்டுப்பகுதி தருகிறது. 'தன்மதான விநோதச் சதுர்வேதி மங்கலம்' என்பது சூரியனுர் கோயிலும், திருமாந்துறையும் அமைந்த ஊரின் பெயர். எனவே ''திருமங்கலக்குடிக் கோயிலுக்குப் பெரிய அகன்றவெளித் திருச்சுற்று இருந்தது; அத்திருச்சுற்றில் திருப்பூந்துறையுடையார் ஆலயம் இருந்தது; அக்கோயில் இருந்த பகுதி திருமாந்துறையைத் தன்னகத்துக் கொண்ட தன்மதானவிநேதச் சதுர்வேதி மங்கலத்தில் இருந்தது'' என அறிகிறோம்.

புராணேசுவரர் கோயில் கல்வெட்டில், ''....இக்கோயில் திருப்பூந்துறை யுடையார் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும் திருமடைவிளாகமும் நிலம் ஆறுமா அரைக்காணி முந்திரிகைக் கீழ் அரையே காணி அரைக்காணிக்கீழ் எட்டுமா'' என்று அமைந்த பகுதி திருப்பூந்துறையுடையார் கோயிலின் பரப்பினைத் தெளிவாகக் கூறுவதோடு அன்றியும், இது புராணேசுவரர் கோயிலின் பகுதியாகவே இருந்ததனை வலியுறுத்துகிறது.

திருப்பூந்துறை யுடையார் கோயில் சிறு தனிச்சுற்றாலயமாக இருந்திருத்தல் வேண்டும்; இன்று அடையாளம் காண இயலவில்லை.

## (4) குலோத்துங்க சோழீச்சுவரம்

திருவிடைமருதூரில் உள்ள விக்கிரம சோழனின் கல்வெட்டுக்கள் மூன்று, திருமங்கலக்குடியில் குலோத்துங்க சோழீச்சுவரம் என்னும் கோயில் எடுப்பிக்கப்பெற்றமையைக் காட்டுகின்றன.

குலோத்துங்க சோழீச்சுவரம் பற்றிக் குறிப்பனவற்றுள், விக்கிரம சோழனின் 3-ஆம் ஆண்டு, கி. பி. 1121-க்கு உரிய கல்வெட்டே முற்பட்டது. (302/1907) ஸ்ரீகண்டசிவன் என்னும் பெருமுனிவர் விக்கிரமசோழனின் குருவாக விளங்கியவர். இவர் முதற் குலோத்துங்க சோழன் நலம் பெறுவதன் பொருட்டு, மங்கலக்குடியில், குலோத்துங்க சோழீச்சுவரம் உடையாரை எழுந்தருள்வித்தார். இதனை,

''திரிபுவனச்சக்கரவர்த்திகள் விக்கிரம சோழதேவற்கு, யாண்டு ஏழாவது, உடையார் குலோத்துங்க சோழ தேவற்கு நன்றாக, உடையார் சுவாமிதேவர் ஸ்ரீகண்டசிவர் விருதராச பயங்கர வளநாட்டு மண்ணிநாட்டுச் சோழமார்த் தாண்டச் சதுர்வேதி மங்கலத்துப் பிடாகை மங்கலக்குடியில் எழுந்தருளுவித்த உடையார் குலோத்துங்க சோழீச்வரமுடையார்'' என்ற கல்வெட்டுத் தொடர்கொண்டு அறிகின்றோம்.

குலோத்துங்க சோழீச்சுவரமுடையார்க்கு வேண்டும் நிவந்தச் செலவுகட்காக இவ்வூரினைச் சேர்ந்த அந்தணன்,

'காராம்பி செட்டுத் திருவரங்கநாராயண பட்டன்'

'பசிண்டி புறத்து எக்ஞமுத்திப்பட்டன்'

முதலியவர்களிடம் குலோத்துங்கசோழீச்சுவரம் உடையார் கோயில் காரியங்களைக் கவனிக்கும் (தேவகன்மி) வாசுதேவப்பட்டன் பேரிலும், உடையார் சுவாமி தேவர் உடையார்கன்மி ஆகியோர் பேரிலும் நிலம் விலையாகக் கொள்ளப் பெற்றுப் பழநிலை தவிர்த்து ஓபாதி நெல் முதலியன நிச்சயிக்கப்பெற்று இறையிலியாக்கப்பட்டது. கோயிற்கு வேண்டுவனவற்றுக் குடலாகத் தரப்பெற்றது.

குலோத்துங்க சோழீச்சுவரமுடையார் கோயில் திருமுற்றம், தீர்த்தக் குளம், திருமடைவிளாகம், முதலான பகுதிகளுடன் அமைந்திருந்தது. இதன் பரப்பு 'ஒன்பதுமா அரைக் காணி முந்திரிகை.' இப்பகுதி, விக்கிரமசோழ நல்லூரில் 'ஐந்தரையே நாலரைமாவில்' நீக்கப் பெற்று 'ஐந்தே நாலுமா முக்காணி முந்திரிகைக் கீழரைக்கு' ஓபாதிநெல் முதலியன நிச்சயிக்கப் பெற்றுக் குலோத்துங்கசோழீச்வர முடையார்க்குத் தரப்பெற்றது. (South Indian Inscriptions Vol. V No. 703 139/1895)

விக்கிரம சோழனின் நான்காமாண்டில் குலோத்துங்க சோழீச்வரம் உடையாற்கு அரசனுடைய ஆணைப்படி 10 வேலி நிலம் தேவதான இறையிலியாகத் தரப்பட்டது. இந்நிலம் 525 கலம் 3 குறுணி 4 நாழி விளையுளும், வேலிக்கு 100 கலம் காணிக்கடனும் உடையது. (301/1907)

குலோத்துங்க சோழீச்சுவரத்தின் இன்றைய நிலையை அறிய இயலவில்லை.

## முடிவுரை

திருமங்கலக்குடி, பண்டு புராணேசுவரர் திருக்கோயிலை அன்றியும், ஆளப்பிறந்தீசுவர் உட் சிற்றாலயத்தையும், திருப்பூந்துறை யுடையார் கோயில் குலோத்துங்க சோழீச்வரம் என்னும் தனியாலயங்களையும் உடையதாக இருந்தது, எனக் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன. இன்று அச்சிற்றாலயங்கள் அறியக் கூடியனவாக இல்லை. காலப்போக்கில் அழிந்திருக்கக் கூடும்.



# பழியும் பாவமும்

ம. அ. முருகேசன், பி.ஏ., பி.எல்.,

ஒருவன் தவறு செய்ய, தவறு செய்யாத இன்னொருவன் மீது அத்தவறுக்கான பழி சுமத்தப்படுகையில், அயல் நின்று பார்த்திருப்போர் அல்லது உண்மையை உணர்ந்தவர்கள் ''பழி ஒரு பக்கம் பாவம் ஒரு பக்கம்'' என்று அங்கலாய்ப்பதை நாம் அன்றாட வாழ்வில் காண்கிறோம். பாவம் ஒருவன் செய்ய அதற்கான பழி இன்னொருவன் மீது விழுவது சாதாரணமாக நடைமுறையில் நிகழுவதுதான். சமூக நியதியில் இது நிகழ்ந்து விட்டால் அதன் விளைவுகள் அதிகத் தீமை பயப்பதில்லை. ஆனால் சட்ட ரீதியாக இப்படி ஒன்று நிகழ்ந்து விட்டால் அதன் விளைவுகள் அதிகத் தீமையை விளைக்கும். ஒருவன் திருட்டுக் குற்றமோ, கொலைக் குற்றமோ செய்ய, நிரபராதியான இன்னொருவன் அந்தக் குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்டால் அங்கு நீதி தவறுவதுடன், மக்களுக்குச் சட்டத்தின் மீதுள்ள நம்பிக்கையும் தளர்ந்துவிடும். இது பற்றியே, 'நூறு குற்றவாளிகள் தண்டனைக்குத் தப்பினாலும், ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது' என்று ஒரு நீதி இலக்கணம் வகுக்கப்பட்டிருக்கின்றது. தவறு செய்தவன் தான் தண்டிக்கப்பட வேண்டும். தவறு செய்யாதவன் தண்டிக்கப்படக் கூடாது என்ற நியதி எல்லோருக்கும் உடன்பாடு. இந்த நியதி தவறினால் மனவேதனையும் மனச்சோர்வும் ஏற்படுகின்றன.

தேங்காய்க்குத் 'தேரை' என்ற நோயும், விளாங்கனிக்கு 'யானை' என்ற நோயும் வருவதுண்டு. தேங்காய் சிறு குரும்பையாக இருக்கையிலேயே தேரை என்ற நோய் அதனைப் பற்றி உள்ளிருந்தபடியே தேங்காய் வளர வளர அதன் வள்ர்ச்சியை உண்டு விடும். அதுபோலவே, யானை என்ற நோய் விளாங்காயைப் பற்றி உள்ளிருந்தே அதன் பருப்பை உண்டுவிடும். இப்படி, தேரை நோய் பற்றிய தேங்காயை ''தேரை உண்ட தேங்காய்'' என்றும், யானை நோய் பற்றிய விளாங்கனியை ''யானை உண்ட விளாங்கனி'' என்றும் கூறுவார்கள். ஆனால், உண்மையில் தேரை என்ற தவளையோ. யானை என்ற விலங்கோ இந்தக் காய்களை உண்ணுவது இல்லை. அவைகள் அந்தக் காய்களை உண்ணாமலேயே உண்டு விட்டதாகப் பழி தூற்றப்பட்டுப் பழியேற்கின்றன. தேரை, யானை என்ற நோய்கள் காய்களை அரித்துத் தின்ன, தேரை என்ற தவளையும், யானை என்ற விலங்கும் அப்பழியை யேற்கின்றன. இங்கு, பாவம் ஒரு பக்கம் பழி ஒரு பக்கம்.

தேரிலேறி வளவன் ஒருவன் போருக்குப் போனான். அவன் வலிமை மிகுந்த தேர்ப் படையை உடையவன். போருக்குப் போகும் அம்மன்னனைக் கண்டு ஒரு மங்கை தனது மனத்தைப் பறிகொடுத்தாள். இதனை அறிந்த அயலார் அவளைச் சுட்டிக் காட்டியும், சாடையாகவும் அலர் தூற்றுகின்றனர். அவளைப் பெற்ற தாயும் அவள் மீது ஐயுற்றுச் சிறு கோல் கொண்டலைக்கிறாள். அவள் தன் குறையைத் தோழியிடம் சொல்லி அரற்றுகின்றாள். 'நான் வளவனைச்சேர்ந்தறியேன், இருப்பினும் அயலார் அலர் பேசுகின்றார்கள். தாயும் கோல் கொண்டலைக்கிறாள். தேரை தேங்காயை உண்ணாமலேயே ''தேரை உண்ட தேங்காய்'' என்று பழி சுமக்கின்றது. செய்யாத குற்றத்துக்குச் சென்ம தண்டனை என்பது போலச் செய்யாத பாவத்துக்குத் தேரை பழி சுமக்கிறது. அதுபோல நானும் வளவனைச் சேராமலேயே சேர்ந்த பாவத்துக்குத் தண்டிக்கப்படுகின்றேன்' என்றுளாம் அந்த மங்கை. இப்படி முத்தொள்ளாயிரத்தில் ஒரு பாடல்—

''அன்னையும் கோல்கொண் டலைக்கும் அயலாரும்

என்னை யழியும்சொல் சொல்லுவர்— நுண்ணிய

தெங்குண்ட தேரை வழிப்பட்டேன் யான் அந்தோ

திண்டேர் வளவன் திறத்து''

இன்னொரு பாடலில், ஒரு வயலில் உழவன் ஒருவன் உளுந்து விதைத்திருந்தான். உளுந்தும் நன்றாக விளைந்து பலன் தந்தது. பயிரை அறுவடை செய்துவிட்டு மீண்டும் நிலத்தை உழுது வைத்தான். அப்படி உழுத நிலத்தில் புல் நன்றாக விளைந்திருந்தது. இரவோடிரவாக அந்தப் புல்லை ஊர் மந்தை மாடுகள் மேய்ந்து விட்டுச் சென்று விட்டன. காலையில் வந்து பார்த்த உழவனுக்கு ஒரே ஏமாற்றம். கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது. எது மேய்ந்து விட்டுப்போனது என்று தேடினான். அருகாமையில் ஒரு கழுதை மேய்ந்து கொண்டிருந்தது. அந்தக் கழுதைதான் புல்லை மேய்ந்துவிட்டது என்று முடிவு செய்து அந்தக் கழுதையின் காது களை அரிந்துவிட்டான். காதறுந்த கழுதையும் கதறிக் கொண்டே ஓடிப் போயிற்றாம். எப்படி இருக்கின்றது நியாயம்? இதுபோல இன்னொரு நிகழ்ச்சியும் நடந்ததாம்.

பாண்டியன் யானை மீதேறி வீதி வழியே உலாப்போந்தான். சாளரத்தின் வழியாக ஒரு மங்கை அப்பாண்டியனைக் கண்டு மயங்கினள். காதல் நோய் மிகுதியால் அவள் அழகு அழிந்தது. மேனி பசலை எய்தியது. தோள்கள் மெலிந்தன. அந்த மங்கை நினைத்துப் பார்க்கின்றாள். பாண்டியனைக் கண்டது என் கண்கள் தானே. அப்படி அவனைக் கண்ட கண்கள் தீங்கின்றி நன்றாக இருக்க, ஒரு பாவமும் அறியாத என் மேனி பசப்பானேன். தோள் மெலிவானேன். பாவம் ஓரிடம் பழியோரிடமா என்று மனம் குமுறுகின்றாள். காரணம் ஏதும் புலப்படவில்லை. மேலே சொன்ன காதறுந்த கழுதை தான் நினைவுக்கு வந்ததாம். இப்படியொரு அழகான கற்பனை முத்தொள்ளாயிரத்தில்.

''உழுத உளுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்—வழுதியைக்
கண்ட நங் கண்கள் இருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு''.

ஒரே மங்கையினுடைய கண்களையும் தோளையும் வெவ்வேறு உயிர்களைப் போலக் கற்பனை செய்து, காதறுந்த கழுதையுடன் ஒப்பிட்டுப் பாடியிருக்கும் நயம், நினைக்குந்தோறும் சுவை பயக்கின்றது. எளிய நடையும் வளமான கற்பனையும் முத்தொள்ளாயிரம் ஆசிரியருக்குக் கைவந்த கலை. இதே போல் இன்னொரு பாடல்.

சோழனொருவன் உறையூர் வீதியிலே உலா வந்தான். அவன் நீதி தவறாதவன்என்று பெயர் எடுத்தவன். அதனைக் கண்டாள் ஒரு பெண். அவள் கண்ணும் நெஞ்சும் வளவனைக் கலந்து விட்டன. அதன் விளைவாக அவள் தோள்கள் மெலிந்து விட்டன. கண்ணும் நெஞ்சும் கலக்கப் போய்' தோள்கள் மெலிவானேன்,? கலந்தது குற்றம் என்றால் கண்ணும் மனமு மல்லவா தண்டிக்கப்பட வேண்டும். அவைகளை விட்டுத் தோள்களைத் தண்டிப்பது என்ன நியாயம்? இதுவா வளவனின் நீதி முறை என்று அந்தப் பெண் தன் தோழியிடம் முறையிடுவ தாக ஒரு பாடல்.

''கண்டன வுண்கண் கலந்தன நன்னெஞ்சம்
தண்டப் படுவ தடமென்தோள்—கண்டாய்
உலாஅ மறுகில் உறையூர் வளவற்கு
*எலாஅ முறை கிடந்த வாறு''.

*எலாஅ—தோழி



சிதம்பரம் அருள்மிகு தில்லையம்மன் திருக்கோயிலுக்கு 10-7-1975 அன்று அறநிலைய அமைச்சர் மாண்புமிகு மு.'கண்ணப்பன் அவர்கள் வருகை தந்தார்கள். அறங்காவலர் கு. பாலசுப்ரமணியன் மலர் மாலையிட்டு வரவேற்றார். அறங்காவலர் குழுத்தலைவர் சு. கோவிந்தராசன் வரவேற்பு மடல் வாசித்தளித்தார். அமைச்சர் அவர்கள் கோயில் தூய்மையாக இருப்பதையும், நிர்வாகத்தினரையும் பாராட்டினர். அறங்காவலர் துரை பாலசுப்ரமணியம் நன்றி கூறினர். அமைச்சர் அவர்களைக் கோயில் செயல் அலுவலர் ரெ. சீத்தாராம் பி.ஏ. பி.ஜி.எல்., வட்ட ஆய்வர் மை. அனந்தாச்சாரி ஆகியோரும் வரவேற்றனர். அமைச்சர் அவர்களுடன், வி. வி. சுவாமிநாதன் எம்.பி., அபுசாலி எம்.எல்.ஏ., நகர மன்றத் தலைவர் கோ. துரைராசன் ஆகியோர் உடன் வந்து சிறப்பித்தனர்.

# சரசுவதி அந்தாதி மூலமும் உரையும்

(காப்பு : வெண்பா)

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்அம்மை;—தூய
உருப்பளிங்கு போல்வாள், என் உள்ளத்தின் உள்ளே
இருப்பள்; இங்கு வாராது இடர். (1)

(1) கலைமகள், அறுபத்துநான்கு கலைகளையும் அறிவிக்கும் என்னுடைய தாய் ஆவாள்; அவள் பளிங்கு (படிகம், கண்ணாடி) போன்ற தூய வெண்ணிறம் உடையவள். அத்தகைய அவள், என்னுடைய உள்ளத்தில் எழுந்தருளித் தங்கியிருப்பாள்; அதனால் எனக்கு இங்கு ஒரு துன்பமும் வராது.

படிக நிறமும், பவளச்செவ் வாயும்,
கடிகமழ்பூந் தாமரைபோற் கையும்,—துடியிடையும்
அல்லும் பகலும் அனவரத மும்துதித்தால்,
கல்லுஞ்சொல் லாதோ கவி? (2)

(2) கலைமகள், படிகம் போன்ற தூய வெண்ணிறமும், பவளம் போன்ற சிவந்த வாயும், மணம் கமழ்கின்ற தாமரை மலர் போன்ற கைகளும், துடி (உடுக்கை) போன்ற இடையும் உடையவள்; அவளை இரவும் பகலும் இடையருது எப்போதும் துதித்தால், கல்லும்கூடக் கவிகள் பாடும். (அனவரதம்-எப்போதும்)

(நூல்)

சீர்தந்த வெள்ளிதழ்ப் பூங்கம லாசனத் தேவி, செஞ்சொல்
தார்தந்த என்மனத் தாமரை யாட்டி, சரோருகமேல்
பார்தந்த நாதன் இசைதந்த ஆரணப் பங்கயத்தாள்,
வார்தந்த சோதிஅம் போருகத் தாளை வணங்குதுமே. (1)

(1) சிறப்பு அமைந்த வெண்ணிறமான இதழ்களை உடைய தாமரை மலரை இருப்பிடமாகக்கொண்டு வீற்றிருக்கின்ற தேவியும், செவ்விய சொற்களின் மாலையை யான் புனைவதற்கு அருள்புரிந்தவளும், எனது மனத்தாமரையில் எழுந்தருளி இருப்பவளும், தாமரை மேல் இருக்கும் பிரமதேவன் இசையுடன் அருளிய வேதமாகிய தாமரைப்பீடத்தில் வாழ்பவளும், ஆகிய கலைமகளின் ஒளிவீசுகின்ற தாமரை மலர் போன்ற திருவடிகளை, நாம் வணங்குவோம். (சரோருகம்-தாமரை)

வணங்கும் சிலைநுத லும், கழைத் தோளும், வனமுலைமேற்
சுணங்கும், புதிய நிலவெழு மேனியும், தோட்டுடனே
பிணங்கும் கருந்தடங் கண்களும், நோக்கிப் பிரமன் அன்பால்
உணங்கும் திருமுன்றி லாய், மறை நான்கும் உரைப்பவளே. (2)

(2) நான்கு வேதங்களாலும் துதிக்கப்படுபவளே! வளைந்த வில்லைப் போன்ற நெற்றி, மூங்கிலைப் போன்ற தோள்கள், அழகிய தனங்களின் மீது படர்ந்த பொன்னிறமான தேமல், நிலவின் ஒளிவீசுகின்ற திருமேனி, தோடு என்னும் காதணிகளுடன் போரிடும் கண்கள் ஆகியவற்றைப் பார்த்து, நின் கணவனுகிய பிரமதேவன் நினது ஊடலைத் தணிப்பதற்காக அன்பினல் வாடிக்கிடக்கும் அழகிய திருமுற்றத்தினை உடையவள் நீ! நின்பெருமை எம்மால் அளவிடுவதற்கு எளியதோ?

(வணங்குதல்-வளைதல். சிலைநுதல்-வில்போன்ற நெற்றி. கழை-மூங்கில். சுணங்கு-அழகுத் தேமல். பிணங்கும்-போரிடுகின்ற. உணங்குதல்-வாடுதல்.)

* கலைமகள் விழா (சரசுவதி பூசை) நிகழ்ச்சியினை முன்னிட்டு, கவியரசர் கம்பர் இயற்றிய இந்தச் சிறந்ததுதி நூல், இங்கு உரையுடன் வெளியிடப்பெறுகின்றது. —ஆசிரியர்.

உரைப்பார் உரைக்கும் கலைகள் எல்லாம், எண்ணில் உன்னையன்றித்
தரைப்பால் ஒருவர் தரவலரோ? தண் தரளமுலை
வரைப்பால் அமுதுதந்து இங்கெனை வாழ்வித்த மாமயிலே,
விரைப்பாசடை மலர் வெண்தாமரைப்பதி மெல்லியலே. (3)

(3) குளிர்ச்சி மிக்க முத்துமாலைகளை அணிந்த, மலைபோன்ற உனது தனங்களின், பால் ஆகிய அமிழ்தத்தைக் கொடுத்தருளி, இவ்வுலகில் என்னை வாழ்வித்த, பெருமை மிக்க மயில்போன்றவளே! மணம் மிகுந்த, பசுமையான இலைகளுடன் கூடிய வெண்தாமரை மலர்மேல் வாழ்கின்ற மெல்லியலே! ஆராய்ந்து நோக்கினல், இவ்வுலகில் உள்ளோர் புகழ்ந்து கூறுகின்ற, எல்லாக் கலைஞானங்களையும், உன்னையல்லாமல் வேறு ஒருவர், எமக்கு உணர்த்த வல்லவர்கள் ஆவாரோ?

(தரளம்-முத்து. விரை-மணம். பாசடை-பசுமை நிறமுள்ள இலை. பதி-இருப்பிடம்).

இயலானது கொண்டு நின்திரு நாமங்கள் ஏத்துதற்கு
முயலாமை யால்தடு மாறுகின்றேன்; இந்த மூவுலகும்
செயலால் அமைத்த கலைமகளே, நின் திருவருளுக்கு
அயலாய் விடாமல், அடியேனையும் உவந்து ஆண்டருளே. (4)

(4) மூன்று உலகங்களையும் படைத்தருளிய கலைமகளே! இயற்றமிழ் (கல்வி) கொண்டு, நின்னுடைய சிறந்த திருப்பெயர் (புகழ்)களைத் துதிப்பதற்கு முயலாமல், யான் வீணே உலகில் தடுமாறிக்கொண்டுள்ளேன். நின் திருவருளுக்கு யான் புறம்பாகி விடாமல், அடியவனுகிய என்னையும், நீ மகிழ்ந்து ஏற்று ஆட்கொண்டு காத்து அருள்புரிவாயாக!

அருக்கோ தயத்திலும், சந்தி ரோதயம் ஒத்து, அழகுஎறிக்கும்
திருக்கோல நாயகி, செந்தமிழ்ப் பாவை, திசைமுகத்தால்
இருக்கோதும் நாதனும், தானும் எப்போதும் இனிதிருக்கும்
மருக்கோல நாண்மலராள், என்னை ஆளும் மடமயிலே. (5)

(5) சூரியனின் உதயத்தைக் காட்டிலும், ஒளிமிக்க சந்திரனின் உதயத்தைப் போன்று, அழகிய குளிர்ந்த ஒளியை வீசுகின்ற திருமேனியை உடைய கலைமகளாகிய தலைவியும்; நான்கு திசைகளையும் நோக்கி, நான்கு வேதங்களையும் ஓதுகின்ற பிரமதேவனுகிய கணவனும், தானும் எப்போதும் கூடி இனிது வீற்றிருந்து தாமரை மலரில் வாழ்பவளும்; மயில்போன்ற சாயல் உடையவளும் ஆகிய கலைமகளே, என்னை ஆட்கொண்டு காத்தருளும் தெய்வமாவாள்.

(அருக்கன்-சூரியன். ஒளிமிகுதியால் சூரியனை ஒக்குமேனும், சூரியனுக்குத் தண்மையின்மையால் கலைமகளின் திருமேனியை ''அருக்கோதயத்தினும் சந்திரோதயம் ஒத்து அழகு எறிக்கும் திருக்கோலம்'' என்ருர். இருக்கு-வேதம். மரு-வாசனை. கோலம்-அழகு.)

மயிலே, மடப்பிடியே, கொடியே, இளமான் பிணையே,
குயிலே, பசுங்கிளியே, அன்னமே, மனக்கூர் இருட்கோர்
வெயிலே, நிலவெழும் மேனி மின்னே, இனி வேறுதவம்
பயிலேன்; மகிழ்ந்து பணிவேன், உனது பொற் பாதங்களே (6)

(6) சாயலால் மயில், நடையால் பிடி (பெண் யானை), மென்மையாய் அசைதலின் கொடி, பார்வையால் பெண்மான் (பிணை), இனிய குரலால் குயில், கொஞ்சிப் பேசுதலால் கிளி, தூய்மையாலும் வெண்மையாலும் அன்னம், இருளைப் போக்குதலால் சூரியன், ஒண்மையாலும் தண்மையாலும் சந்திரன் என்பன போன்று விளங்கும் ஒளிமிக்க கலைமகளே! இனிமேல்யான் வேறுதவம் எதுவும் செய்யமாட்டேன். உனது திருவடிகளையே வணங்குவேன்.

பாதாம் புயத்திற் பணிவார் தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியும் தந்தருள் பாரதி; வெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம் புயத்தில் இருப்பாள்; இருப்பஎன் சிந்தையுள்ளே
ஏதாம்? புவியிற் பெறல்அரிதாவது எனக்கினியே! (7)

(7) தனது திருவடியாகிய தாமரைகளில் விழுந்து பணிபவர்களுக்குப் பல கலைஞானங்களையும், வேதாந்தத்தில் கூறப்படுகின்ற வீடுபேற்றையும் கொடுத்தருளுகின்றவளும்; வெண்மையான இதழ்களை உடைய குளிர்ந்த தாமரை மலரில் வீற்றிருப்பவளும் ஆகிய கலைமகள், என் மனத்தில் எழுந்தருளியிருப்பதனுல், இனிமேல் உலகத்தில் யான் அடைவதற்கு அரிய பொருள் எதுவும் இல்லை. எல்லாப் பேறுகளும் எனக்கு எளிதில் கிடைத்துவிடும்.

(பாத அம்புயம்-திருவடித்தாமரை. பாரதி-எல்லாப் பொருள்களையும் பரிப்பவள், தாங்குபவள்; கலைமகள். முத்தி-வீடுபேற்றின்பம். சீதம்-குளிர்ச்சி. புவி-உலகம். ஏது ஆம்-எதுவும் இல்லை).

இனிநான் உணர்வது எண்ணெண் கலையாளை, இலகுதொண்டைக்
கனிநாணும் செவ்விதழ் வெண்ணிறத் தாளைக், கமலஅயன்
தனிநாயகியை அகிலாண்டமும் பெற்றதாயை மனப்
பணிநாள் மலர்உறை பூவையை ஆரணப் பாவையையே. (8)

(8) அறுபத்து நான்கு கலைஞானங்களுக்கும் உரியவளும்; கொவ்வைப்பழம் நாணுதற்குக் காரண மான சிவந்த இதழையும், வெண்ணிறத்தையும் உடையவளும்; தாமரையில் வாழ்கின்ற பிரமதேவனின் ஒப்பற்ற துணைவியும்; எல்லா உலகங்களையும் பெற்ற தாயும், கிளி போன்றவளும், வேதங்களுக்குரிய அதி தெய்வமும் ஆகிய கலைமகளையே, இனிமேல் யான் தியானித்து அன்புடன் வணங்குவேன்.

பாவும் தொடையும் பதங்களும் சீரும் பலவிதமா
மேவும் கலைகள் விதிப்பாளிடம், விதியின்முதிய
நாவும், பகர்ந்த தொல் வேதங்கள் நான்கும், நறுங்கமலப்
பூவும், திருப்பதம் பூவால் அணிபவர் புந்தியுமே. (9)



(9) கலைமகளே, பாடல்கள் தொடைகள் சொற்கள் சீர்கள் பலவகையான கலைநூல்கள் ஆகிய வற்றையெல்லாம் அருளிச் செய்பவள். அவளுக்கு இருப்பிடங்களாவன; பிரமதேவனின் நாக்கும், வேதங்கள் நான்கும், வெண்தாமரை மலரும், தன் திருவடிகளை மலர்களைக்கொண்டு வழிபடுகின்ற அடியார்களுடைய மனமுமேயாகும்.

(கவிதைத் திறனையும், பலவகைக் கலைத்திறனையும், அடியவர்களுக்கு வழங்கியருள்பவள் கலை மகளே யாதலின், அவளைப் ''பாவும் தொடையும் பதங்களும் சீரும் பலவிதமா மேவும் கலைகளும் விதிப்பாள்'' என்றார். விதி—பிரமன். புந்தி—மனம். கலைமகள் உறையும் இடம் தமது மனம் எனக் கூறலுறுவார், பிரமனின் நாவும், வேதமும், தாமரை மலரும் ஆகியவற்றையும் உடன் சேர்த்துக் கூறியது, ஒப்புமைக்கூட்டம் என்னும் அணியாகும்).



புந்தியில் கூரிருள் நீக்கும் புதிய மதியமென்கோ?
அந்தியில் தோன்றிய தீபம் என்கோ? நல்அருமறையோர்
சந்தியில் தோன்றும் தபனன்என்கோ? மணித்தாமம்என்கோ?
உந்தியில் தோன்றும் பிரான் புயந்தோயும் ஒருத்தியையே (10)

(10) திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமதேவனின் தோள்களைத் தழுவுகின்ற ஒப்பற்ற கலைமகளை, அடியார்களின் உள்ளத்தில் உள்ள அறியாமையாகிய இருளைப்போக்குகின்ற புதிய சந்திரன் என்று சொல்வேனோ ? மாலைப்பொழுதில் தோன்றி விளங்குகின்ற மணிவிளக்கு என்று சொல்வேனோ? வேதங்களுக்குரிய அந்தணர்கள் வணங்குகின்ற காலைச்சந்தியில் உதிக்கின்ற சூரியன் என்று சொல் வேனோ? சிறந்த மணிகளால் இயன்ற மாலை என்று சொல்வேனோ? தனக்கு உவமையில்லாத கலை மகளின் அருமைபெருமைகளைக் கூற நம்மால் எவ்வாறு இயலும் ? (தபனன்-சூரியன். தாமம்-மாலை).

ஒருத்தியை, ஒன்றும் இலாஎன் மனத்தின் உவந்துதன்னை
இருத்தியை, வெண்கமலத்து இருப்பாளை, எண்ணெண்கலைதோய்
கருத்தியை, ஐம்புலனும் கலங்காமல் கருத்தையெல்லாம்
திருத்தியை, யான்மறவேன்; திசை நான்முகன் தேவியையே (11)

(11) ஒப்பற்றவளும், ஒரு தகுதியும் இல்லாத என் மனத்தில் தன்னை வீற்றிருக்கச் செய்தவளும், வெண்தாமரையில் இருப்பவளும், அறுபத்து நான்கு கலைகளில் தோய்ந்த கருத்தை உடையவளும், தன் அடியவர்கள் ஐம்புலன்களாற் கலங்காமல், அவர்களின் உள்ளத்தையெல்லாம் திருத்துபவளும், நான்முகன் தேவியுமாகிய கலைமகளை, யான் எப்பொழுதும் மறவாமல் தியானித்து வழிபடுவேன்.

தேவரும், தெய்வப் பெருமானும், நான்மறை செப்புகின்ற
மூவரும், தானவர் ஆகிஉள் ளோரும், முனிவரரும்,
யாவரும், ஏனைய எல்லா உயிரும், இதழ்வெளுத்த
பூவரும் மாதின் அருள்கொண்டு, ஞானம் புரிகின்றதே. (12)

(12) தேவர்களும், தேவர்களின் தலைவனாகிய இந்திரனும், நான்குவேதங்களும் துதிக்கின்ற மும்மூர்த்திகளும், அசுரர்களும், சிறந்த முனிவர்களும், மற்றுமுள்ள எல்லோரும், எல்லா உயிர்களும், அறிவுடையவராக விளங்குதல், வெண்மையான இதழ்களையுடைய தாமரை மலரில் எழுந்தருளி யிருக்கும் கலைமகளின் கருணையினாலேயாம்.

புரிகின்ற சிந்தையின் ஊடே புகுந்து புகுந்து, இருளை
அரிகின்றது, ஆய்கின்ற எல்லா அறிவின் அரும் பொருளைத்
தெரிகின்ற இன்பம் கனிந்தூறி நெஞ்சம் தெளிந்து முற்ற
விரிகின்றது, எண்ணெண் கலைமாது உணர்த்திய வேதமுமே. (13)

(13) தன்னை விரும்புகின்ற அடியவர்களின் உள்ளத்தினுள்ளே புகுந்துநின்று, அவர்களின் அறியாமை யாகிய அகஇருளை அழிப்பதும்; நுட்பமாக ஆராய்கின்ற எல்லாருடைய அறிவினாலும், அருமையான தத்துவப் பொருள்களை அறிந்து, அதனால் ஆனந்தம் நிறைந்து, நெஞ்சம் தெளிவடைந்து முதிரும்படி பரவுவதும்; அறுபத்து நான்கு கலைகளுக்கும் உரிய தெய்வமாகிய கலைமகள் கூறியருளிய வேதமேயாகும். ('வேதமுமே' என்பதில் உம்மை அசைநிலை.)

வேதமும், வேதத்தின் அந்தமும், அந்தத்தின் மெய்ப்பொருளாம்
பேதமும், பேதத்தின் மார்க்கமும், மார்க்கப் பிணக்கு அறுக்கும்
போதமும், போத உருவாகி எங்கும் பொதிந்த விந்து
நாதமும், நாதவண்டு ஆர்க்கும் வெண்டாமரை நாயகியே. (14)

(14) வேதங்களும், அவற்றின் அந்தங்களாகிய உபநிடதங்களும், அவற்றில் கூறப்பெறும் கடவுளரின் வகைகளும், அவ்வக்கடவுளரின் சமய நெறிகளும், அச்சமயநெறிகளின் பிணக்குகளை நீக்குகின்ற ஞானமும், ஞானவடிவமாகி எல்லா விடங்களிலும் மறைந்து உறைகின்ற விந்துநாதமும், முதலிய எல்லாமும் ஆக விளங்குபவள், வண்டுகள் ஒலிக்கின்ற வெண்தாமரை மலரின் தலைவியாகிய கலைமகளேயாவள்.

நாயகம் ஆன மலர் அகமாவதும், ஞானஇன்பச்
சேய்அகம் ஆனமலர் அகமாவதும், தீவினையால்
ஏய்அகம் மாறிவிடும் அகமாவதும், எவ்வுயிர்க்கும்
தாயகம் ஆவதும், தாதார் சுவேத சரோருகமே. (15)

(15) எல்லா மலர்களினும் சிறந்த தலைமையான மலராகப்பெறுவதும், ஞானமாகிய இனிய குழந்தை வளர்கின்ற இடமான மலராகப் பெறுவதும், முற்பிறவிகளில் செய்த பாவங்களால் விளங்குகின்ற செருக்கு நீங்குதற்குரிய இடமாகப் பெறுவதும், எல்லா உயிருக்கும் தாய்வீடாகப்பெறுவதும், கலைமகள் வீற்றிருக்கும் வெண்தாமரை மலரேயாகும்.

(கலைமகள்பால் தாம் கொண்டுள்ள பக்தியின் மிகுதியினால், அவள் எழுந்தருளி வீற்றிருக்கும் வெண்தாமரை மலரை, இச் செய்யுளில் ஆசிரியர் வியந்து புகழ்ந்து இன்புறுகின்றார். கலைமகளை ''ஞானஇன்பச்சேய்'' என்றும், ''எவ்வுயிர்க்கும் தாய்'' என்றும் துதித்தார். (சுவேதம்-வெண்மை.)

சரோருகமே; திருக்கோயிலும், கைகளும், தாள்இணையும்,
உரோருகமும், திருஅல்குலும், நாபியும், ஓங்கிருள்போற்
சிரோருகம் சூழ்ந்த வதனமும், நாட்டமும், சேயிதழும்,
ஓரோர் உகம் ஈர்அரை மாத்திரை ஆன உரைமகட்கே. (16)

(16) நெடிய ஒவ்வொரு ஊழியும், சிறிய ஒரு நொடியளவு பொழுதாக உடைய கலைமகளுக்கு இருப்பிடமும், கைகளும், இரண்டு திருவடிகளும், தனங்களும், அழகிய அல்குலும், இருள்போன்று கறுத்த கூந்தல் சூழ்ந்த திருமுகமும், திருக்கண்களும், சிவந்த இதழும் ஆகிய எல்லாம், செந்தாமரை மலர்களேயாகும்.

(கலைமகளின் பெருமை கூறுவார், மிக நீண்ட ஊழிக்காலமும் அவளுக்கு மிகச்சிறிய நொடியளவு பொழுதாகும் என்னும் கருத்தில், ''ஓர் ஓர் உகம் ஈர் அரை மாத்திரை ஆன உரைமகள்'' என்று சிறப்பித்தார். கலைமகளின் எல்லா உறுப்புகளும் அழகாற்சிறந்து, செந்தாமரை மலர்கள் போல விளங்குகின்றன என்பது கருத்து. சரோருகம்-தாமரை. உரோருகம்-மார்பில் முளைப்பது, தனங்கள். நாபி-கொப்பூழ். சிரோருகம்-கூந்தல். வதனம்-முகம். நாட்டம்-கண். சேயிதழ்-சிவந்த உதடு. (உரைமகள்-சரசுவதி).

கருந்தாமரை மலர், கண் தாமரை மலர்; காமருதாள்
அருந்தாமரை மலர், செந்தாமரை மலர்; ஆலயமாத்
தருந்தாமரை மலர், வெண்தாமரை மலர்; தாவில்எழில்
பெருந்தாமரை மணக்கும் கலைக்கூட்டப் பிணைதனக்கே! (17)

(17) குற்றமற்ற அழகிய பெரிய தாமரை மலரில் வாழ்கின்ற கலைமகளுக்குக் கண்கள், கருநெய்தல் ஆகிய கருந்தாமரை மலர் போலும்; திருவடிகள், செந்தாமரை மலர்கள் போலும்; அவள் எழுந்தருளியிருக்கும் இடம், வெண்டாமரை மலர் ஆகும்.

('இப்பாடலில் கவியரசராகிய கம்பர், தம் சதுரப்பாடு தோன்றக் கருந்தாமரை-செந்தாமரை-வெண்தாமரை என்று மூவகைத் தாமரை மலர்களைக் கலைமகளோடு இயைபுபடுத்திப் பாடியுள்ள திறம் வியத்தற்பாலது. செய்யுளின் நான்காம் அடியில், மரை-கலை-பிணை என மானைக்குறிக்கும் பல சொற்கள் அமைய வைத்ததும், ஒருவகைக் கவித்திறன் ஆகும். கலைமகளைக் 'கலைக்கூட்டப்பிணை' என்று போற்றிப் புகழ்ந்து சிறப்பித்தார்).

தனக்கே துணிபொருள் என்னும் தொல்வேதம்; சதுர்முகத்தோன்
எனக்கே சமைந்த அபிடேகம் என்னும்; இமையவர்தம்
மனக்கேதம் மாற்றும் மருந்து என்ப; சூடும் மலர் என்பன்யான்;
கனக்கேச பந்திக் கலைமங்கை பாத கமலங்களே. (18)

(18) மேகம் போன்ற கூந்தலின் பாரத்தையுடைய கலைமகளின் பாதமாகிய தாமரைகளை, வேதங்கள் தமக்கே உரியனவென்று, துணியப்பெற்ற பொருளாகக் கூறும்; நான்முகனாகிய பிரமதேவன் தன்தலையில் சூடிக்கொள்ளத் தகுந்த மகுடம் என்று புகழ்வான்; தேவர்கள் தங்கள் மனத்திலுள்ள கவலைகளைத் தீர்க்கும் மருந்து என்று சொல்வார்கள்; யானோ என் தலையின்மேல் சூடிக்கொண்டு வணங்கத்தக்க பூ என்று கூறுவேன்.

(கலைமகளின் திருவடியை வேதங்களும் பிரமதேவனும் தேவர்களும் போற்றும் சிறப்பினைக் குறிப்பிட்டு, அவற்றை என் தலையின்மீது ஏற்று யான் வணங்குகின்றேன் என்று, கவியரசர் ஆகிய கம்பர், இச்செய்யுளில் கலைமகளை வியந்து துதிக்கின்றார். இது பலபடப் புனைவு என்னும் அணியாகும். அபிடேகம்-மகுடம். கேதம்-கவலை. கனம்-மேகம். கேசம்-கூந்தல். பந்தி-பங்க்தி, தொகுதி.)

கமலந்தனில் இருப்பாள், விருப்போடு அம்கரம் குவித்துக்
கமலம் கடவுளர் போற்றும் மென்பூவை; கண்ணில்கருணைக்
கமலந் தனைக்கொண்டு கண்டு, ஒருகால் தம்கருத்துள் வைப்பார்
கமலம் கழிக்கும் கலைமங்கை ஆரணி காரணியே. (19)

(19) தாமரை மலரில் வீற்றிருப்பவளும், தேவர்கள் விருப்பத்துடன் தமது அழகிய கைகளாகிய தாமரைகளைக் குவித்துத் துதிக்கின்றவளும், கிளிபோன்ற மொழியையுடையவளும், வேதங்களின் வடிவ மாக இருப்பவளும், எல்லாவற்றிற்கும் காரணமாகத் திகழ்பவளும், ஆகிய கலைமகள், தன்னை மனத்தில் வைத்துத் தியானிப்பவர்களுடைய அறிவின் குற்றங்களைத் தனது கடைக்கண்ணினின்று வெளிப்படுகின்ற அருள் வெள்ளத்தால் போக்கிவிடுவாள்.

(இச்செய்யுளில் கமலம் என்னும் சொல், முதல் இரண்டு அடிகளில் தாமரை என்ற பொருளிலும், மூன்றும் அடியில் நீர் அல்லது வெள்ளம் என்ற பொருளிலும், நான்காம் அடியில் 'கம்+மலம்'—அறிவின் குற்றம், தலைவிதி என்னும் பொருளிலும் வந்தது. 'அகமலம்' என்னும் சொல், முதற்குறையாகக் 'கமலம்' என வந்து, மனக்குற்றம் அல்லது கவலை என்னும் பொருளைத் தந்தது எனவும் கொள்ளலாம். கலைமகள் தன் கடைக்கண்ணின் கருணைப் பார்வையால், அடியவர்களின் எல்லாக் குற்றங்களையும் பாவங் களையும் துன்பங்களையும் போக்கி அருள்வாள் என்பது கருத்து).

காரணன் பாகமும் சென்னியும் சேர்தரு கன்னியரும்,
நாரணன் ஆகம் அகலாத் திருவும், ஓர் நான்மருப்பு
வாரணன் தேவியும், மற்றுள்ள தெய்வ மடந்தையரும்,
ஆரணப் பாவை பணித்த குற்றேவல் அடியவரே. (20)

(20) சிவபெருமானின் இடப்பக்கத்திலும் முடியின்மீதும் தங்கியுள்ள இளமகளிரான பார்வதி கங்கை என்பவர்களும், திருமாலின் மார்பை விட்டு நீங்காத திருமகளும், ஒப்பற்ற நான்கு தந்தங்களைக்கொண்ட ஐராவதம் என்னும் யானையை உடைய இந்திரனின் மனைவியாகிய இந்திராணியும், மற்றும் உள்ள தேவ மாதர்களும் ஆகிய அனைவரும், வேதங்களின் தலைவியாகிய கலைமகள், பணிக்கின்ற குற்றேவல்களைச் செய்யும் அடியவர்களேயாவர்.

(காரணன்-சிவபெருமான், எல்லாவற்றிற்கும் காரணமாகத் திகழ்பவன்; காரணம் என்னும் ஆகமத்தால் துதிக்கப்படுபவன் எனினுமாம். நான்மருப்புவாரணன்-தேவேந்திரன். வாரணம்-யானை, ஐராவதம். கலைமகளை 'ஆரணப்பாவை' என்று சிறப்பித்தார்.)

அடிவேதம் நாறும் சிறப்பு ஆர்ந்த வேதம் அனைத்தினுக்கும்
முடிவே, தவள முளரி மின்னே, முடியா இரத்ன
வடிவே, மகிழ்ந்து பணிவார் தமது மயல் இரவின்
விடிவே, அறிந்து என்னை ஆள்வார் தலந்தனில் வேறு இலையே. (21)

(21) வேதங்கள் எல்லாவற்றிற்கும் முடிந்த முடிபான கருத்தாக உள்ளவளே; வெண்தாமரை மலரில் மின்னற்கொடிபோல விளங்குபவளே; அழிவற்ற மணியின் ஒளிமிகுந்த வடிவம் உடையவளே; அன்பு கொண்டு வணங்கும் அடியார்களின் அறியாமையாகிய இருளை நீக்கும் சூரியனைப் போன்றவளே, என் இழிந்த நிலையினை அறிந்து, என்னை அடிமையாக ஏற்று என்னைக் காத்தருள்பவர், உன்னைத்தவிர இவ் வுலகில் வேறு எவரும் இல்லை.

(கலைமகளே எத்தகைய இழிந்த நிலையினரையும், தனது நிறைந்த கருணையால் ஏற்றுக் காத்தருள் வாள் எனப் புகழ்ந்தார். வேதங்கள், கலைமகளின் திருவடிப் புகழைப் பரவி இடைவிடாது எங்கும் துதித்தலால், ''அடிவேதம் நாறும்'' என்றும், ''சிறப்பார்ந்த வேதம் அனைத்தினுக்கும் முடிவே'' என்றும் குறிப்பிட்டார். தவளமுளரி-வெண்தாமரை. தவளம்-வெண்மை. முளரி-தாமரை. மயல் இரவு-மயக்கமாகிய இருண்ட இரவு. விடிவு-விடியற்காலையில் தோன்றும் சூரியனைக் குறித்தது. மயலை இர வாக உருவகித்ததனால், அதற்கு ஏற்ப அதனைப் போக்கும் கலைமகளை விடிவு (சூரியன்) என்றார்.

வேறு இலையென்று, உன் அடியாரிற் கூடிவிளங்கும் நின்பேர்
கூறலை, யானும் குறித்து நின்றேன்; ஐம்புலக்குறும்பாம்
ஆறலை கள்வர் மயக்காமல், நின்மலர்த்தாள் நெறியில்
சேறலை ஈந்தருள்; வெண்தாமரை மலர்ச்சேயிழையே. (22)

(22) வெண்தாமரை மலரில் வீற்றிருப்பவளே! செவ்விய அணிகலன்களை உடையவளே! நின்னை யன்றி வேறு பற்றுக்கோடு இல்லை என்று தெளிந்து, உனது அடியார்களுள் நானும் ஒருவனாகச் சேர்ந்து, சிறப்புப்பெற்று விளங்கும் நினது திருப்பெயர்களைத் துதித்தலைக் கூறிக்கொண்டு நின்றேன்! ஐம்பொறி களின் பொல்லாங்குகளாகிய வழிப்பறி கள்வர்கள், என்னை மயக்கி வருந்தச் செய்யாதபடி, எனக்கு உன்னுடைய திருவடித் தாமரைகளின் அருள்நெறியிற் செல்லும் திறத்தினை அளித்தருள்வாயாக!

('மாறுஅலை கள்வர்-எதிர்த்து நின்று துன்புறுத்தி வழியிற் களவு செய்யும் தீயவர்கள். இத் தொடர் 'ஆறலைகள்வர்', எனவும் வரும். ஐம்பொறிகள் செய்யும் கொடுமைகள் பற்றி, அவற்றை ''ஐம்புலக்குறும்பாம் மாறு அலை கள்வர்'' என்றார். மாறுதல்-எதிர்த்து நிற்றல்).

சேதிக்கலாம் தர்க்க மார்க்கங்கள்; எவ்வெவர் சிந்தனையும்
சோதிக்கலாம்; உறப் போதிக்கலாம்; சொன்னதே துணிந்து
சாதிக்கலாம்; மிகப் பேதிக்கலாம்; முத்திதான் எய்தலாம்;
ஆதிக் கலாமயில் வல்லி பொற்றுளை அடைந்தவர்க்கே. (23)

(23) கலைமகளின் அழகிய திருவடிகளை அடைகின்ற பேறுபெற்றவர்களுக்கு, தம்மை எதிர்த்து வாதப்போர் செய்பவர்களின் வாத நெறிகளை வென்று துணித்தல் இயலும்; எத்தகையவருடைய மனத்தின் நிலைமையையும் ஆராய்ந்து அறிதல் இயலும்; எல்லோர்க்கும் எல்லாப் பொருள்களையும் தெளிவுறச் சொல்லி அறிவுறுத்துதல் இயலும்; தான் கூறிய பொருளையே முடிந்த முடிபாகத் துணிந்து நிலைநாட்டுதற்குரிய ஆற்றலும் திறமையும் அமையும்; தமது கொள்கைக்கு மாறாக மாற்றார் சொன்ன கருத்துக்களையெல்லாம் மறுத்து ஒழிக்கும் வன்மை உண்டாகும்; இவற்றிற்கெல்லாம் மேலாக வீடு பேற்றின்பத்தையும் எளிதில் அடைதல் இயலும்.

(கலைமகளின் சிறப்பை வியந்து ''ஆதிக்கலாமயில் வல்லி'' என்று புகழ்ந்தார். கலைமகளின் திருவடியை அடைந்தவர்கள் பெறும் நலன்களையெல்லாம் இப்பாடல் சிறப்புறத் தொகுத்துக் கூறுகின்றது)

அடையாள நாள்மலர் அங்கையில்,ஏடும் மணிவடமும்
உடையாளை, நுண்ணிடை ஒன்றும் இலாளை, உபநிடதப்
படையாளை, எவ்வுயிரும் படைப்பாளைப், பதுமநறுந்
தொடையாளை, அல்லது மற்று,இனியாரைத் தொழுவதுவே! (24)

(24) அழகிய கைகளில் ஞானநூலாகிய ஏடும், செபமாலையாகிய மணிவடமும், ஆகியவற்றை உடையவளும்; நுண்ணிய இடை சிறிதும் இல்லாதவளும், உபநிடதமாகிய படைக்கருவியை உடையவளும், எல்லா உயிர்களையும் படைப்பவளும், மணம் கமழ்கின்ற தாமரை மாலையை உடையவளும் ஆகிய கலைமகளை அல்லாமல், வேறு யாரை நான் இனி வணங்குவது? கலைமகளையே யான் வணங்கி உய்வேன்.

(கலைமகள் தனக்குரிய அடையாளமாகத் தன் கைகளில் முறையே ஞானநூலாகிய ஏடும், செபமாலையாகிய அணிவடமும் கொண்டிருப்பவள் ஆதலின் ''அடையாள நாண்மலர் அங்கையில் ஏடும், மணிவடமும் உடையாள்'' என்றார். ''உபநிடதப் படையாள்'' என்றும், ''எவ்வுயிரும் படைப்பாள்'' என்றும் கூறியது முரண்தொடை என்னும் அணியாகும். அடையாளம் என்றது ஞான முத்திரையையும் குறிக்கும்).

தொழுவார், வலம்வருவார், துதிப்பார், தம்தொழில் மறந்து
விழுவார், அருமறை மெய்தெரிவார், இன்பமெய்புளகித்து
அழுவார், இன்னுங் கண்ணில் நீர்மல்குவார், என்கண் ஆவது என்னே?
வழுவாத செஞ்சொற் கலைமங்கைபால் அன்பு வைத்தவரே. (25)

(25) தவறு அமையாத செவ்விய சொற்களை உடைய கலைமகளின்பால் அன்புவைத்த அடியவர்கள், அக்கலைமகளைத் தொழுவார்கள்; வலம் வருவார்கள்; துதிப்பார்கள்; தம்வயம் இழந்தும், தமது செயலை மறந்தும், அவளையே விரும்பி வழிபடுவார்கள்; அரிய வேதங்களின் உண்மைப்பொருளை உணர்வார்கள்; அருளின்ப அனுபவத்தால் உடலில் மயிர் சிலிர்க்கப் பெற்று ஆனந்தக் கண்ணீர் விடுவார்கள்; இத்தகைய செயல்களுள் எதுவும் என்னிடத்து உண்டாகவில்லையே? யான் என்செய்வேன்?

வைக்கும் பொருளும், இல்வாழ்க்கைப்பொருளும், மற்றுஎப்பொருளும்,
பொய்க்கும் பொருள் அன்றி, நீடும்பொருள் அல்ல;பூதலத்தின்
மெய்க்கும் பொருளும், அழியாப் பொருளும், விழுப்பொருளும்,
உய்க்கும் பொருளும், கலைமான் உணர்த்தும் உரைப்பொருளே. (26)

(26) தேடிப் பாதுகாத்துவைக்கும் பொன் மணி நெல் போன்ற பொருள்களும், உலகியல் வாழ்க்கைக்குரிய உற்றார் உறவினர் நண்பர் முதலிய பொருள்களும், மற்றும் உள்ள எல்லாப் பொருள்களும், நிலையின்றி அழியும் பொருள்களேயல்லாமல், அழிவின்றி நெடுங்காலம் நிலைத்து நிற்கும் பொருள்கள் அல்ல. இந்நிலவுலகத்தில் அழியாது நிலைத்து நிற்கும் பொருளும், மறுமையில் அழிவில்லாத சிறந்த பொருளும், எல்லாவற்றிற்கும் மேலான வீடுபேறு ஆகிய பொருளும் அதன்கண் கொண்டு சேர்க்கின்ற தத்துவப்பொருளும், கலைகளுக்கெல்லாம் உரிய தெய்வமாகிய கலைமகள் உணர்த்துகின்ற சொற்களின் பொருளேயாகும்.

(நிலைத்த பொருள்கள் யாவை? நிலையாத பொருள்கள் யாவை? என்பது, இப்பாடலில் விளக்கப்பெற்றது. கலைமகளே இம்மை மறுமை வீடுபேறு ஆகியவற்றைத் தருவாள்; அவளது அருளாற் கிடைக்கும் செல்வங்களே நிலையானவையாகும் என்பது கருத்து).

பொருளால் இரண்டும் பெறலாகும் என்ற பொருள் பொருளோ?
மருளாத சொற்கலை வான்பொருளோ? பொருள்;வந்து வந்தித்து
அருளாய் விளங்குமவர்க்கு ஒளியாய், அறியாதவர்க்கு
இருளாய் விளங்கும், நலங்கிளர் மேனி இலங்கிழையே. (27)

(27) தன்னைப் புகலடைந்து தொழுது வணங்கித், தன் திருவருளுக்கு இலக்காகி விளங்குகின்றவர்களுக்கு ஒளியாகித் தோன்றியும், தனது அருமை பெருமைகளை உணராதவர்களுக்குப் புலனாகாமல் மறைந்து நின்றும் விளங்குகின்ற, ஒளிமிக்க திருமேனியை உடைய கலைமகளே! . பொருளினால் அறமும் இன்பமுமாகிய இருபொருள்களையும் அடையலாம் என்று சிறப்பித்துக் கூறப்படும் செல்வப்பொருளோ? அன்றி, அறியாமையாகிய மயக்கத்தை ஒழிக்கின்ற சொற்களை உடைய கல்விப்பொருளோ? இவற்றுள் எது சிறந்த பொருள்? என்று நீ அருளிச் செய்க.

'அழியும்தன்மையுடைய செல்வப்பொருளைக் காட்டிலும், கலைமகள் அளித்தற்குரிய சிறப்பினால் கல்விப்பொருளே அழிவற்ற சிறந்த செல்வமாகும் என்பது, இச்செய்யுளில் குறிக்கப்பெற்றது. கல்விப் பொருளின் சிறப்பைக் கூறவே, அதனை அளித்தருளும் கலைமகளின் சிறப்பு தானே புலப்படுத்தப் பெற்றது. ''வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் நடுவணது எய்த இருதலையும் எய்தும்'' என்பது நாலடியார் செய்யுள். ''ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு'' என்பது திருக்குறள். அறம்பொருள் இன்பம் என்றமூன்றில், நடுவிலுள்ள பொருட் செல்வத்தைப் பெற்றால், அறஞ்செய்தலும், இன்பம் நுகர்தலுமாகிய ஏனைய இரண்டும், எளிதிற் கைகூடும் என்பது கருத்து. இக்கருத்தைத் தழுவியே ''பொருளால் இரண்டும் பெறலாகும் என்ற பொருள் பொருளோ? மருளாத சொற்கலை வான்பொருளோ? பொருள்'' என்று அருளிச் செய்தார். கலைமகள் தன்னை அறிந்த நல்லோர்க்கு ஒளியாயும், அறியாத புல்லருக்கு இருளாயும் விளங்குகின்றாள் என்பது, இப்பாடலில் சுட்டப்பெற்றது).

இலங்கும் திருமுகம்; மெய்யிற் புளகம் எழும்; கண்கள் நீர்
மலங்கும்; பழுதற்ற வாக்கும் வலிக்கும்; மனம்மிகவே
துலங்கும்; முறுவல்செயக் களிகூரும்; சுழல்புனல்போல்
கலங்கும் பொழுது தெளியும்; சொல்மானைக் கருதினர்க்கே (28)

(28) சொற்பொருள்களுக்குரிய மான்போன்ற கலைமகளைத் தியானிப்பவர்களுக்கு, அழகிய முகம் விளங்கும்; உடம்பில் மயிர்ச்சிலிர்ப்பு ஏற்படும்; கண்களில் இன்பக்கண்ணீர் ததும்பும்; குற்றமற்ற வாய்ச்சொற்கள் உறுதிபெற்று நிகழும்; மனம் மிகுதியாகத் தெளிவு பெறும்; புன்முறுவல் பூக்கும்படி மகிழ்ச்சியான உணர்வுகள் எப்போதும் நிலவும்; சுழல்கின்ற நீர்வெள்ளம்போல் ஏதேனும் கலக்கங்கள் நிகழினும், அக்கலக்கங்கள் எல்லாம் ஒழிந்து நீங்கிவிடும்.

(கலைமகளைத் தியானிப்பவர்கள் அடைகின்ற நலங்களும், மெய்ப்பாடுகளும் இப்பாடலில் தொகுத்துக் கூறப்பெற்றன.)

கரியார் அளகமும், கண்ணும், கதிர்முலைக்கண்ணும், செய்ய
சரியார் கரமும், பதமும், இதழும், தவளநறும்
புரியார்ந்த தாமரையும், திருமேனியும், பூண்பனவும்,
பிரியாது என்நெஞ்சினும் நாவினும் நிற்கும்; பெருந்திருவே. (29)

(29) அன்பர்களுக்குப் பெருஞ்செல்வத்தைத் தருபவளே! உனது கருநிறம் பொருந்திய கூந்தலும், கண்களும், ஒளிமிக்க தனங்களும், சிவந்த வளையல்கள் அணிந்த கைகளும், திருவடிகளும், உதடுகளும், வெண்தாமரை மலரும், அழகிய திருமேனியின் நிறமும், நினது அணிகலன்களும், இடையறுது எப்பொழுதும் என்நெஞ்சினும், நாவினும் நிலைபெற்று நிற்கும்.

(கலைமகளின் வடிவை மனத்தால் தியானித்தும், அவளது புகழ்நலங்களை நாவாற்பாடியும் போற்றுதல் வேண்டும் என்பது, இச்செய்யுளில் குறிக்கப்பெற்றது சரி—வளையல். தவளம்—வெண்மை.)

பெருந்திருவும் சயமங்கையும் ஆகி, என்பேதை நெஞ்சில்
இருந்தருளும் செஞ்சொல் வஞ்சியைப் போற்றில், எல்லாஉயிர்க்கும்
பொருந்திய ஞானந்தரும்; இன்பவேதப்பொருளும் தரும்;
திருந்திய செல்வம்தரும், அழியாப்பெருஞ் சீர்தருமே. (30)

(30) பெருமை மிக்க திருமகளும், வெற்றி மகளுமாக விளங்கி, என்னுடைய அறியாமை மிக்க நெஞ்சில் இருந்து அருள்கின்ற, செஞ்சொல் வஞ்சியாகிய கலைமகளைத் துதித்தால், அவள் அன்பர்கள் எல்லாருக்கும் ஞானத்தைத் தருவாள்; இன்பத்தை விளைவிக்கின்ற வேதப்பொருளை விளக்கியருள்வாள்; திருத்தமான கலைஞானங்களை அளித்தருள்வாள்; இவற்றிற்கெல்லாம் மேலாக அழிவற்ற பெரிய சிறப்புவாய்ந்த வீடுபேற்றின்பத்தையும் வழங்கி நலம் புரிவாள்.

(கலைமகளை வழிபட்டால் பெரிய செல்வங்களை எய்தலாம், வாழ்க்கையில் பல வெற்றிகளை அடையலாம். ஆதலின் ''பெருந்திருவும் மங்கையுமாகி இருந்தருளும் செஞ்சொல் வஞ்சி'' என்று கலைமகளைப் புகழ்ந்தார். செஞ்சொல் வஞ்சி-கலைமகள். கலைமகளின் அருளால் அறம்பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் அடையலாம் என்பார் ''பொருந்திய ஞானம் தரும், இன்ப வேதப்பொருளும் தரும், திருந்திய செல்வம் தரும், அழியாப்பெருஞ்சீர்தருமே'' என்றார்.)

—ஆசிரியர்.

(முற்றும்)

# அருள்மிகு சுவாமி நெல்லையப்பர் அருள்தரும் காந்திமதி அம்பாள் திருக்கோயில்

## திருநெல்வேலி.

### இத்திருக்கோயிலில் நடைபெற்றுவரும் சமய அறப்பணிகள்

1. தினந்தோறும் காலையில் ஒலி பெருக்கியின் வாயிலாகத் திருமுறைப் பாராயணம் நடத்தப்படுகிறது.
2. நாள்தோறும் திருமுறை வகுப்புகள் நடைபெறுகின்றன.
3. வாரத்தில் நான்கு தினங்களில் சமய விரிவுரைகளும், விழாக்காலங்களில் புலமை சான்ற பெரியோர்களால் சொற்பொழிவுகளும் நடத்தப்படுகின்றன.
4. கிடைத்தற்கரிய இரண்டாயிரம் நூல்கள் அடங்கிய திருக்கோயில் நூல் நிலையம் ஒன்று நடத்தப் பெறுகின்றது.
5. திருக்கோயில் ஆதரவில் மகளிர் உயர்நிலைப்பள்ளியும், அன்பு ஆசிரமம் ஒன்றும் நடத்தப்பெறுகின்றன.
6. திருஞானசம்பந்தர் பெயரில் பாலர்பள்ளி ஒன்று நடைபெறுகின்றது.
7. சுமார் 10 லட்ச ரூபாய் செலவில், திருப்பணி வேலை நடைபெற்று 3-5-74 அன்று திருக்குடமுழுக்கு நன்னீராட்டு விழாவும் நடைபெற்றது.
8. தினந்தோறும் பத்து ஏழைகளுக்கு இலவசமாகப் பிரசாத உணவு வழங்கப்படுகிறது.
9. ஏழைகளுக்கு இலவசமாகத் திருமணம் நடத்தி வைக்கப்படுகின்றது.
10. ரூ. 40,000 செலவில் பயணிகள் விடுதி ஒன்று கட்டப்பட்டுத் திறக்கப் பட்டுள்ளது.
11. திருக்குறள் வகுப்புகள் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகின்றன.

### திருக்கோயில் மேற்கொள்ளவிருக்கும் இதர பணிகள்

1. ஆயிரங்கால் மண்டபத்தில் கலைக்கூடம் அமைக்க ஏற்பாடாகி வேலைகள் நடந்து வருகின்றன.
2. கல்யாண மண்டபம் கட்டப்படவிருக்கிறது.
3. வழக்கு மன்றத்திலிருக்கும் திருக்கோயில் நிதி ரூபாய் மூன்று லட்சத்திலிருந்து கட்டிடங்கள் கட்டி வாடகைக்கு விடுவதின் மூலம் கிடைக்கும் வருமானத்தினுல் திருக்கோயில் வருவாயைப் பெருக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

திரு. வி. டி. ஏ. சௌந்தரபாண்டியன்,
நிர்வாக அதிகாரி.

திருப்பணி கண்ட தென்னவன்கோ
**ப. இலக்குமணன்,**
அறங்காவலர்குழுத் தலைவர்.
**திரு. எஸ். கல்யாண சுந்தரம் பிள்ளை,**
அறங்காவலர்.
**திருமதி. வாமசுந்தரா அம்மையார்** ,,
**திரு. பி. சித்திரைப் பாண்டியன்** ,,
**திரு. எஸ். எம். ஏ. நயினுர்** ,,

# கடமை வீரர் காமராசர்




''காமராசர் தொண்டு ஒரு காவியம்''. சுதந்திர இயக்கத்தில் மதிப்புள்ள நண்பராகக் காமராசர் விளங்கினார். தேசீய விவகாரங்களில் மிகுந்த கண்ணியத்துடனும், அர்ப்பணிப்புடனும் முக்கிய பங்கு வகித்தார். அவரது வாழ்க்கை மக்களுக்குச் சேவையின் இதிகாசம். அரசியல் ஊழியர்களுக்கு எல்லாம் உணர்வூட்டும் வாழ்க்கை. இத்தகைய மூத்த தலைவரின் இழப்பினால் அனாதையாகி விட்ட மக்களுக்கு, அதிலும் குறிப்பாக, தமிழ்நாட்டு மக்களுக்கு எனது ஆழ்ந்த அனுதாபங்கள்.''

—குடியரசுத் தலைவர்
பக்ருதீன் அலி அகமது.

காமராசரின் மறைவுச் செய்தி கேட்டுப் பெரிதும் துக்கமடைந்தேன். விடுதலைப் போராட்டத்தில் ஒரு சாதாரணத் தொண்டரா்க வாழ்க்கையைத் துவக்கிக் காங்கிரசிலும், சர்க்காரிலும், தேசிய வாழ்விலும் மிகப் பெரிய பதவிகளுக்கு அவர் உயர்ந்தார். நிர்வாகத் திறமையினாலும், விவேகத்தினாலும் உயர்ந்தவர் அவர்.

அவர் ஒரு மக்கள் தலைவர். பிரச்சினைகளைப் பற்றிய பரந்த அனுபவம் படைத்தவர். ஏழைகளுக்காக வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டவர். சங்கடங்கள் அனைத்தையும் அவர் சமாளித்த விதம், அவரது பண்புகளுக்கும், நமது சனநாயக முறைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

அவரது மறைவின் மூலம், சகல தரப்பு மக்களின் மதிப்பைப் பெற்று, கணிசமான செல்வாக்கைச் செலுத்தி வந்த ஓர் ஒப்பற்ற தலைவரை, நம்மிடையே இருந்து பறிகொடுத்து விட்டோம்.

—பிரதமர் இந்திரா காந்தி.

''தலைவர் காமராசரின் எதிர்பாராத திடீர் மறைவினால், தமிழ் நாடு மட்டுமின்றி நாடு முழுவதுமே ஒரு சிறந்த மக்கள் தலைவரை, திறமையான நிர்வாகியை இரும்பு உள்ளம் படைத்த மனிதனை, திடமான கொள்கைப் பிடிப்பு உள்ளவரை, இணையற்ற மதியூகியை, இராசதந்திரியை இழந்து நிற்கிறது. அவரது நேர்மை, அப்பழுக்கற்ற தன்மை, பொது வாழ்க்கையில் அவரது தன்னலமற்ற ஈடுபாடு, மிகவும் உயரிய தரம் படைத்தவை. மிகவும் நெருக்கடியான கட்டங்களில், சிக்கலான சந்தர்ப்பங்களில், அவர் திடத்துடனும், விவேகத்துடனும் செயலாற்றியவர். சந்தர்ப்பங்கள் அல்லது சிக்கல்கள் அவரைத் திகைப்படையச் செய்ததில்லை. அவரது தீர்க்கமான நோக்கும், சீரிய மதிப்பீடும், சங்கடமான பிரச்சினைகளுக்கும் தீர்வு கண்டிருக்கின்றன. அவரது மறைவு பொது வாழ்க்கையில் ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். அவர் ஒரு பிறவித் தலைவர். அவருக்கு இணையாக மிகச் சிலரே இருக்க முடியும். இம் மாபெரும் தலைவருக்கு இவரது அளவற்ற தேசப் பற்றையும், மக்களிடம் அவர் கொண்டிருந்த அந்தரங்க பூர்வமான ஈடுபாட்டையும் கருத்தில் நிறுத்தி நிரந்தர நினைவுச் சின்னத்தை எழுப்புவோமாக.''

—மேதகு ஆளுநர் கே. கே. ஷா.

''தியாகச் சுடர் அணைந்துவிட்டது. தமிழர்களின் நெஞ்சில் நீங்காத இடம் பெற்றவரும், தமிழ் நாட்டின் முன்னேற்றத்திற்கும், இந்திய சனநாயகத்திற்கும், அரும்பாடுபட்டவருமான மாபெருந் தலைவர் ஒருவரை இழந்துவிட்டோம். காமராசர் தம்முடைய வாழ்வையே மக்களுக்காக அர்ப்பணித்துக் கொண்டவர். அவர் ஏழைகளுக்காகப் பேசினார் என்பதைவிட, ஏழைகள் அவர் வாயிலாகப் பேசினார்கள் என்று சொல்லுவதுதான் பொருத்தமுடையதாகும். தாழ்த்தப்பட்ட மக்கள் அவருடைய செயல் மூலம் தங்களை உயர்த்திக் கொண்டார்கள்: பிற்படுத்தப்பட்ட மக்கள் அவருடைய தொண்டின் மூலம் முன்னுக்கு வரத் தலைப்பட்டார்கள். தமிழ் நாட்டு அரசியலில் அடித்தளத்திலே மிகப் பிற்படுத்தப்பட்ட ஒரு இடத்திலே இருந்து தோன்றி, இந்திய நாட்டு அரசியல் வானிலே ஒளி மிகுந்த கதிரவனாகத் திகழ்ந்து, தமிழ் நாட்டின் பெருமையினை, இந்திய அரசியல் அரங்கிலே உயர்த்திய பெருந்தகையாளர் காமராசர் அவர்கள் ஆவார்.

காமராசர் அவர்களோடு இன்று நேற்று அல்ல; எதிர்கட்சி வரிசையிலே இருந்து எதிர்க்கக்கூடிய சூழ்நிலை இருந்த அந்தக் காலத்திலேயே, அவர் மதிக்கத் தகுந்த ஒரு தலைவர் ; பாராட்டத் தகுந்த ஒரு பெரியவர் ; ஒரு தியாகி ; ஒரு உழைப்பாளி; தொண்டர்க்குத் தொண்டர்; தலைவர்க்குத் தலைவர் ; என்பதை நாங்கள் உணர்ந்தே, அதை உரைத்தே வந்திருக்கின்றோம்.

இங்கே பேசியவர்கள் எல்லாம் காமராசர், தமிழ் நாட்டு முதல் அமைச்சர்களை உருவாக்கியவர் ; இந்தியத் துணைக்கண்டப் பிரதமரை உருவாக்கக் கூடிய ஆற்றல் பெற்றவர், என்றெல்லாம் குறிப்பிட்டார்கள். அவைகளையெல்லாம் விட, என்றைக்கும் தலையெடுக்கமுடியாது என்று புழுவாய்ப் பூச்சியாய்க் கிடந்த பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களைப் பார்த்து, நீயும் மனிதன், மன்னன், மண் அன்று. நீயும் தலை நிமிர்ந்து வாழலாம் ; தன்மானத்தோடு வாழலாம் என்ற உணர்ச்சியை உருவாக்கிய பெருமை காமராசரைச் சேர்ந்தது என்று சொன்னால் அது மிகையாகாது.

அண்ணாசாலையில் காமராசருடைய பெயரால் திடல் ; அதைப் போலவே அண்ணாவின் சமாதியும் காந்தியடிகளின் சிலையும் இருக்கின்ற கடற்கரைச் சாலை இனிமேல் காமராசர் சாலை என்று வழங்கப்படும்.''

—முதல்வர் டாக்டர் கலைஞர்.

''காமராசரின் எதிர்பாராத மறைவு நாட்டிற்குப் பேரிழப்பாகும். உழைப்பால் உயர்ந்தவர். தியாகம், பொதுத் தொண்டிற்கு எடுத்துக் காட்டாகத் திகழ்ந்தவர். சமூகத் தொண்டிற்குத் தம்மையே ஒப்படைத்துக் கொண்ட அந்தத் தீரரின் எதிர்பாரா மறைவு, என்னைப் பெரும் துயரில் ஆழ்த்திவிட்டது. அன்னார் மறைவுக்கு என் இறுதி அஞ்சலியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.''

—நாவலர் டாக்டர் நெடுஞ்செழியன்.

''இருபது ஆண்டுகளுக்கு மேலாக இந்திய அரசியல் களத்தில் தலை சிறந்து விளங்கியவர் காமராசர். அவரது இராச தந்திரங்களினாலும், அரசியல் மதியூகத்தினாலும் நெருக்கடியான நேரங்களில் எல்லாம் நாட்டைக் காத்தவர். இந்திய மக்களின் விமோசனத்தை உருவாக்கியவர். முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக அவரது அன்பைப் பகிர்ந்து கொண்டேன். அவரது மறைவு எனக்குச் சொந்த இழப்பேயாகும்.''

மத்திய நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம்.

---

அண்ணல் காந்தி யடிகள்நெறி
அயரா துழைத்த திருத்தொண்டர்!
எண்ணம் எலாம்இந் தியநாட்டின்
ஏற்றம் குறித்தே கொண்டிருந்தோர்!
உண்மைத் தியாகப் பெருஞ்சுடராம்
உத்தமர்! நற் பெருந்தலைவர்!
திண்மைக் கடமை வீரர்! திறற்
காம ராசர் புகழ் வாழ்க! !

—ஆசிரியர்.

# இராமாநுசரின் முத்தமிழ்ப் புலமை

பேராசிரியர்
திரு இரா. அரங்கராசன் எம்.ஏ., பி.டி.,

**இதத்தாய் :**

திருவாய்மொழியாகிற தமிழ் மறையை ஈன்றெடுத்த முதல்தாய் சடகோபராகிய நம்மாழ்வார்; அத்தமிழ்மறைக்குழவியைப் பல் வகையாலும் போற்றி வளர்த்தவர் இராமாநுசராகிய எம்பெருமானார். அங்ஙன் போற்றி வளர்த்தற்கு எம்பெருமானார் மொய்ம்புடன் முயன்றதாக அறியப்படுகிறது. மொய்ம்பாவது வலிமை. சிறுகுழவியை வளர்த்தற்குப் பெருவலி தேவையோ என்று நினைக்கலாம். ஆம், 'ஸம்ஸ்க்ருத முரணராய்' ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் 'பாஷாந்தரத்தில் இயன்றவை' என்று தாழ்வாக நினைத்தவர்களிடையே தமிழ்மறையின் மேன்மைகளை உணர்த்தி அஃதோடு அமையாது வடமொழி வேதங்களோடு தமிழ்மறையும் திருக்கோயில்களில் ஒலிக்கவும் தவழவும் செய்ய இராமாநுசர் அரிதின் முயன்று தொண்டாற்றினர்; அத்தொண்டியற்றவே பெருவலி தேவைப்பட்டது எம்பெருமானார்க்கு. இதனை ஒரு பாடலில் வலியுறுத்தி விளக்குகிறார் கூரத்தாழ்வான் குமாரரான பராசர பட்டர்:

வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ் மறைகள் ஆயிரமும்-ஈன்ற
முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத் தாய் இராமாநுசன்.

ஆழ்வாருடைய அருளிச்செயலான திருவாய்மொழிக்கு நாதமுனிகள் தொடக்கமான ஆசாரியர்கள் அர்த்தநிர்ணயம் செய்து போந்தனர். அதுவும் இராமாநுசருக்குத் திருமாலையாண்டான் என்ற ஆசாரியரின் மூலம் கிடைத்தது. மூலநூலான திருவாய்மொழிக்கு விரிவுரை ஒன்று எழுதுதல் வேண்டும் என்ற இன்றியமையாமையினை எம்பெருமானார் உணர்ந்தார். விரிவுரை ஒன்றே பிற்காலத்துப் பாடபேதங்கள் பெருகாது அணையிடவல்லது. திருக்குறளுக்குப் பாட பேதங்கள் மிகமிகக் குறைவு; கம்பரது இராமகாதைக்குப் பாடபேதங்கள் மிகமிக நிறைவு. பரிமேலழகரின் உரை திருக்குறளை அரண் செய்தது. அங்ஙனம் கம்பராமாயணத்துக்கு அரண்செய்வார் முற்காலத்துத் தோன்றவில்லை போலும்.

இராமாநுசரின் ஆணையால் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பார் முதன் முன்னம் திருவாய்மொழிக்குச் சுருக்கமான தெளிவுரையொன்று அருளிச் செய்தார். இராமாநுசரே ஒருரை வரைந்திருக்கலாகாதோ? அவர் வரைந்திருப்பின் பின்னேர் விரித்துரைத்து விளக்கவுரைகள் எழுதத் துணியார். திருக்குருகைப்பிரான் பிள்ளானைப் பின்பற்றிப் பூருவர்களான பெரியோர்கள் நால்வர் திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் அருளிச் செய்தனர். அவ்வியாக்கியானங்கள் அவதரித்த வரலாற்றினை மணவாள மாமுனிகள் தாமியற்றிய உபதேச ரத்தினமாலை என்ற அரிய நூலில் குறிப்பிட்டிருக்கிறார். திருவாய்மொழிக்கு அரண் செய்யத் தோன்றிய ஐந்து வியாக்கியானங்களிலும் இராமாநுசருடைய விளக்கங்களே வலியூட்டப் பெற்றிருக்கின்றன.

செந்திறத்த தமிழில் இயன்ற திருவாய்மொழிப் பாசுரங்களுக்குப் பொருள் காண வேண்டுமானல், முத்தமிழ் இலக்கணங்களையும் முறையே கற்றுத் துறை போயிருத்தல் வேண்டும். தமிழ் மறையின் இதத்தாய் இராமாநுசர் முத்தமிழிற் புலமை படைத்திருந்தாரா? முத்தமிழிலும் புலமை படைக்கப் பெற்றிருந்ததோடு மட்டுமன்றி இராமாநுசர் தமிழிலக்கண வரம்புகளுக்குப் பெருமதிப்புக் கொடுத்துப் பாராட்டினர்.

**இராமாநுச நூற்றந்தாதி :**

இராமாநுசரின் தமிழ்ப் புலமையை அளந்து அறிவிக்கும் நூல்கள் உளவோ என்று ஆராயும் வேட்கை அடுத்தாற்போல் எழுகிறது. இராமாநுசர் காலத்தே வாழ்ந்த கருடவாஹன பண்டிதர் என்ற பெரியார் வடமொழியில் காப்பியக்கூறுகள் மிகுந்த 'திவ்ய சூரி சரிதம்' என்ற ஒரு நூலை எழுதினர். அந்நூல் இராமாநுசரின் வாழ்க்கைச் செய்திகளைச் சுவைபடக் கூறுகிறது. ஆயினும் இராமாநுசருக்குத் தமிழ் நூல்களில் பயிற்சியுண்டு என்ற செய்தி அந்நூலில் கூறப்படவில்லை.

இராமாநுசரின் காலத்திலேயே அமுதனர் என்ற பெரியார், திருவரங்கத்தில் வாழ்ந்து வந்தார். அவர் தமிழிற் பெரும் புலமை எய்திக் கவி இயற்றும் ஆற்றலும் பெற்றிருந்தார். அவர் கூரத்தாழ்வானை அணுகிச் சீடரானர். ஆசிரியரான கூரத்தாழ்வான் மூலமாக அமுதனருக்கு இராமாநுசரின் தொடர்பு கிட்டியது. இராமாநுசர் ஆழ்வாரின் அருளிச் செயலான திருவாய்மொழிக்கு விரிவுரை அருளிச் செய்ததை அமுத

# அருள்மிகு கபாலீசுவரர் திருக்கோயில்

## திருமயிலை, சென்னை-4.

### நித்திய பூசைக் கட்டளை

அருள்மிகு கற்பகாம்பிகை உடனுறை கபாலீசுவரர் கோயிலுக்குப் 'பூசைக் கட்டளை' என்ற புதியதொரு திட்டம், வழிபடுவோர் விரும்பும் வண்ணம் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. அதன்படி ஒருவர் ரூ. 1,000/- உபயமாகச் செலுத்தினால் அதை வங்கியில் நிரந்தரமாக முதலீடு செய்து, அதிலிருந்து வரும் வருவாயிலிருந்து ஒவ்வொரு ஆண்டும் உபயதரர் குறிப்பிட்ட நாளில் அன்றுட பூசை நைவேத்தியச் செலவுக்குப் பயன்படுத்தப்படும். அன்று உபயதாரருக்குச் சிறப்பான ஆலய மரியாதை வழங்கப்படும்.

ரூ. 1,000/- செலுத்தி இத்திட்டத்தில் உறுப்பினராகச் சேருவதன் மூலம் இவ்வாலயத்தின் ஒருநாள் ஆலய பூசைச் செலவினை ஏற்றுக் கொள்வதோடு, அன்றைய பூசையினால் ஏற்படும் புண்ணியப் பலனையும் அவர்கள் எய்தியவர்கள் ஆவார்கள். எனவே இத்திட்டத்தின் மூலம் பலன் பெறுபவர்கள் எண்ணிக்கை 365 என்பதால் இந்தத் திட்டத்தில் சேர விரும்புபவர்கள் உடன் ரூ. 1,000/- செக் மூலமாகவோ, டிராப்ட் மூலமாகவோ கீழ்க் கையொப்பமிட்டவரிடம் செலுத்தக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கி. சிதம்பரம், பி.ஏ.,

உதவி ஆணையர்—நிர்வாக அதிகாரி.

னர் அருகிருந்து பல்காற் கேட்டிருந்தார். அவ் விரிவுரை விளக்கங்களைக் கேட்டதும் அமுதனாருக்கு இராமாநுசரிடத்துப் பேரன்பும் பெருமதிப்பும் அளவிறந்து பெருகியது. இராமாநுசரின் செந்தமிழ்ப் பயிற்சியை அறிந்த அமுதனார் வியந்தார். வியந்த அமுதனர் நாப் படைத்த பயனை எய்த விரும்பி இராமாநுசரின் பெருமைகளை விரித்துரைக்கும் ஓர் அந்தாதி நூலை இயற்றி அதனை இராமாநுசரிடமே அடியுறையாக வைத்தார். வியாச பராசர மஹரிஷிகள் செய்த வடமொழிக் கலைகளில் இராமாநுசர் எய்தியிருந்த புலமைத் திறத்தைப் பாராட்டியிருந்தார். இராமாநுசர் அந்நூலைத் திருக்கண் சார்த்தித் திருவுள்ளம் நொந்தார். ஆயினும் ஒன்றும் கூறிற்றிலர். இராமாநுசரின் திருவுள்ளக் குறிப்பை நுனித்துணர்ந்த அமுதனார் பொருக்கெனச் சென்று மீட்டுமொரு அந்தாதி நூலைப் பாடி இராமாநுசர் திருமுன்பே சமர்ப்பித்தார். அதில் இராமாநுசருக்கு ஆழ்வார்கள் மீது அளவு கடந்த மதிப்பு உண்டு என்றும் அருளிச் செயல்களிலே மூழ்கும் திறம் உண்டு என்றும் விரித்தெழுதியிருந்தார். இவ் [illegible]ண்டாம் நூற்றந்தாதி நூலே இராமாநுச[illegible] ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனையே இ[illegible]றும் இராமாநுச நூற்றந்தாதி என்று போற்றி வருகிறோம். இந்நூல் ஆழ்வார்களின் அருளிச் செயல்களான திவ்வியப் பிரபந்தத்துக்குச் சமமாக வைத்துப் போற்றப்படுகிறது. இராமாநுசரே திருச்செவி சாய்த்துக் கேட்ட நூலாதலால் அமுதனாரின் வார்த்தைகள் பிரமாணங்களாகும். ஆதலின் இராமாநுச நூற்றந்தாதி ஒன்றே இராமாநுசரின் தமிழ்ப்பற்றைத் தெளிவுபடுத்தப் போதியதாகும்.

**முத்தமிழ் வல்லவர் :**

இராமாநுசர் எல்லையில்லாத அறநூல்களின் வரம்பு கண்டவர்; அதனினும் சிறப்பாக நான்கு வேதங்களையும் ஓதியுணர்ந்தவர்; அதனினும் சிறப்பாக முத்தமிழிலும் வல்லவர் என்று அமுதனார் தெளிவுபடுத்துகிறார்.

சொல்லார் தமிழ்ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லை
இல்லா அறநெறியாவும் தெரிந்தவன் எண்ணருஞ்சீர்
நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்பிக்
கல்லார் அகலிடத்தோர் எது பேறென்று காமிப் பரே.

(இராமாநுச நூற்றந்தாதி. 44)

**இயற்றமிழ்ப் புலமை :**

திருவாய்மொழிக்குப் பூருவர்களான நம் முன்னோர்கள் எழுதிய விரிவுரைகளில் இராமாநுசரின் விளக்கங்களை அப்படியே சிறிதும் மாற்றாமல் காட்டுகின்றனர். அவ்விளக்கங்களே நிர்வாகங்கள் என்று வழங்கப்படுகின்றன. திருவாய்மொழியில் சில பாடல்களுக்குத் திருமாலையாண்டான் கூறிய பொருளை இராமாநுசர் ஏற்க மறுத்துப் பொருத்தமான பொருளைத் தாமே அருளிச் செய்திருக்கிறார். அவற்றை விசுவாமித்திர சிருஷ்டி என்று கூறித் திருமாலையாண்டான் சினங்கொண்டபோது திருக்கோட்டியூர் நம்பிகள் ஒருண்மையை உணர்த்தத் திருமாலையாண்டான் சினந்தணிந்தார். அவ்வுண்மை யாது? ஆளவந்தாருக்கு இராமாநுசர் ஏகலைவனைப் போன்ற சீடராவர். இராமாநுசர் நெஞ்சில் தோற்றின அர்த்தங்கள் எல்லாம் ஆளவந்தார் கூறியனவேயாம் என்பது திருக்கோட்டியூர் நம்பிகள் உணர்த்திய உண்மையாம். மேலும் இராமாநுசர் கூறிய திருத்தங்கள் எல்லாம் தமிழ் மரபுகளுக்குப்பொருந்துவதற்காகவே என்பதும் அறியத்தக்கது.

அதனை ஓர் எடுத்துக்காட்டால் விளக்குகின்றேன்.

**ஆழ்வார் வண்டுவிடு தூது :**

திருவண்வண்டூர்ப் பதிகத்தில் நம்மாழ்வார் சில வண்டுகளை எம்பெருமானிடத்துத் தூதாக அனுப்புகிறார். நம்மாழ்வாராகிற பராங்குச நாயகி தலைமகளாகிற எம்பெருமானைக் காதலித்துப் புணர்ந்து அவ் எம்பெருமான் பிரிந்து சென்றபோது ஆற்றாதிரங்கி அவனிடத்துத் தூது அனுப்புகிறாள் சில வண்டுகளை. பராங்குச நாயகியைக் காதலித்துக் கூடினவன் யார் தெரியுமோ? தயரதன் பெற்ற மரகத மணித்தடமான இராமனே அவன்! இந்த இப்பிறவியில் இருமாதரைச் சிந்தையாலும் தீண்டேன் என்று விரதங்கூறிய சக்கரவர்த்தித் திருமகனை இராமனே பராங்குச நாயகியைக் காதலித்தான். இராமன் ஏந்திய வரிவில்லையும் நீண்டதிருத்தோள்களையும் கண்ட பராங்குச நாயகி அவனுடைய பேரழகில் மதிமயங்கினாள்; மதி மயங்கிக் கூடியும் விட்டாள்.

பராங்குச நாயகியைக் கூடிக் களித்த பிரானை பெருமாள், தன் காரியம் தலைக்கட்டியது என்று மகிழ்ந்து நாயகியை மறந்து புறத்தே அகன்றான். புறமே போந்தவன் வெகு தூரம் சென்று பம்பைக்கரையில் திருவண்வண்டூரிலே சென்று நின்றான்.

இங்கே திருக்குருகூரில் பராங்குச நாயகி இட்டகால் இட்டகையளாய் கட்டமே காதல் என்று மூர்ச்சித்துத் தோழியர் தேற்றத் தெளிந்து சில வண்டுகளைக் கண்டு அவற்றின் கால்களிலே விழுந்து கெஞ்சுகிறாள். பராங்குச நாயகி வண்டுகளிடத்தில் சொல்லிய செய்தி யாது?

வேறு கொண்டும்மை யான் இரந்தேன் வெறி வண்டினங்காள்!
தேறுநீர்ப்பம்பை வடபாலைத் திருவண் வண்டூர்
மாறில் போரரக்கன் மதில் நீறெழச் செற்றுகந்த
ஏறுசேவகனார்க்கு என்னையும் உளள் என்மின்களே

(திருவாய்மொழி 6-1-10)

"பரிமளம் மிக்க வண்டினங்களே! உங்களிடத்தில் விலட்சணமான பிரதிபத்தி பண்ணி அடியேன் ஒன்று வேண்டுகிறேன். தெளிந்த நீரையுடையதான பம்பையாற்றின் வடபாலுள்ள திருவண்வண்டூரிலே எழுந்தருளியிருக்கின்றவனும், நிகரற்ற யுத்தம் செய்யவல்ல அரக்க

ஞகிய இராவணனுடைய இலங்கையைவென்று திருவுள்ளம் உகந்தவனும், மஹாவீரனுமான இராமனிடத்திலே சென்று பராங்குச நாயகி யாகிய நான் இன்னும் உயிரோடு இருக்கிறேன் என்று அறிவியுங்கள்.''

இது திருமாலையாண்டாரின் விளக்கம்.

பராங்குச நாயகி இறந்துவிட்டதாக நினைத்து இனிச் சென்று பயனில்லை என்று கருதித் திரு வண்வண்டூரிலே வில்லுங்கையுமாக நித்திய வாசமாக எழுந்தருளிவிட்டான்; அதனால் நாயகியையும் மறந்து விட்டான்; அந்நிலை யில் நாயகியான ஆழ்வார் தாம் தம் உயிரைக் கையிற் பிடித்துக் கொண்டு நாயகனின் வரவை எதிர்நோக்கித் தவம் செய்து கொண்டிருப்ப தையே தூது மொழி குறிப்பிடுவதாகத் திரு மாலையாண்டார் கருதினர்.

மேலெழப் பார்த்தால் இக்கருத்தில் விரோதம் ஒன்றுமில்லை. ஆழ்ந்து கருதினால் தமிழ் அகப்பொருள் மரபுக்கு இக்கருத்து முரண்பாடாகத் தோன்றுவதை அறியலாம்.

இராமாநுசர் திருமாலையாண்டானுடைய நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அதற் குரிய காரணத்தையும் தம் ஆசிரியரிடத்தில் விண்ணப்பம் செய்தார்.

**முரண்பாடு :**

நாயகி இன்னும் உயிரோடு வாழ்கிறாள் என்பதை, ஒரு வண்டு சொல்லியா தலைவன் அறிய வேண்டும்? அவள் உயிர் நிலைத்து நிற் பதை அவன் உயிர் அறியாதோ? இப்படி களிலெல்லாம் இராமாநுசர் சிந்தித்துத் திரு மாலையாண்டாரிடத்தே விண்ணப்பித்ததாவது ''அழகிது, ஆகிலும் இன்றியமையாமை என்று தமிழரதொரு பிரவாதமுண்டு. அதா கிறது, ஒரு தலையுண்டானால் ஒரு தலையின்றிக்கே இராது; இரண்டு தலையுமுண்டாதல், இரண்டு தலையுமின்றிக்கே ஒழிதல் இத்தனையாயிற்று. அதில் தாமுளராகையாலே இத்தலையுமுண் டென்று நிச்சிதம்; ஆன பின்பு ப்ரதிகூலித் தாரைக் கிழங்கெடுத்துப் போகட்டு அநுகூலித் தார் தலையிலே முடியை வைத்து கிருதக்ருத்ய ராய் இனிக் கர்த்தவ்ய சேஷமில்லை என்றிருக் கிறவர்க்கு இன்னமும் ரக்ஷ்யவர்க்கமொன்று உண்டென்று சொல்லுங்கோள்,''

விளக்கம்: அகப்பொருள் தலைவனும் தலைவியும் ஒருயிரும் ஈருடலுமாக நிற்பவர்கள். தலைவன் உயிர்க்கு இறுதி விளையுமானால் எதிர்த் தலையான தலைவியின் உயிர் தானாகவே நீங்கி விடும். ஒன்று வீழ்ந்து மற்றொன்று உயிர் வாழ்வது என்பது அகப்பொருள் மாந்தரில் இல்லை. தலைவனுயிர் நீப்பினைச் செவி ஏற்பதன் முன்னமே தலைவியின் உயிர் நீங்கிவிடும். இவ் வியல்பைத் தலை மூதானந்தம் என்பர். இவ் வியல்புடையோர் தலையாய கற்பினர்; இவர் 'ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது, இன்னுயிர் ஈவர்.' (மணிமேகலை 2-43) இத்தகை யோரே அன்பினால் பிணைந்தவர். இனி இராமா நுசர் கூறிய 'இன்றியமையாமைக் கொள்கை' எங்கே உள்ளது? ஒருயிர் இன்றி மற்றொருயிர் அமையாது என்ற அக்கொள்கை தமிழ் நூல் களிற் சொல்லப்பட்டுள்ளனவா? தமிழரது பிரவாதம் (சிறப்புடைக்கூற்று) என்று இராமா நுசர் காட்டுகின்றாரே?

இறையனார் களவியல் முதற் சூத்திரத்தின் உரையில் நக்கீரர் இக்கொள்கையினைச் சுட்டிக் காட்டுகிறார்.

''அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்
கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்''

என்ற அம்முதற்சூத்திரத்தின் உரையில் அன்புக்கு இலக்கணம் கூறும்போது, 'அவன் இறந்துபட்டவாறே தானும் இறந்துபட்டவழி அன்பினானே ஆயிற்று எனக் கொள்க' என்று நக்கீரர் குறிப்பிடுகிறார். ஆக, தலைவன் தலைவி யருள் இருவரும் வாழ்வது அன்றி இருவரும் வீழ்வது என்பதே அன்பின் அடிப்படையாகும். இனி நக்கீரர் வேறோரிடத்து 'இன்றியமை யாமை' என்று இவ்வடிப்படையைக்குறிப்பிட்டு வழங்கியிருக்கிறார்.

'தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல் (களவியல்)

என்ற சூத்திரவுரையில் வேட்கையை விளக்கும் போது, 'வேட்கை என்பது என்னை எனின் ஒருவர் ஒருவரை இன்றியமையாமை' என்று தெளிவாக்குகிறார். மேலும் ''இவள் எவ்விடத் தும் தன் தன்மை என்பது ஒன்றிலள், என் தன்மையளே; யான் ஆற்ற ஆற்றி யான் ஆற்றாத இடத்துத் தானும் ஆற்றாளாம். ஆகலான் யான் பிரிந்தவிடத்து என் குறிப்பன்றி இறந்து படாள்'' என்று நக்கீரர் எழுதிச் செல்வதும் சிறப்புடன் கருதத்தக்கது.

இச்சூத்திரவுரைகளையே இராமாநுசர் கருத் திற்கொண்டு தமது விளக்கத்தை அளித்தார். மேலும் கலித்தொகையில் வரும் ஒரு பாடற் பகுதியும் இராமாநுசர் கருத்தில் நின்றிருக்க வேண்டும்.

பிரிந்து நெடு நாளாகியும் தலைவன் வரக் காணாத தலைவி நெஞ்சு கலங்குகிறாள். பொரு ளீட்டச் சென்றவன் குறித்துச் சென்ற கார் காலம் வந்தது; அவன் வரவில்லை. அப்போது தலைவியின் அருகிருந்த சிலர் அறியாதார், தலைவன் ஒருக்கால் இறந்துபட்டனனோ என்று கூற, துணுக்குற்ற தலைவி அவரை நோக்கி,

''இன்னுயிரன்னாற்கு எனைத்தொன்றும் தீதின்மை
என்னுயிர் காட்டாதோ மற்று?''

(நெய்தற்கலி. 26).

என்று வெகுண்டுரைத்தாள். யான் வாழவே என் இன்னுயிர்த் தலைவனும் தீதின்றி வாழ் வான் என்று உறுதி கூறும் தலைவியைக் கலித் தொகையில் காண்கிறோம்.

இனி ஆழ்வார் பாசுரத்திற்கு வருவோம். பராங்குச நாயகி தீதின்றி உயிர் வாழ்கிருள் என்பது திருவண்வண்டூரில் உறையும் எம் பெருமானுக்கு நன்கு தெரியும். ஆயின், 'என்னையும் உளள் என்மின்களே' என்ற தூது மொழிகளுக்கு என்ன பொருள்? ஏறு சேவகனு ரான இராமன் ஒரு பெண்பிள்ளையான சீதை பொருட்டாகச் சிலைவளைத்தும் அணைகட்டியும் போருடற்றியும் அரக்கரார் விமானப் போரில் வெற்றிபுனைந்தும் பெருப்பெருத்தசேவகங்களைச் செய்து மின்னிடையாளைக் கூடி இனிச் செய்ய வேண்டுவது ஒன்றுமில்லை என்று கருதிக் கிருதக் கிருத்தியனுகத் திருவண்வண்டூரிலே எழுந்தருளி விட்டானே! சனகன் பெற்ற அமிழ்தான சானகியைத் தவிரப் பராங்குச நாயகி ஒருத்தியும் திருக்குருகூரான அசோக வனத்தில் கண்ணும் கண்ணீருமாக அவனுடைய வரவையும் ரட்சகத்தையும் எதிர்நோக்கி உள் ளாள் என்பதுவே, ஆழ்வார் வண்டுகளிடத்துச் சொல்லிய தூதுரைகளாம் என்று இராமாநுசர் கருதினுர். என்னையும் என்றவிடத்து வரும் உம்மையே, இராமாநுசருக்கு நல்ல விளக்கத் தைத் தெளிவித்தது. அவ்விளக்கம் அகப் பொருள் மரபுக்கு முற்றிலும் பொருந்திக் கிடக்கும் அழகைப் புலவர் பெருமக்களான தமிழர்கள் அறிந்து மகிழ வேண்டும். தமிழ் நெறிக்கு எத்துணை மரியாதையை இராமாநுசர் கொடுத்திருக்கிருர் என்பதை நோக்க, அவர்தம் தமிழ்ப்பற்று புலனுகிறது.

**இசைத்தமிழ் நாடகத்தமிழ்ப் புலமை :**

திருவரங்கம் பெரியகோயிலில் அரையர்களைக் கொண்டு ஆழ்வார் பாசுரங்களைப் பண்ணும் தாளமும் பொருந்த இசைக்கச் செய்தார் இராமாநுசர். ஒருமுறை ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர்'அன்னை என் செய்யிலென்' (தழுவாய் 5-3-6) என்ற பாசுரத்தை இசை யுடன் பாடி நடித்துக் காட்டினுர். அப்பாசுரத் தில் நாயகியான ஆழ்வார் தாம் வாசுதேவனு டைய வலையுள் அகப்பட்டுத் தவிப்பதாகத் தோழியிடம் கூறுகிருர்.

'முன்னை அமரர் முதல்வன் அகப்பட்டேன் வண்
துவராபதி
மன்னன் மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே'

இவ்விடத்தை அரையர் அபிநயிக்கும்போது உத் தரீயத்தை மேலிட்டுத் தலையாகக் காட்டினுர். அதனைக் கண்ணுற்ற இராமாநுசர் வாசுதேவ னுடைய வலை வஸ்திரம் போன்று காட்டத் தக்கது அன்று; அவ்வலை எளிதில் கடக்க வொண்ணுதது என்று ஆழ்வாரின் உட்கருத் தினை அறிந்தார் இராமாநுசர்.

வாசுதேவனுடைய திருக்கண்ணழகில் தோற்றுர் மீள்வதுண்டோ? எம்பெருமானு டைய செந்தாமரைக் கண்களையே ஆழ்வார் வலை என்று குறிப்பிடுகிருர். அதனையுணர்ந்த இராமாநுசர் தாமே எழுந்து திருக்கண்களைக் காட்டி அபிநயித்தாராம். இச்செய்தியை நம் பிள்ளை தமது பேருரையில் குறிப்பிட்டிருக் கிருர். எனவே இராமாநுசர் மெய்ப்பாட்டிய லும் நாடக இயலும் நன்கு அறிந்தவர் என் பதை எளிதில் உணரலாம்.

**முடிவுரை :**

மேற்கூறிய எடுத்துக் காட்டுக்களைக் காண் பார்க்கு இராமாநுசர் முத்தமிழ் வித்தகர் என் பதை அறிய உணர்ச்சி பொங்காமல் இருக்க முடியாது. இராமாநுசர் தமிழ்ப்பற்று மிகுந்த வர்; தமிழ் நெறிகளைப் பேணிக்காத்த பெரி யார். அவருடைய அறிவு மேம்பாட்டினை அமுத ஞர் உணர்ந்து உணர்ச்சி பொங்கச் 'சொல்லார் தமிழொரு மூன்றும் தெரிந்தவன்' என்று பாராட்டினுர்; ஒரு புலவனே மற்ருெரு புலவ னுடைய பெருமையைப் பாராட்ட இயலும்! *

---

## "பண்ணிசைந்த பதிகங்கள்"

(செய்திச் சுருக்கம்)

நமது தமிழகத்தின் சமயம்—தத்துவம்—இலக்கியம்—வரலாறு—கலை—பண்பாடு முதலிய பல் வேறு துறைகளிலும், சைவ நாயன்மார் அருளிய தேவார திருவாசகத் திருமுறைப் பாடல்களும், திருமால்நெறிப் பெருஞ் சான்ருேர்களாகிய ஆழ்வார்கள் பாடிய திவ்வியப் பிரபந்தப் பாடல்களும், மிகவும் சிறப்பிடம் பெறுகின்றன. அவற்றின் அருமைபெருமைகளைத் தமிழர் அனைவருமே உணர்ந்து போற்றிப் பாராட்டிப் பயன்கொள்ளக் கடமைப்பட்டவராவர். எனவே, அம்முறையில் அவற்றின் சிறப்பினை அனைவர்க்கும் உணர்த்தும் வகையில், ''பண்ணிசைந்த பதிகங்கள்'' என்னும் சிறப்பு நிகழ்ச்சி யினைச் சென்னை அனைத்திந்திய வானெலி நிலையம், 30-9-75 அன்று ஏற்பாடு செய்து, அனைவரும் கேட்டு மகிழும் வகையில் ஒலிபரப்பியது. இந்நிகழ்ச்சியில், வெவ்வேறு திருமுறைகளிலிருந்து மொத்தம் 11 திருமுறைப்பாடல்கள் தேர்ந்தெடுத்துப் பாடப்பெற்றன. இவற்றிற்குத் திரு மீ. பா. சோமசுந்தரம் அவர்கள், மிகவும் அழகிய இனிய முறையில், இணைப்புரை நிகழ்த்தினுர். இசைப் பேரரசி திருமதி சேலம் எஸ் ஜெயலெட்சுமி, திருமதி ஜானகி சுவாமிநாதன், திருநெறித் தமிழிசை வேந்தர்—திரு ஆ. விநாயக முதலியார், திருமுறை இசைப்பெருஞ்செல்வர்—திருக்களர் சுந்தரேச தேசிகர் ஆகியோர், இந்நிகழ்ச்சியில் கலந்து கொண்டு அருமையாகப் பாடி மகிழ்வித்தனர். சமய உணர்வும் பக்தி நெறிப் பண்பாடும் வாய்ந்த அனைவருக்கும், இந்நிகழ்ச்சி ஒரு சிறந்த அரும்பெற் கலைவிருந்தாக அமைந்து விளங் கியது. இந்நிகழ்ச்சி அமைப்புக்கு முதன்மையும் மூலகாரணமும் ஆக விளங்கிய திருமதி சேலம் ஜெய லட்சுமி அம்மையார் அவர்களின் இசைக் கலைத்திறமும், சைவ நலப்பண்பாட்டு உணர்வும், பெரிதும் போற்றுதற்குரியன. சென்னை வானெலி நிலையம், இத்தகைய சிறந்த சமயநலஞ்சான்ற பக்தி, நெறி உணர்வு மிக்க, தமிழகப் பண்பாட்டு நலம் வளர்க்கும் அரிய இனிய நிகழ்ச்சிகள் பலவற்றை, மேன் மேலும் அவ்வப்போது ஏற்பாடு செய்து ஒலிபரப்ப முன்வருமென்று ஆர்வத்துடன் எதிர்பார்ப்போமாக!

—ஆசிரியர்.

# "பத்து மாற்றுத் தங்கம்"

திரு கி. வா. ஜகந்நாதன், M.A.

வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகராகிய தாயுமானவர் தம்முடைய திருப்பாடல்களில் மிக நுட்பமான கருத்துக்களை அழகாக வெளியிட்டிருக்கிறார். உருவக உவமைகளை ஆண்டு, பொருளைத் தெளிய வைக்கிறார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கும் ஒன்றையடுத்து ஒன்று வளர்பவை. எல்லாம் ஞானத்தில் நிறைவுபெறும். இவற்றை ஓர் உவமையால் மிகச் சுருக்கமாகப் புலப்படுத்துகிறார் தாயுமானவர்.

''விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே!''

என்பதில் அந்த நான்குக்கும் முறையே அரும்பு, மலர், காய், கனி ஆகிய நான்கையும் உவமையாகச் சொல்லி விளக்குகிறார்.

ஞானசிரியனுடைய பேரருளால் மாணாக்கன் பக்குவத்தில் உயர்ந்து இறையருளைப் பெறுகின்றான். இதைச் சாத்திரங்கள் பலபடியாகப் பேசுகின்றன. ஆன்மா, ஆணவம் என்னும் மூலமலத்தோடு இருக்கிறது. அதை அகற்றினால் இறைவனோடு ஒன்றி விடலாம். ஆன்மாவும் ஆணவமும் பிரிக்க ஒண்ணாதபடி இரண்டறக் கலந்து நிற்கின்றன. ஆணவம் போனால் இறைவனோடு இரண்டறக் கலந்து நிற்கலாம். இதை மிக எளிதாகச் சொல்லி விடுகிறார் தாயுமானவர்.

''ஆணவத்தோ டத்துவிதம் ஆனபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதம் சாருநாள் எந்நாளோ?'

என்ற அழகிய கண்ணி இந்தக் கருத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறது.

ஆணவம் என்பது உயிரோடு இயல்பாகவே ஒட்டிக் கிடக்கிறது; செம்பிலே களிம்புபோல ஒன்றியிருக்கிறது. இரசவாதம் செய்பவர்கள் செம்பைப் பொன்னாக்குவார்கள். கலம்பகத்தில் சிந்து, சம்பிரதம் என்று இரண்டு வேறு உறுப்புக்கள் வரும். சித்து என்பது இரசவாதம் செய்பவர் செயல். செம்பை ரசத்தினாலும் மூலிகைகளாலும் பொன்னாக்குவது இரசவாதம். எந்தப் பொருளையும் வேறு பொருளாக மாற்றுவது சம்பிரதம். செம்பினின்றும் களிம்பு போனால் அது பொன்னாகிவிடும்.

ஞானசிரியனை இரசவாதம் செய்பவனாக உருவகம் செய்கிறார் தாயுமானவர். அநாதியாகவே ஆணவத்தோடு இணைந்த ஆன்மா, அநாதியாகவே களிம்போடு இணைந்த செம்பைப் போல இருக்கிறது. இந்த உடம்புக்குள் ஆன்மா வாழ்கிறது. ஞானசிரியன் தன்னுடைய தீட்சை வகைகளினால் ஆன்மாவுக்குப் பக்குவத்தை உண்டாக்குகிறான்; சிவஞானம் பெறச் செய்கிறான்.

இரசவாதம் செய்பவர்கள் மூசைக்குள் செம்பை வைத்துத் தழலைமூட்டிச் சூடேறச் செய்து உருக்குவார்கள். அந்த மூசைக்குக் குகை என்றும் ஒரு பெயர் உண்டு. அதில் களிம்பு தோய்ந்த செம்பை வைத்து உருக்கி அஃது உருகிக் குறிப்பிட்ட பக்குவம் அடையும் போது இரசவாத குளிகையை இட்டுத் தங்கமாக்குவார்கள். அந்தக் குளிகை இரசம், மூலிகைச்சாறு ஆகியவற்றால் அமைந்தது.

ஞானசிரியன் செய்யும் இரசவாதம் எப்படி நிகழ்கிறது என்பதைத் தாயுமானவர் சொல்கிறார். பிறப்பினால் அமைந்த இந்த உடம்பே குகை அல்லது மூசை. இதற்குள் உயிர் அல்லது பசு இருக்கிறது. அது செம்பைப் போன்றது. ஞானசிரியன் ஞானம் என்னும் அக்கினியை மூட்டி உருக்குகிறான். ஆன்மா உருகுகிறது; கனிகிறது.

கல்மனம் கொண்ட மனிதன், இறைவன் திருவருளால் அன்புபெற்றால் அவன் உருகுவான்; கனிந்து இறைவனிடம் ஈடுபடுவான். இந்தக் கனிவு அல்லது உருக்கமே அன்புக்கு இலக்கணம். ''நைந்துருகும் அடியார்'' என்று அப்பர் சுவாமிகள் பாடுவார்.

ஆசிரியனுடைய அன்பைப் பெற்றால் மாணாக்கன் மனம் உருகத் தொடங்கும். ஆசிரியனுடைய நல்லுபதேசத்தால் ஞானம் உண்டாக உண்டாக, மாணாக்கனுக்குச் கனிவு மிகுந்து வரும். அவ்வாறு கனிந்து பக்குவம் பெற்ற தருணத்தில் ஞானசிரியன் அருளைப்பெய்து அவனுக்கு இறையருள் இன்பத்தை நுகரும் நிலையை உண்டாக்குவான். செம்பை உருக்கிப் பக்குவமான நிலையில் இரசவாத குளிகையைப் பெய்து தங்கம் ஆக்குவது போன்றது இது. இதைத் தாயுமானவர் சொல்கிறார்.

''கருமருவு குகை அனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக இருத்தியே ஞானஅனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக்கிப்
பருவமத றிந்துநின் அருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து
பத்துமாற் றுத்தங்கம் ஆக்கியே பணிகொண்ட
பட்சத்தை என்சொல்லுவேன்!''

கருமருவு காயம், குகையனைய காயம் என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும். கருமருவு குகை என்று கூட்டிக் கருமை பொருந்திய மூசை என்றும் பொருள் கொள்ளலாம். உயிருக்குச் செம்பை உவமைகூறியதனுல் ஆணவ மலத்தையே களிம்பாகக் கொள்ள வேண்டும்; இஃது ஏகதேச உருவகம். யான் என்றது ஆன்மாவாகிய மாணுக்கனை. காண்தக இருத்தியே-தன் சந்நிதியில் கண்டு தொழும் அளவில் வைத்து; நயனதீட்சையும் பரிசதீட்சையும் செய்ததைக் குறித்தபடி. கனிவு பெற உள் உருக்கி-பக்குவம் உண்டாகும்படியாக என் உள்ளத்தை உருகச் செய்து. பருவம்-பக்குவம்; இருவினை ஒப்பு, மலபரிபாகம் என்னும் பக்குவங்கள். நின் என்றது ஞானுசிரியனை. பரிசித்து—குளிகையினுல் தொட்டு இணைத்து; அஸ்த மஸ்தக சையோகங்களைச் சொன்னபடி. வேதி செய்தல்—இரசவாதம் செய்தல். பணி கொண்ட என்பது ஒரு நயம். என்னை ஏவல் கொண்ட என்பது இயல்பான பொருள். தங்கத்தை ஆபரணமாகச் செய்து பூண்ட என்பது தொனிப் பொருள்.

இங்கே ஞானுசிரியனுல் ஞானம் பெற்றுப் பக்குவம் அடைந்த ஆன்மா பேரின்ப அநுபவத்தைப் பெற்றதையே உருவக வகையால் சொன்னுர். பத்தரை மாற்றுத் தங்கந்தான் சிறந்தது. இரசவாதிகள் சில சமயங்களில் மாற்றுக்குறைந்த தங்கத்தையும் செய்வதுண்டு, ஆனுல் பெரும்பாலும் பத்தரை மாற்றையுடைய தங்கத்தை உண்டாக்குவதே அவர்களுடைய பெருமைக்கு ஏற்றது.

அப்படி இருக்க, இங்கே பத்து மாற்றுத் தங்கம் என்று ஏன் சொன்னுர்? இது சிந்திப்பதற்குரியது.

ஞானுசிரியனுடைய திருவருளால் இம்மையிலேயே பேரின்பப் பெருவாழ்வைப் பெற்ற சிறப்பையே இப்பாடல் சொல்கிறது.

பேரின்பத்தை முக்தி என்று சொல்வார்கள். முக்தி இருவகைப்படும். சீவன் முக்தி, விதேக முக்தி என்று இரண்டு. சீவன் என்பது உயிர் உடம்பில் இருக்கும்பொழுது வழங்கும் பெயர். சீவனுக இருக்கும்போதே முத்தி இன்பம் பெறுவது உண்டு; அதாவது இந்த உடம்பில் இருக்கும்போதே முத்தி இன்பத்தை நுகர்தல். இதுவே சீவன் முக்தி.

''இத்தேகமொடு காண்பனே?''

என்று தாயுமானவரே அதைக் குறிப்பிக்கிருர். சங்ககாலத்திலேயே சீவன் முக்தியைத் தமிழர்கள் அறிந்திருந்தார்கள்.

''தவம்செய் மாக்கள் தம்உடம்பு இடாஅது
அதன்பயன் எய்திய அளவை மான''

என்று பத்துப்பாட்டில் வருகிறது; 'தவம் செய்யும் முனிவர்கள் இறந்து தம் உடம்பை நிலத்திலே கிடத்தாமலே, இந்த உடம்பு இருக்கும் போதே, அந்தத் தவத்தின் பயனுகிய முத்தியின்பத்தைப் பெற்றது போல' என்பதுபொருள். திருமுருகாற்றுப்படையில் 'பெறலரும் பரிசு' என்று நக்கீரர் குறிப்பிடுவது இந்தச் சீவன் முக்தியையே என்று தோன்றுகிறது.

விதேக முக்தி என்பது, இந்த உடம்பை உயிர் விட்ட பிறகு இறைவனேடு இரண்டறக் கலக்கும் நிலை. சீவன் முக்தர்கள் உடம்போடு இருப்பதனுல் அவர்களுக்குப் பிராரத்த வினை இருக்கும். பழுத்த புளியம்பழம் ஓட்டோடு ஒட்டாமலே இருப்பதுபோலச் சீவன் முத்தர்கள் உலகில் வாழ்ந்தும் மலத்தோடு தொடர்பற்று இருப்பார்கள். என்ருலும் அவர்களுக்கு இந்த உடம்பு இருக்குமட்டும் பிராரத்த வினை இருக்கும். ''பிராரத்தம் தனுவோடு ஏகும்'' என்பது சாத்திரம். ஆதலால் உடம்பு விடும்போது பிராரப்தம் விடும்.

விதேக முக்தி முடிந்த முடிவான நிலை. அங்கே உடம்பும் இல்லை; பிராரப்தமும் இல்லை. அது பத்தரை மாற்றுத்தங்கம் போன்றது. சீவன் முக்தியில் பிராரப்தம் இருப்பதனுல் அரைமாற்றுக் குறைந்து பத்து மாற்றுத் தங்கம் போல இருக்கும்.

இந்த நுட்பத்தை எண்ணியே தாயுமானவர் தமக்கு ஞானுசிரியன் திருவருளால் கிடைத்த சீவன் முக்தியை, ''பத்து மாற்றுத் தங்கம் ஆக்கியே பணி கொண்ட பட்சத்தை என் சொல்லுவேன்!'' என்று சொன்னுர்.





# கந்தர் அலங்காரம்



அருணகிரிநாதர், நம் செந்தமிழ் நாட்டின் பெருங்கடவுளாம் முருகனின் அடியார்களுள் தலை சிறந்த ஒருவர். ஒப்புயர்வற்ற சிறந்த அருட்பெருங் கவிஞர்.

''வருக்கைச் சுளையும் பொருக்கரை மாவும்
கொழுங்கனி வாழையும் செழுஞ்சுவைக் கன்னலும்
ஒருங்குதலை மயங்கிய அரும்பெருங் கலவையின்
அருஞ்சொல் வழக்கமும் திருந்திய நடையும்
வண்ண வேற்றுமையும் தண்ணெனும் ஒழுக்கமும்
ஒன்றி நிரம்பிய குன்றுத் திருப்புகழ்''

—மறைமலையடிகள்

என்று தமிழ்ப் பெருஞ்சான்றோர்கள் போற்றும் திருப்புகழ் என்னும் சந்த நலம் சான்ற செந்தமிழ்த் தெய்விகப் பாடல்களைப் பாடியருளியவர். அவர் பாடியருளிய நூல்களுள், கந்தர் அலங்காரம் என்பதும் ஒன்று. சிவபெருமானுக்குத் திருவாசகம் போல, முருகப் பெருமானுக்கு மிகவும் உவகை விளைவிக்கும் சிறந்த துதிநூல், கந்தர் அலங்காரம். ''கந்தர் அலங்காரத்தின் உட்பொருளை ஆய்ந்து கற்றுக் களிப்பதுவே, நம் தேகம் கலங்கா, அலங்காரம்'' என்று தணிகையுலா, கந்தர் அலங்காரத்தினைப் புகழ்ந்து போற்றுகின்றது.

சலங்காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்;
யமன் சண்டைக்கு அஞ்சார்;
துலங்கா நரகக்குழி அணுகார்;
துட்டநோய் அணுகார்;
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும்;
கந்தர் நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவிதான்
கற்று அறிந்தவரே''

என்னும் பாடல், கந்தர் அலங்காரத்தினை அன்புடன் காலை மாலை வேளைகளில் நியமமாகப் பாராயணம் செய்து, முருகனைத் துதித்து வழிபடுபவர்கள் அடையக் கூடிய, பல சிறந்த பேறுகளைக் குறித்துக் கூறுகின்றது.

இந்நூலானது, ஆங்காங்கே பல பாடல்களில் கந்தப் பெருமானின் கருணைத் திறனையும், வள்ளி தெய்வயானை யம்மையாரின் அருள் நலங்களையும், சேவல் மயில் வேல் ஆகியவற்றின் சிறப்புக்களையும், அழகுற அலங்காரமாக விவரித்து விளக்கிப் பாடுகின்றது. அதனால் இதற்குக் கந்தர் அலங்காரம் எனப் பெயர் அமைந்தது. இது நூறு பாடல்களைக் கொண்டது. அதற்கு மேலும் சில தனிப் பாடல்களும், இந்நூலின்கண் தொகுக்கப் பெற்று வழங்கி வருகின்றன.

தாம் பெற்ற அருள் நலனைக் கூறித், தமது அகமகிழ்ச்சியை வெளியிடும் பாடல்களின் இடையிடையே, தமது குறைகளைக் கூறித் தமக்கு அருள் சுரக்குமாறு வேண்டும் பல பாடல்களும் இதன்கண் காணப்படுதலின், இஃது ஒரே சமயத்தில் தொடர்ந்துபாடப்பட்டதன்று. ''உளங்குளிர்ந்த போதெல்லாம் உவந்துவந்து பாடுவனே'' என்றாற்போல, அப்போதைக்கு அப்போது தமது மனமும் தவமும் அமைந்த நிலைக்கு ஏற்ப, இஃது அருணகிரிநாதரால் பாடப் பெற்றதாகும்.

இந்நூலின் காப்புச் செய்யுள், திருவண்ணாமலைக் கோயிலில், பெரியகோபுரத்தின் வடக்குப் புறத்தில் எழுந்தருளி வீற்றிருக்கும் ''கோபுரத்து இளையனார்'' என்னும் முருகப் பெருமான் மீது அமைந்துள்ளது. இப்பெருமானே அருணகிரிநாதரைத் தடுத்தாட் கொண்டருளியவர். அருணகிரிநாதர்க்கு ''முத்தைத் தரு பத்தித் திருநகை'' என்று திருப்புகழ்க்கு அடியெடுத்துக் கொடுத்தவரும், இந்தக் ''கோபுரத்திளையனார்'' என்னும் பெருமானே ஆவர்.

நூலின் தொடக்கத்தில், விநாயகர் வணக்கம் அமைதல் வேண்டும் என்பது மரபு நெறி. எதனைப் பாடினும், எத்தெய்வத்தைப் போற்றினும், முருகனோடு சார்த்தி, முருகனை முதன்மைப் பொருளாகக் கொண்டே பாட வேண்டும் என்பது, அருணகிரிநாதர் கடைப்பிடித்த கொள்கை நெறி. இவ்விரு நன்னெறிகளையும் முரண்பட விடாமல், ஒரு சேர நன்கினிது போற்றி,

அடலருணைத் திருக்கோபுரத்தே
அந்த வாயிலுக்கு
வடஅருகிற் சென்று கண்டுகொண்டேன்:
வருவார்தலையில்
தடபடெனப் படு குட்டுடன்
சர்க்கரை மொக்கிய கைக்
கடதட கும்பக் களிற்றுக்கு
இளைய களிற்றினையே

என்று, பாடலின் பெரும்பகுதி விநாயகரைப் பற்றியும், ஆனால் அதன் முடிவான முதன்மைப் பகுதி, முருகப் பெருமானைப் பற்றியும், அழகுற

அமையுமாறு, அருணகிரிநாதர் பாடியிருக்கும் சதுரப்பாடு, பெரிதும் வியந்து போற்றுதற்கு உரியது.

கந்தர் அலங்காரம், சிறந்த இனிய செஞ்சொற்களால் இயன்றது; ஓதுதற்கு எளிய இனிய நல்ல கவிதை நடையில் அமைந்தது ; பக்திச் சுவை மிக்கது ; பயில்பவர் உள்ளம் கவரும் சொற்சுவை, பொருட்சுவைகள் நிரம்பியது; பல்லாயிரக் கணக்கான பக்தர்களால் நாடோறும் அன்புடன் பாராயணம் செய்யப்பட்டு வருவது. கந்தப் பெருமான் கருணையைப் பெறுவதற்கு விரும்பி, உருகி உருகி அருணகிரிநாதர், கந்தரலங்காரத்திற் பாடியுள்ள கவிதைகள் எவருள்ளத்தையும் கொள்ளை கொள்ள வல்லன.

தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழும் செழுஞ்சுடரே!
வைவைத்த வேற்படை வானவனே!
மறவேன் உனைநான்;
ஐவர்க்கு இடம்பெறக் கால்இரண்டு
ஒட்டி, அதில் இரண்டு
கைவைத்த வீடு குலையும் முன்னே
வந்து காத்தருளே!

மைவரும் கண்டத்தர் மைந்த! கந்தா
என்று வாழ்த்தும் இந்தக்
கைவரும் தொண்டன்றி மற்றறியேன்;
கற்ற கல்வியும் போய்ப்
பைவரும் கேளும் பதியும்
கதறப் பழகிநிற்கும்
ஐவரும் கைவிட்டு மெய்விடும்
போதுன் அடைக்கலமே.

காவிக் கமலக் கழலுடன் சேர்த்து
எனைக் காத்தருளாய்!
தூவிக் குலமயில் வாகனனே!
துணை ஏதும் இன்றித்
தாவிப் படரக் கொழுகொம்
பிலாத தனிக்கொடிபோல்,
பாவித் தனிமனம் தள்ளாடி
வாடிப் பதைக்கின்றதே

என்பன போல, முருகப் பெருமான் தம்மைக் காத்தருளல் வேண்டும் என்று, அருணகிரியார் இரந்து வேண்டிக் கொள்ளும் இனிய பாடல்கள், எவர் உள்ளத்தையும் கவர வல்லனவாகும்.

இங்ஙனமே, உலக மக்களுக்கு அறிவுரைகள் கூறும் முறையிற் பல சிறந்த பாடல்கள் கந்தர் அலங்காரத்திற் பயின்று வருகின்றன.

தடுங்கோள் மனத்தை; விடுங்கோள்
வெகுளியைத்; தானம் என்றும்
இடுங்கோள்; இருந்தபடி இருங்கோள்;
எழுபாரும் உய்யக்
கொடுங்கோபச் சூருடன், குன்றம் திறக்கத்
துளைக்க, வைவேல்
விடும்கோன் அருள்வந்து தானே
உமக்கு வெளிப்படுமே!

வையிற் கதிர்வடி வேலோனை
வாழ்த்தி, வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்கள்;
நுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின்
வெறும் நிழல்போல்
கையிற் பொருளும் உதவாது
காணும் கடைவழிக்கே.

என்பன போல வரும் பாடல்கள், அருணகிரிநாதர் உலக மக்களுக்கு அறிவுறுக்கும் சிறந்த ஞானோபதேசங்கள் ஆகும்.

கந்தர் அலங்காரத்திற் காணும் சிற்சில பாடல்கள், முதன் முறையாகக் கேட்ட மாத்திரத்திலேயே மக்கள் நெஞ்சகத்தில் செவ்விதிற் பதிந்து மகிழ்வுறுத்தும் தகையனவாகும்.

சிந்திக்கிலேன்; நின்று சேவிக்கிலேன்;
தண்டைச் சிற்றடியை
வந்திக்கிலேன்; ஒன்றும் வாழ்த்துகிலேன்;
மயில் வாகனனைச்
சந்திக்கிலேன்; பொய்யை நிந்திக்கிலேன்;
உண்மை சாதிக்கிலேன்;
புந்திக் கிலேசமும், காயக்
கிலேசமும் போக்குதற்கே.

விழிக்குத் துணை, திரு மென்மலர்ப்
பாதங்கள்; மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணை முருகா எனும்
நாமங்கள்; முன்புசெய்த
பழிக்குத் துணை, அவன் பன்னிரு
தோளும்; பயந்ததனி
வழிக்குத் துணை, வடி வேலும்
செங்கோடன் மயூரமுமே.

சேந்தனைக், கந்தனைச், செங்கோட்டு
வெற்பனைச், செஞ்சுடர்வேல்
வேந்தனைச், செந்தமிழ் நூல்விரித்
தோனை, விளங்குவள்ளி
காந்தனைக், கந்தக் கடம்பனைக்,
கார்மயில் வாகனனைச்,
சாந்துணைப்போதும் மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.

என்பன போல வரும் பாடல்கள், முதன் முறையாகக் கேட்ட அளவிலேயே, எவர் மனத்திலும் இனிது பதிந்து இன்பம் விளைவிப்பனவாகும்.

ஒரு நூல் மிகவும் சிறப்புடையது என்பதற்கு அடையாளம், அதன்கண் வரும் பாடல்களை அறிஞர்கள் வியந்தும் நயந்தும் அடிக்கடி எடுத்துக் கையாளுவதாகும். அம்முறையிற் பின்வரும் அழகிய இனிய கந்தரலங்காரப் பாடல்கள், பல்காலும், அறிஞர்களால் பெரிதும் கையாளப்படும்.

மொய்தார் அணிகுழல் வள்ளியை
வேட்டவன்; முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன்;
வெய்ய வாரணம்போற்
கைதான் இருப துடையான், தலை
பத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள்
பயந்த இலஞ்சியமே.

முடியாப் பிறவிக் கடலிற் புகார்;
முழுதும் கெடுக்கும்
மிடியாற் படியில் விதனப்படார்;
வெற்றி வேற் பெருமாள்;
அடியார்க்கு நல்ல பெருமாள்;
அவுணர்குலம் அடங்கப்;
பொடியாக்கிய பெருமாள்
திருநாமம் புகல்பவரே

தோலாற் சுவர்வைத்து, நாலாறு
காலிற் சுமத்தி, இரு
காலால் எழுப்பி, வளைமுதுகு ஓட்டிக்,
கைநாற்றி, நரம்
பால் ஆர்க்கை இட்டுத் தசைகொண்டு
மேய்ந்த அகம்பிரிந்தால்,
வேலாற் கிரிதுளைத்தான் இருதாள்
அன்றி வேறில்லையே.

என்பன போன்ற பாடல்கள், மிக்க சுவை பொருந்திய விழுமிய அழகிய பாடல்கள் ஆகும். இவற்றை அறிஞர்கள் அடிக்கடிஎடுத்துரைத்துப் போற்றிப் பாராட்டுவர்

அருணகிரி நாதர், முருகன்அருளைமுழுதாக நிரம்பப் பெற்று மகிழ்ந்த சிறந்த அருட்பெருஞ் சான்றோர். ஆதலின், அவர் பிறப்பச்சமும், இறப்பச்சமும் அறவே நீங்கப் பெற்றவர் ஆவர். ஆதலின், அவர் பிறப்பிக்கும் தொழிலை யுடைய பிரமனையும், இறப்பிக்கும் செயல் புரியும் இயமனையும், எளியர் என எண்ணிக் குறை கூறியும், இகழ்ந்து ஏளனம் புரிந்தும், கந்தரலங்காரத்திற் பாடுவர்.

மாலோன் மருகனை, மன்றாடி
மைந்தனை, வானவர்க்கும்
மேலான தேவனை, மெய்ஞ்ஞான
தெய்வத்தை, மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச்
சென்று கண்டுதொழ
நாலாயிரம் கண்படைத் திலனே
அந்த நான்முகனே.

பங்கே ருகன்எனைப் பட்டோலையில்
இடப், பண்டுதளை
தங்காலில் இட்டது அறிந்திலனோ?
தனிவேல் எடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னம்
சிலம்பு புலம்பவரும்
எங்கோன் அறியின் இனி நான்
முகனுக்கு இருவிலங்கே

கோடாத வேதனுக்கு யான் செய்த
குற்றமென்? குன்றெறிந்த
தாடாளனே! தென் தணிகைக் குமர !
நின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும், நாடாத
கண்ணும், தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே
தெரிந்து படைத்தனனே

வேல்பட் டழிந்தன வேலையும், சூரனும்,
வெற்பும்; அவன்
கால்பட் டழிந்ததிங் கென்றன்
தலைமேல் அயன் கைஎழுத்தே

எனப் பிரமதேவனைக் குறைகூறும் முறையில் அமைந்துள்ள அரிய இனிய செய்யுட்கள் பெரிதும் சுவை மிக்கனவாகும்.

இவ்வாறே, யாவரும் அஞ்சி வெருவி நடுங்குதற்குரிய இயமனையே அச்சுறுத்தி எச்ச ரிக்கும் வகையிற் பல பாடல்கள், அருணகிரி நாதரால் கந்தரலங்காரத்திற் பாடப்பெற்று உள்ளன.

தண்டா யுதமும் திரிசூல மும்விழத்
தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன்;
செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய என் அவிரோத
ஞானச் சுடர்வடிவாள்
கண்டாய் அடா, அந்தகா! வந்துபார்
சற்றென் கைக்கெட்டவே!

பட்டிக் கடாவில் வரும் அந்தகா!
உன்னைப் பார் அறிய
வெட்டிப் புறங்கண் டலாது விடேன்!
வெய்ய சூரனைப் போய்
முட்டிப் பொருத செவ்வேற் பெருமாள்
திருமுன்பு நின்றேன்!
கட்டிப் புறப்படடா! சத்திவாள்
என்றன் கையதுவே!

வாராது அகல், அந்தகா!
வந்தபோது உயிர் வாங்குவனே!

எமராசன் விட்ட கடை ஏடு
வந்தினி என் செயுமே?

என்பன போல வரும், இனிய கந்தரலங்காரச் செய்யுள்கள், அருணகிரி நாதரின் திருவருட் பேற்றையும், சிந்தை ஊற்றத்தையும், செவ்வி தின் விளக்கும்.

கவிதை என்பது கவிஞனின் அநுபவத்தி னின்று அரும்பி மலர்வது; கவிஞனின் அநுபவச் சிறப்புக்கு ஏற்பக் கவிதை நூலின் சிறப்பும் உயர்ந்து விளங்கும். அம்முறையில் கந்தர் அலங்காரத்தின் சிறப்புக்குக் காரணமான அருணகிரிநாதரின் அருளனுபவங்கள், பல பாடல்களில் அழகுறப் புலப்படுத்தப் பெற்று உள்ளன.

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல்
காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை, மெய்யன்பினல்
மெல்லமெல்ல உள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம்,
தித்தித்து அறிந்த அன்றே
கரும்பும் துவர்த்துச் செந்தேனும் புளித்து,
அறக் கைத்ததுவே

நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லாம்
ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னை மறந்திருந்தேன்; இறந்தே
விட்டது இவ்வுடம்பே.

என்பன போன்று வரும் பாடல்களில், அருண கிரி நாதரின் அருளனுபவ நலங்கள் தெளிவுற விளங்குகின்றன.

கந்தர் அலங்காரம் ஓர் எளிய சாதாரண மான சிறு நூல் அன்று. கல்வி நலஞ்சான்ற புலவர் பெருமக்களும், கடவுள் நெறிப் பெருஞ் சான்றோர்களும் வியந்து போற்றிப் பயின்று மகிழ்ந்த ஓர் அரும்பெறல் நூலாகும்.

நமது தமிழ் நாட்டில் தோன்றியருளிய அருட்பெருஞ் சான்றோர்களுள், தாயுமான சுவாமிகளின் அருமை பெருமைகளை அறியாதார் இல்லை. அவர் வேதாந்த சித்தாந்த சமரசச் செந்நெறி வித்தகர்! யோக ஞான அனுபவ நலங்களில் ஒப்பாரும் மிக்காரும் இன்றி உயர்ந்து சிறந்து விளங்குபவர். அவர் கந்தர் அலங்காரத்தினை மிகவும் விரும்பிப் பயின்று போற்றிப் பயன் கொண்டுள்ளார்!

யான்தான் எனும்சொல் இரண்டும்
கெட்டால் அன்றி யாவருக்கும்
தோன்றாது சத்தியம்; தொல்லைப்
பெருநிலம் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன்
கிருபாகரன் கேள்வியினால்
சான்று, ஆரும் அற்ற தனிவெளிக்கே
வந்து சந்திப்பதே

என்னும் கந்தர் அலங்காரச் செய்யுளின் அரும் பெரும் கருத்தில், தாயுமானசுவாமிகள்பெரிதும் ஈடுபட்டு, நினைந்து நினைந்து வியந்து மகிழ்ந்து அதனைப் பெரிதும் புகழ்ந்து போற்றியிருக்கின்றார்.

''யான்தான் எனல் அறலே
இன்ப நிட்டை என்று அருணைக்
கோன்தான் உரைத்த மொழி
கொள்ளாயோ நன்னெஞ்சே''

என்று, தாயுமானவர் அருணகிரி நாதரின் கந்தர் அலங்கார ஞானோபதேசத்தினைத் தமது நெஞ்சத்திற்கு எடுத்துக் கூறி அறிவுறுத்தியிருத்தல் காணலாம்.

இங்ஙனம், தாயுமான சுவாமிகள்முதலான பெருஞ் சான்றோர்கள் அனைவரும் விரும்பிப் பயின்று போற்றிப் பயன்கொண்ட, கந்தரலங்காரத்தினை, நாமும் அன்புடன் போற்றிக் கற்று, அருணகிரி நாதரின் அருளைப் பெற்று, உய்ய முயல்வோமாக!

[அருணகிரிநாதர் 600-ஆம் ஆண்டுச் சிறப்பு விழாவினையொட்டி, சென்னை வானொலியில், 10—9—75 அன்று இரவு, ஆசிரியர் நிகழ்த்திய உரை].



# "தன்பெருமை தான்அறியாத் தன்மையன்"

திரு. பெ. திருஞானசம்பந்தன். M.A., L.T.,

இது விளம்பர யுகம். தனக்கு இல்லாத ஒன்றை இருப்பது போன்ற பிரமையை மக்களிடையே ஏற்படுத்த முனைகிறான் மனிதன். தன் அறியாமையைத் திரையிட்டு மறைத்து, தான் மிகுதியும் கற்றுணர்ந்தவன் போல் சதுரப்பாடுடன் பேசி, கேட்போர் உள்ளத்தில் மாறுபட்ட கருத்தைத் தோற்றுவிக்கிறான். பொருளற்றவனும் ஆடம்பரமாக ஆடைஉடுத்தி உந்தூர்தியில் ஊர்ந்து பொருள் படைத்தவன் போல் காட்சி தருகிறான். உடலழகு குறைந்தவனும் செயற்கைப் பொருள் கொண்டு அழகூட்டிக் கொண்டு பிறரை மயக்குகிறான். அகத்திற்கும் புறத்திற்கும் வேறுபாடு. உண்மை ஒன்று, தோற்றம் வேறு. மனிதன் மட்டும்தானா இப்படி? கடவுளும் அப்படித்தான்! சான்று வேண்டுமா? காளிதாசனும் மாணிக்கவாசகரும் கூறுவதைக் கேளுங்கள்.

பார்வதி தேவியானவள் பரமசிவனையே பதியாக அடைவது என்று உறுதி பூண்டு கடுந் தவம் செய்கிறாள். அவள் உறுதியைச்சோதிக்க ஒருவர் வலிய வருகிறார். அவர் ஒரு பிரம்மசாரி. தானே அவளை மணந்து கொள்ள எண்ணுகிறாரோ? அவர் கேட்கின்றார்—'நங்காய்! நீ விரும்பும் அந்த மகாதேவரை நான் நன்றாக அறிவேன். அவருக்கு மங்களப் பொருளே பிடிக்காது போலிருக்கிறதே. நீயோ விரும்பத் தகாத அவரிடத்தில் மனத்தைப் பறிகொடுத்திருக்கிறாய். திருமணக் கோலத்தில் மங்கள சூத்திரம் கட்டிக் கொண்டிருக்கும் உன் திருக் கரத்தை, நச்சரவத்தைக் கையில் சுற்றிக்கொண்டிருக்கும் அவர் கை பிடிக்கப் போகிறது. அதை எப்படித்தான் பொறுத்துக் கொள்வாயோ. அது போகட்டும். திருமணத்திற்கு எழுந்தருளும் போது அன்ன உருவம் பொறித்த பட்டாடை உடுத்தி நீ வரும் போது, கஜ சம்ஹாரமூர்த்தி வேடந்தாங்கி இரத்தம் சொட்டும் யானைத் தோலைத் தரித்தவராக அவர் வருவாரே. அது எவ்வளவு பொருத்தம் என்பதை எண்ணிப் பார்த்தாயா ? பட்டாடையின் நுனியுடன் யானைத் தோலை எப்படி முடிச்சுப் போடுவதாம் ? திருமணம் முடிந்து புக்ககம் போக வேண்டுமே. செம் பஞ்சி பூசப்பட்ட உன் மலர்ப் பாதங்கள், மலர் தூவப்பட்ட இமவான் அரண்மனையில் மென்மையாக நடந்து பழக்கமாயிற்றே. உதிர்ந்த ரோமங்கள் மலிந்த மயான பூமியாகிறஅப் புக்ககத்தில் எப்படிக் காலடி எடுத்து வைக்கப் போகிறாயோ என்று இரக்கப்படுகிறார் வந்த பிரம்மசாரி. அவர் முக்கண்ணர். உடலெல்லாம் சாம்பற் பூச்சு. நல்ல அழகர்! அரிசந்தனம் பூசப் பெற்ற உன் திருமேனியைக் குழைவதென்றால் . . .இதைக் காட்டிலும் பொருத்தமற்றது என்ன இருக்க முடியும்? மற்றொரு கேலிக் கூத்தைப் பார்த்தாயா? கஜராஜன் மீது நீ பவனி செல்வாய். அப்படிப் பழக்கப்பட்ட நீ, அவருடைய காளை மாட்டின் மீது சவாரி செய்தால் மகா சனங்கள் கைகொட்டிச் சிரியாரோ? ஏற்கனவே கலையிழந்த சந்திரன் அவரைச் சார்ந்து ஐயோ பாவம் என்று இரங்கத்தக்க நிலையில் இருக்கின்றான். இப்போது நீ இரண்டாவதாக அவரைச் சார்ந்து அதே நிலையை அடையப் போகிறாயோ? 'கன்யா வரயதே ரூபம்', அதாவது ஒரு பெண் வரப் போகும் மணமகன் கட்டழகனாக இருப்பதைத் தான் விரும்புவாள் என்று கூறுவார்கள். ஆனால் நீ விரும்பும் கணவனுக்கோ, மூன்றாவது கண் ஒன்று உண்டு. அழகுதான்! குலம் கோத்திரம் உண்டா? யாருக்குத் தெரியும்? பணக்காரரா? அவர் திக்குகளையே வஸ்திரமாகக் கொண்டவர் என்பதிலேயே தெரிகிறதே என்று கூறி நிறுத்தினார் பிரம்மசாரி.

இவற்றைக் கேட்ட பார்வதியின் புருவம் நெளிந்தது. கண்களில் செவ்வொளி படர்ந்தது. உதடுகள் துடித்தன.

பிரம்மசாரி எழுப்பிய கேள்விகள் காளிதாசன் காலம் முதல் இன்று வரை கேட்கும் கேள்விகள் தான். நம்மையெல்லாம் சிந்திக்க வைக்கும் வகையில், பார்வதியின் பக்கலில் நின்று மறுமொழி கூறுகின்றான் கவிஞன். மங்கலப் பொருளை யார் எதற்காக அணிகின்றனர் ? தீமையைப் போக்குவதற்கோ, ஐசுவரியம் முதலானவற்றைப் பெறுவதற்கோ, மக்கள் மங்கலப் பொருளை மேற்கொள்வதுண்டு. வேண்டுதல் வேண்டாமை இலாதானும், வேண்டுவோர் வேண்டியாங்கு ஈவோனுமாய், உலகசரண்யனாய் இருக்கின்ற அவனுக்கு மங்கலப் பொருளால் யாது பயன்? அவனுக்கென்று பொருள் இல்லை தான். அனைத்துப் பொருளும் தோன்றுவதற்கு முதற் காரணனே அவனாயிற்றே. பயங்கர உருவம் கொண்டவன் என்றால், அவனைத்தானே அனைவரும் சௌம்யரூபனான சிவன் என்று அழைக்கின்றனர். உருவு கண்டு எள்ளாமை வேண்டும். அவனது உண்மைச் சொரூபத்தை, தத்துவத்தை அறியவல்லார் யாவர்? எக் கோலம் கொண்டாலும், சிவசொரூபம் அவ்வக் கோலங்களால் அளவிடற் கூடியதன்று. அஷ்டமூர்த்தியான அவருக்குப் பொன்னணியும் பாம்பணியும் ஒன்றே. பட்டுடையும் கரியுரியும் ஒன்றே. வெள்ளோடும் வெண்மதியும் ஒன்றே. சுடலைப் பொடி பூசியவர் என்பதால் என்ன?

பெருமான் மெய்யைச் சார்ந்ததாலேயே அப் பொடியன்றே புனிதமடைந்தது. எப்படி என்று கேட்கிறீர்கள்? இல்லாவிட்டால் அவர் நட்டம் பயிலும் போது அவர் திருமேனியினின் றும் விழுகின்ற அப்பொடியைத் தேவர்களெல் லாம் தங்கள் தலையில் தரிக்கின்றார்களே. அதி லிருந்து தெரியவில்லையா என்று கேட்கின்றாள் பார்வதி. விடையேறும் பரமன் பாதத்தில், யானையேறும் இந்திரனின் முடியல்லவா பதி கிறது. இங்கு வாகனத்திற்கா பெருமை? அவ ருடைய குலம் கோத்திரம் பற்றிக் கேட்டீரே, நன்றாகக் கேட்டீர். உலகத்தைப் படைத்த பிரமனுக்கே முதற் காரணன் என்று விஷயம் அறிந்தோர் கூறுகின்றனர். ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ் சோதிக்குப் பிறப்பென்ற பேச்சுக்கு இடமேது? 'இனியும் உம்முடன் விவாதிக்க நான் விரும்பவில்லை. நீர் சொல்வது உண்மை என்றே வைத்துக் கொள்வோம். பெருமானிடத்தில் நான் கொண்டுள்ள காதல் உணர்வு ஒன்றே என் உள்ளத்தில் நிறைந்துள் ளது. நீர் எதைச் சொன்னாலும் அது என் உள் ளத்தில் புகுதற்கு இடமில்லை' என்று விவாதத் திற்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள். பெரி யோர்களைப் பற்றி அவதூறு பேசுகின்றவர்கள் மட்டுமல்ல, அதனைக் கேட்பவர்களும் பாவத் திற்குள்ளாவர்கள் என்று கருதினாள் பார்வதி தேவி. இதுவரை வாதிட்ட பிரம்மசாரி இடபா ரூடராய்க் காட்சியளித்து, 'உன் தவத்தால் விலை கொள்ளப்பட்ட நான் இன்று முதல் உன் தாசன்' என்று கூறி மறைந்தார்.

காளிதாசன் காலத்திற்குப் பின்னர், சில நூற்றாண்டுகள் கழித்து மாணிக்கவாசகர் காலத் திற்கு வருகிறோம். இரு தோழிகள் 'சாழல்' விளையாட்டு விளையாடுகிறார்கள். அந்த விளை யாட்டிலும், அலகிலா விளையாட்டுடையான் பற்றிய பேச்சே ஒழிய, வம்புப் பேச்சு இல்லை. ஒருவள் கேட்கிறாள், உண்மை நிலை அறியாத மக்கள் சார்பில், நான் மறையைத் தந்தவர் சிவபெருமான் என்கிறார்களே, அவர் ஏன் சுடலைப் பொடியைப் பூசிக் கொள்ள வேண்டும், நச்சுப் பாம்பைச் சுற்றிக் கொள்ள வேண்டும்? ஒன்றுக்கொன்று பொருந்தும் செயலாக இல்லையே என்கிறாள். உண்மையை உணர்ந்த மற்றவள் சொல்கிறாள்—'காரிய மாயைக்குத் தோற்றம், நிலைபேறு, ஒடுக்கம் முதலான மாற்றங்கள் உண்டு. உடல் முதலான பொருள் களின் நிலையாமையை உணர்த்துவது வெண் ணீறு. வளையமாகச் சுருண்டு கிடக்கும் பாம்பு வட்ட வடிவமான குண்டலி மாயையைக் குறிக்கும்.'

அது சரி, அவர் கோவணம் உடுத்துவ தாகச் சொல்கின்றனரே. ஈசன் என்றும் சொல் கின்றனரே. அறிவும் திருவும் நிறைந்தவர் அல்லவா ஈசன்? ஏன் இவர் தைத்த கோவ ணத்தை உடுத்திக் கொள்ள வேண்டும் என்று வினவுகிறாள் தோழி. அடுத்தவள் மறுமொழி சொல்கிறாள்—'கோவணத்தை இணைத்துள்ள சரடே நான்மறை, கோவணமே மெய்ப்பொருள் ஆகும். மேலும் முன்னவள் கேட்டாள் — அவர் குடியிருக்கச் சுடுகாடுதானா கிடைத்தது? புலித்தோலன்றி நல்ல ஆடையை உடுத்திக் கொள்ள இயலாதா? ஐயோ பாவம் தாய் தந்தை இல்லாத தனி மரமாய் இருக்கிறாராமே என்று பரிவுடன் வினவினாள். மற்றவள் சொன் னாள்—முடிவேய்ந்த மன்னரும் சுடுகாட்டில் பிடிசாம்பராகப் போக, முழு முதற் கடவுளான நம்பெருமான் ஒருவனே என்றும் இருக்கிறான் என்பதே 'கோயில் சுடுகாடு' என்பதாகும். அங்கே கோவாகிற அரசன் இல்லாமற் போகி றான். கோவாகிற கடவுளின் இல்லமாக இருக் கிறது அதே சுடுகாடு. உலகத்திற்கே தந்தை தாயாகுவானுக்குத் தாய் தந்தை எப்படி இருக்க முடியும்? புலி என்பது கோபத்தின் அடையா ளம். அதை அடக்குதலே புலித்தோலை உரிப்ப தாகும். சினம் நீங்கிச் சாந்த நிலை எய்துவதே இறைவனை அடைவதற்கு வழி என்பதை உணர்த்துவது, அவர் புலித்தோலை உடுத்துவது என்று பதிலிறுத்தாள். மீண்டும் முன்னவள் 'நங்காய், நரம்பையும், ஆமை ஓட்டையும், எலும்பையும் தம் திருமேனியில் அணிவதுடன், எலும்புக் கூட்டையே தோளின்மேல் சுமந்து திரிகின்றாரே. இது என்ன தவமோ? என்று கேட்கிறாள் வியப்புடன். எலும்பு, நரம்பு, ஆமையோடு முதலியன இறந்தொழிந்த தேவர் களின் எஞ்சிய பொருள்கள். அவர்கள் பிறப் பிறப்புடையவர்கள். சிவபெருமான் மூவாத சாவாத முதல்வன் என்பதை உணர்த்துவன அவை. எலும்புக் கூடு, அயன் அரி ஆகியோரின் எலும்புக் கூடாகும். அனைவரின் கால முடிவை யும் முடித்தருளும் காலகாலன் என்பதைச் சுட்டுவதே கங்காளம் எனக் கூறினாள் பின்ன வள். மீண்டும் முதல் தோழி மொழிகின்றாள் —கம்பீர நடைபோடும் யானை இருக்கவும், கடிதிற் செல்லும் குதிரை இருக்கவும், குதிரை பூட்டிய தேர் இருக்கவும், கேவலம் ஒரு எருதின் மீது சவாரி செய்வதிலே இவருக்கு என்ன மோகம் என்கிறாள். மற்றவள் மாற்றம் தரு கிறாள்—'இரும்பு, பொன், வெள்ளி ஆகியவற் றால் ஆகிய மதில் சூழப்பெற்ற முப்புரங்களையும் முறுவலித்தே முடிவுக்குக் கொண்டு வந்தபோது எருதாகத் தாங்கித் துணை புரிந்தவன் திருமால் அன்றோ. மேலும் இடபம் இறைவன் போன்று வேண்டுதல் வேண்டாமை இல்லா இயல்பினது. யானை அறிவையும், குதிரை செறிவையும், தேர் நோன்பையும் குறிப்பன என்பர் ஆன்றோர். அறமாகிற இடபம் அனைத்தினும் மேம்பட்டது என்பது குறிப்பு. 'ஆயபதிதான் அருட்சிவ லிங்கமாம் ஆய பசுவும் அடலேறென் நிற்கும்' என்ற திருமூலர் வாக்கும், ஏற்றின் ஏற்றத்தை எடுத்துக் காட்டும் பகுதியாகும்.

கடலைக் கடைந்தபோது அமுதமும் ஆலால மும் விளைந்தன. அமுதத்தை விடுத்து ஆலா லத்தை உண்டது என்ன சதுரப்பாடோ என்று முதல் நங்கை வினவவும், தோழி கூறுகிறாள்— 'எம் பெருமான் எதனை உடுத்தாலும், எதனை அணிந்தாலும், எதனை உண்டாலும் அவனுக்கு எத்தகைய சிறுமையும் இல்லை. குறைவு இருக் கும் இடத்தில்தான், பெருமை பற்றிய சிந்தனை எழும். தனக்குவமை யில்லாத தகைமையாள னுக்குச் சிறுமை ஏது பெருமை ஏது. 'தன் பெருமை தானறியாத் தன்மையன்' சிவ பெரு மான் என்பதைக் காளிதாசனும், மாணிக்கவாச கரும் எத்தனை சதுரப்பாட்டுடன் உணர்த்தி உள்ளனர் என்பதைப் பார்த்தீர்களா? *

## சிறு பிழையும், பெருந்தண்ணளியும் :

நமது தமிழக அரசின் ஆதரவில், இந்து அறநிலைய ஆட்சித் துறையின் சார்பில், நல்ல முறையில் நடைபெற்று வரும் ''திருக்கோயில்'' திங்கள் இதழ், இஞ்ஞான்றைய பத்திரிகை யுலகில், சமய—தத்துவ—இலக்கிய—சான்ருண்மைப் பண்பாட்டு நலத் துறைகளில், குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்து வருகின்றது. வெறும் வாணிக நோக்கம் இல்லாமல், நமது தமிழகத்தின் சமய நலப்பண்பாடுகளைப் போற்றிப் பரப்பி வளர்க்கும்நல்ல சிறந்த குறிக்கோள்களுக்காகவே நடத்தப் பெற்று வரும் ''திருக்கோயில்'' இதழ், அன்பர்களாலும், அறிஞர் பெருமக்களாலும், பெரிதும் மதித்துப் போற்றப்பட்டு வளர்ந்துவருகின்றது. பெரியோர்கள் பலர் அதனை எத்துணையளவிற்கு மிகவும் நுணுகிப் படித்து மகிழ்ந்து பாராட்டுகின்றனர் என்று அறியும்போது, நமக்கு வியப்பும் விம்மிதமும் விளைகின்றன! ''திருக்கோயில்'' இதழில் ஒரு கட்டுரையில், ஓரிடத்தில், எதிர்பாராமல் கவனக்குறைவு காரணமாக நேர்ந்துவிட்ட, ஒரு சிறு பிழையினை எடுத்துக் காட்டி, அச்சிறு பிழையும் நேராதபடி, விழிப்பாக இருந்து பார்த்துக் கொள்ளுதல் வேண்டும் என்று அன்புடன் அறிவுறுத்தி, மதிப்பிற்குரிய அறிஞர் பெருந்தகை ஒருவர் எழுதியிருக்கும் பின்வரும் கடிதம், ''திருக்கோயில்'' திங்கள் இதழ்களைப் பெரியவர்கள் பலர், எவ்வளவு நுணுக்கமாகக் கருத்தூன்றிப் படித்து வருகின்றனர் என்பதனை, இனிது உணர்த்தும் நற்சான்ருக அமைந்துள்ளது. '' குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டும்'' பெற்றியினதாகத் திகழும் அக் கடிதம் வருமாறு :—

"SARAYU"
Chingleput
1—9—75

**O. V. Alagesan, M. P.**

திரு. ந.ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர், திருக்கோயில்.

அன்புடையீர்,

திருக்கோயிலில் வரும் தங்கள் கட்டுரைகள், தங்களுடைய திண்ணிய மதியையும், நுண்ணிய ஆராய்ச்சியையும் காட்டுகின்றன. அதை எண்ணி நான் மிகவும் அகமகிழ்வதுண்டு.

திருக்கோயில் ஆகஸ்டு இதழில் ஓரிடத்தில் ''குலம்தரும் செல்வம் தந்திடும்...'' என்னும் பாட்டு, குலசேகராழ்வார் அருளியதாகக் குறிக்கப்பட்டுள்ளது. இது திருமங்கையாழ்வார் அருளிய பாசுரம் என்பது, யாவரும் அறிந்ததே.

இத்தகைய பளிச்சென்று தெரியும் பிழை எதுவும் வராமல் பார்த்துக்கொள்ளவும். இதைத் தவருக எடுத்துக்கொள்ள மாட்டீர்கள் என்று நம்புகிறேன்.

திருக்கோயிலின் தரத்துக்கும், தங்கள் பேருக்கும் தாழ்வு வரக்கூடாது என்பதற்காகவே, இதுபற்றி எழுத நேர்ந்தது.

அன்புள்ள,

ஓ.வி. அளகேசன்.

''திருக்கோயில்'' இதழில் ஒரு சிறிய பிழையும் நேர்தல் ஆகாது என்னும் விழைவு மீக்கூர்ந்து, மிக்க பெருந் தண்ணளியுடன், தமது பலதிற அலுவல்களுக்கிடையேயும், அன்புடன் கடிதம் எழுதி அறிவுறுத்திய அறிஞர் பெருந்தகை அவர்களுக்கு, நமது நன்றியும் அன்பும் என்றும் உரியனவாகும்.

''பிழைத்தவை பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி''

—மணிவாசகர்.

''குற்றம் புரிதல் எனக்கியல்பே!
குணமாக் கொள்ளல் உனக்கியல்பே!
சிற்றம் பலவா! இனிச் சிறியேன்
செப்பும் முகமன் யாதுள்து?''

—இராமலிங்கர்.

''சிறியோர் செய்யும்
சிறுபிழை எல்லாம்
பெரியோர் ஆயிற்
பொறுப்பது கடனே''

—அதிவீரராம பாண்டியர்.

—ஆசிரியர்.



# அருள்திரு இராமநாதசுவாமி திருக்கோயில்

## இராமேசுவரம்

*இமயம் முதல் சேது வரை பாவம் போக்கி மக்களுக்குப் பேரின்பமும், பெரு வாழ்வும் அளிக்கும் பல புண்ணியத் தலங்களைத் தன்னகத்தே தாங்கி நிகழும் பாரத நாட்டின் வேதங்கள் இதிகாசம், புராணங்கள் முதலியவற்றால் புகழப்படும் பெருமை வாய்ந்த புண்ணியத் தலங்களில் இராமேசுவரம் மிக முக்கியமானதாகும்.

*திருக்கோயில் நாடி வரும் பக்தர்களின் வசதிக்காகச் சகல வசதிகளுடன் கூடிய சிற்றில் களும், ஓய்வு விடுதிகளும் கோவிலைச் சுற்றியும், எதிர்ப் புறங்களிலும் கட்டப்பட்டுள்ளன.

*சுமார் 150 மாணவிகளுடன் இத்திருக்கோயிலில் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீ பர்வத வர்த்தினி அம்மன் பெண்கள் உயர்நிலைப் பள்ளி, இன்று ஆல் போல் தழைத்து 500 மாணவிகள் பயிலும் சிறந்த உயர்நிலைப் பள்ளியாகத் திகழ்கிறது. சுமார் ஐந்து இலட்ச ரூபாய் செலவில் பெண்கள் பள்ளிக் கட்டிடம் கட்டப்பட்டுச் சிறந்த ஒரு பள்ளியாகத் திகழ்கிறது.

*சமஸ்கிருதம், ஆங்கிலம் மற்றும் தமிழ் அபிவிருத்திக்காக இராமேசுவரம் திருக் கோயில் பாடசாலை, இராமேசுவரம் திருக்கோயில் கல்லூரியாக மாற்றப்பட்டு, பட்டப் படிப்பு வழங்கும் வகையில் கல்லூரியின் தகுதி உயர்த்தப்பட்டுள்ளது.

*திருக்கோயிலால் நடத்தப்பட்டு வரும் மாபெரும் திருப்பணிக்குத் தங்களுடைய காணிக்கையாக வாரி வழங்க வேண்டப்படுகிறது.

*திருக்கோயிலுக்கு வருகை தரக்கூடிய பக்தர்களின் வசதிக்காக ஆயுர்வேத மருத்துவ மனை ஒன்று ஆரம்பிக்கப்பட்டு இயங்கி வருகிறது.

*பக்தர்கள் எடுத்துச் செல்வதற்கு வசதியாகத் திருக்கோயில் பெயர் பொறிக்கப்பட்ட அழகிய பிளாஸ்டிக் பாட்டில்களில் கோடி தீர்த்தம் வழங்கப்படுகிறது. தங்களுக்குத் தேவையான அசல் சுத்தமான கோடி தீர்த்தத்தைத் திருக்கோயிலுக்குள்ளேயே வாங்கிக் கொள்ளக் கோரப்படுகிறது.

*பல வர்ணங்களில் பொறிக்கப்பட்ட ஸ்ரீ இராமலிங்கப் பிரதிஷ்டை படத்துடன் கூடிய டப்பாக்களில் கும்பாபிஷேகப் பிரசாதமாக விபூதி, குங்குமம், செந்தூரம் மற்றும் கோடி தீர்த்தம் உள்பட டப்பா ஒன்றுக்கு ரூ. 10 வீதம் வழங்கப்படுகிறது.

*இராமலிங்கப் பிரதிஷ்டை பொறிக்கப்பட்ட வெள்ளி டாலர்கள், பிளாஸ்டிக் மோதி ரங்கள், டாலர்கள் ஆகியவை முறையே ரூ. 12, ரூ. 5 வீதம் வழங்கப்படுகிறது.

திரு. எஸ். இராமநாத சேதுபதி, B.A.,
(பரம்பரை அறங்காவலர்)

திரு. ராம. முருகப்பச் செட்டியார்

திரு. ஏ. எல். ஏ. ஆர். சோமநாதன் செட்டியார்

திரு. தொ. க. சிறைமீட்டான், எம்.எல்.ஏ.,
(அறங்காவலர்கள்)

டி. வேணுகோபால், B.A.,
ஆணையர், நிர்வாக அதிகாரி



# மெய்ப்பொருள் காண்பது அறிவு

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,

**முன்னுரை**

திருக்குறள், உலகப் பேரிலக்கியங்களுள் தலை சிறந்த ஒன்று. அஃது ஓதுவதற்கு எளியது, இனியது. ஆயினும், அதன் உண்மை நுண்மைப் பொருள், எளிதில் உணர்வதற்கு அரியது. ''அறிதோறு அறியாமை கண்டற்றால்'' என்ற படி, ஆயுந்தொறும் ஆயுந்தொறும், அதன் கண் புதிய புதிய பொருள் நலங்கள் அமைந்து பொலியும். தொட்டனைத்தூறும் மணற்கேணி போல, நாம் சிந்திக்குந்தோறும் சிந்திக்குந் தோறும், திருக்குறட் பாக்களில், நமது அறிவுக்கும் அனுபவத்திற்கும் தவநலத்திற்கும் ஏற்பப் பற்பல புதிய புதிய கருத்துக்கள் சுரந்து கொண்டு செல்லும்.

அந்நிலையில் ஆழ்ந்து ஆராய்ந்து பொருள் காணத் தக்க, அரும்பெரும் நூல் திருக்குறள்! திருக்குறளில் உள்ள எல்லாக் குறள்களுமே, பொதுவாக நாம் பெரிதும் சிந்தித்து உணர்தற்கு உரியனவாயினும், அவையிற்றுள்ளும் சிற்சில குறள்கள், நாம் மிகப் பெரிதும் சிந்தித்து உணர்தற்கு உரியனவாகத்திகழ்கின்றன.

''எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு''.

என்பது, அத்தகைய நுட்பமிக்க குறள்களுள் ஒன்றாகும். இக்குறளுக்குப் பண்டை உரையாசிரியர்கள் பின்வருமாறு உரை வகுத்திருக்கின்றனர்.

## 1. மணக்குடவர்

''யாதொரு பொருள் யாதொரு தன்மைத்தாயினும், அப்பொருளினுடைய தன்மையைத் தான் உண்மையாகக் காண்பது யாதொன்று, அஃது அறிவாம் என்றவாறு.''

''மெய் என்பதூஉம் அறிவு என்பதூஉம் ஒன்று; என்னை? எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரு தன்மையாக அழியாது நிற்றலின், மெய்யாயிற்று; எல்லாப் பொருளையும் காண்டலால் அறிவாயிற்று'' என்பது மணக்குடவர் உரை.

இதன்கண் 'பொருள் தன்மை' என்றும், 'பொருளினுடைய உண்மை' என்றும் குறிப்பிடுப்பது மயக்கந் தருகின்றது. அன்றியும் இதில் 'மெய்ப்பொருள்' என்னும் தொடருக்கு உரிய நேர்ப்பொருள் இன்னதென்று சுட்டப் பெறவில்லை. மற்றும், 'மெய்யென்பதும் அறிவு என்பதும் ஒன்று' என்று விளக்கம் தரப்பட்டு உள்ளது. ஒன்றேயாயின், அவ்வொன்றுதானே தன்னை அறிவதும், அறியப்படுவதுமாய் நிற்றல் யாங்ஙனம்? என்னும் ஐயம் எழுகின்றது.

## 2. பரிதியார்

''எப்பொருள் எது சொன்னாலும், அந்தப் பொருளை உபதேசமாகக் காண்பது அறிவு என்றவாறு'' என்பது பரிதியார் உரை.

இதன்கண் 'எத்தன்மைத்தாயினும்' என்பதற்கு 'எது சொன்னாலும்' என்று பொருள் வகுக்கப்பட்டுள்ளது.

* ''ஓங்குபெரு மரங்களிலே
உரைகளையும், ஓடைகளிலே
பாங்குபெறு நூல்களையும்,
பலவாய பாறைகளில்
நீங்கலிலாச் சொற்பொழிவு
நெறிகளையும், எதன்மாட்டும்
தீங்கில்லாப் பண்பினையும்
திறம்தெரிந்து காண்பர்நல்லோர்!''
— ந. ரா. மு.

எனச் செகப்பிரியர் கூறுவது போன்றதொரு குறிப்பு, இவ்வுரையில் கிடைக்கின்றது எனினும், 'சொல்லுதல்' என்னும் பொருள்படுதற்குரிய சொல் எதுவும், மூலத்திற் காணப்படவில்லை. 'காண்பது' என்பதற்கு 'உபதேசமாகக் காண்பது' என்று உரை வரையப்பட்டுள்ளது. 'உபதேசம்' எனப் பொருள் கொள்ளுதற்குரிய சொல்லும், மூலத்தில் இல்லை.

## 3. காளிங்கர்

''உலகத்து யாதானும் ஒரு பொருள் உண்மை நிகழாது வேறுபாடு உடையதாயினும், அப்பொருள் மெய்யென்று கருதாது, மற்று அப்பொருளை உண்மைப் பொருளாகக் காண வல்லது யாது; மற்று அதுவே ஒருவர்க்கு அறிவானது என்றவாறு'' என்பது காளிங்கர் உரை.

இதன்கண் 'எப்பொருள்' என்பதற்கு 'உலகத்து யாதானும் ஒரு பொருள்' என்றும்,

---

* "Finds tongues in trees,
books in the running brooks,
Sermons in stones,
and good in everything."
—SHAKESPEARE,
*"As You Like It."*

'எத்தன்மைத்தாயினும்' என்பதற்கு 'உண்மை நிகழாது வேறுபாடு உடையதாயினும்' என்றும் பொருள் தரப் பெற்றிருக்கின்றது. பருந்தும் நிழலும்போல மூலத்தோடு ஒட்டிப் பிறழாது அமைதற்குரிய நேரிய உரையாக, இவைகள் தோன்றவில்லை. ''அப்பொருளை மெய்யென்று கருதாது மற்று அப்பொருளை உண்மைப் பொருளாகக் காண வல்லது'' என்னும் உரை, தெளிவானதாக இல்லை. 'மெய் என்று கருதற்க, உண்மைப் பொருளாகக் காண்க' என்று கூறுவது, சிறிது குழறுபடையாகவே உள்ளது. இதில் வெறும் சொல் மாற்றமேயன்றிக் கருத்து நுட்பம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை

## 4. பரிமேலழகர்

''எப்பொருள்—யாதொரு பொருள், எத்தன்மைத்தாயினும்—யாதோர் இயல்பிற்றாய்த் தோன்றினும்; அப்பொருள்—(அத்தோன்றிய வாற்றைக் கண்டு ஒழியாது) அப்பொருளின் கண் நின்று, மெய்ப்பொருள்—மெய்யாகிய பொருளை, காண்பது அறிவு—காண்பதே மெய்யுணர்வாவது.''

''பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து, நின்ற உண்மையைக் காண்பது என்றவாறாயிற்று.''

''அஃதாவது, கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்றவழி, அரசன் என்பதோர் சாதியும், சேரமான் என்பதொரு குடியும், வேழநோக்கினை உடையான் என்பதொரு வடிவும், சேய் என்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பதொரு சிறப்புப் பெயரும், ஒரு பொருளின் கண் கற்பனையாதலின், அவ்வாறு உணராது, நிலம் முதல் உயிர் ஈறாகிய தத்துவங்களின் தொகுதியென உணர்ந்து, அவற்றை நிலம் முதலாகத் தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக் கொண்டு சென்றால், காரண காரியங்கள் இரண்டும் இன்றி முடிவாய் நிற்பதனை உணர்தலாம்.''

'' 'எப்பொருள்' என்ற பொதுமையான், இயங்கு திணையும் நிலைத் திணையுமாகிய பொருள்கள் எல்லாம் இவ்வாறே உணரப்படும். இதனால் மெய்யுணர்வினது இலக்கணம் கூறப்பட்டது.'' என்பது பரிமேலழகர் உரை.

பரிமேலழகரின் இவ்வுரை, ஏனைய முன்னைய உரைகளைக் காட்டிலும், திட்பநுட்பம் மிக்குச் சிறந்து திகழ்கின்றது, என்பதில் ஐயம் இல்லை. எனினும் 'மெய்ப்பொருள் காண்பது' என்னும் தொடருக்கு வரைந்துள்ள உரை விளக்கம், சற்றுச் சிக்கல் உடையதாகத் தோன்றுகிறது. 'மெய்ப்பொருள் காண்பது' என்பது, நிலமுதல் உயிர் ஈறாகிய தத்துவங்களின் தொகுதியைத் தத்தம் காரணங்களுள் ஒடுக்கிக் கொண்டு சென்றால், காரண காரியங்கள் இரண்டும் இன்றி முடிவாய் நிற்பதனை உணர்தல் எனப் பரிமேலழகர் விளக்கி அருள்கின்றார். 'தத்துவங்களை ஒடுக்கிக் கொண்டு செல்லுதல்' என்றால் என்னை? என்பது நம்மனோர்க்குத் தெளிய முடியாமல் உள்ளது. மேலும் 'ஒடுக்கிக் கொண்டு சென்றால், முடிவாக ஒன்று நிற்கும். அதனை உணர்தலாம்.' என்கின்றார். வெங்காயச் சருகினை உரிக்க உரிக்க, முடிவில் ஒன்றும் இன்றியே செல்லக் காண்கின்றோம். ஆதலின், முடிவில் ஒன்று நிற்கும் என்பது ஐயப்பாடாகவே உள்ளது.

''மேவிய புன்மயிர்த் தொகையோ? அம்மயிர்
பாவிய தோலின் பரப்போ? தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ? புண்ணிடை
ஊறும் உதிரப் புனலோ? கூறுசெய்து
இடையிடை நிற்கும் எலும்போ? எலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ? வழுவழுத்து
உள்ளிடை ஒழுகும் வழும்போ? மெள்ளநின்று
ஊறும் புழுவின் ஒழுங்கோ? நீரிடை
வைத்த மலத்தின் குவையோ? வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ? உடம்பிற்குள்
பிரியாது ஒறுக்கும் பணியோ? தெரியாது ;
இன்னது யான்என்று அறியேன்; என்னை
எங்கும் தேடினேன்; யாதிலும் காணேன்''

என்று, தமிழகத்தின் தலைசிறந்த மெய்யுணர்வாளர்களுள் ஒருவராக ஒப்புயர்வற்று விளங்கும் பட்டினத்தடிகளார் பாடியருளியிருத்தல், இவ்வையப்பாட்டினை மேலும் வலியுறுத்துகின்றது.

## 5. தேவநேயப் பாவாணர்

பண்டைக் காலத்து உரை நூல்கள் ஒரு புறம் இருப்ப, அண்மைக் காலத்தில் திருக்குறள் முழுவதற்கும், மொழி நூற் பேரறிஞர் — பல்கலைக் குரிசில்—திரு. தேவநேயப் பாவாணர் அவர்கள், ஓர் அரும்பெறல் ஆராய்ச்சியுரை நூல் இயற்றி அருளியிருக்கின்றார்கள். அவ்வுரை நூல் தமிழறிஞர்களால் பொன்னினும் மணியினும் போற்றிப் பயன் கொள்ளத் தக்க நிலையிற் பெரிதும் சிறந்து திகழ்கின்றது. அதன்கண் இத் திருக்குறளுக்குப் பேரறிஞர் பாவாணர் அவர்கள் வரைந்துள்ள உரை விளக்கம், மிக்க சுவையும், நுட்பமும் பயனும் உடையதாக விளங்குகின்றது. அவ்வுரை வருமாறு;

''எப்பொருள் எத்தன்மைத்தாயினும் —காட்சியும் கருத்துமாகிய எந்தப் பொருள் எந்த இயல்பினதாகத் தோன்றினாலும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு — அந்தப் பொருளின் உண்மையான இயல்பை அல்லது கருத்தை அறிந்து கொள்வது மெய்யாகும்.''

''பொருள் என்பது பொருளும், பொருளைப் பற்றிய செய்தியும் என இரு வகைப்படும். அவ்விரு வகைப் பொருளின் மெய்த் தன்மையையும் அறியும் முறை, முறையே, மெய்ப்பொருள் முறையும், உண்மைப் பொருட்பாட்டு முறையும் என இரு திறப்படும்.''

''மெய்ப்பொருள் முறையானது, 'சேலம் கல்லூரி முதல்வர் அ. இராமசாமிக் கவுண்டர்' என்ற வழி, சேலம் என்னும் ஓர் ஊர்த் தொடர்பும், கல்லூரி என்னும் ஒரு தொழில் நிலையத் தொடர்பும், முதல்வர் என்னும் ஒரு பதவித் தொடர்பும், அனுமந்தராயர் என்ப

வரின் மகன் என்னும் ஓர் உறவு முறைத் தொடர்பும், இராமசாமி என்னும் ஓர் இயற் பெயரும், கவுண்டர் என்னும் ஒரு குலப் பெயரும், ஓர் உயிர் மெய்ப் பொருட்கு ஒரு பிறப்பில் ஏற்பட்ட நிலையில்லாத நிலைமைகளும் சொற்களும் ஆதலின் அவற்றைக் கொள்ளாது அவ்வுயிர் மெய்ப் பொருளை உயிரும் மெய்யு மாக இரண்டாகப் பகுத்து அவ்விரண்டையும் வெவ்வேறு மெய்ப்பொருட்டொகுதி யென உணர்ந்து, அவற்றின் மூலப்பொருள் வரையில் ஒன்றனுள் ஒன்றாக ஒடுக்கிக் கொண்டு சென் றால், இறுதியில் மூலமின்றி நிற்கும் பொருள் களை உணர்தலாம்.''

'''எப்பொருள்' என்று பொதுப்படக் கூறி யதனால், அஃறிணைப் பொருள்களும் இவ்வாறே உணரப்படும் என அறிக. இனி, உண்மைப் பொருட்பாட்டு முறையாவது, ''இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரம் பாட்டு ஆகாதோ?' என்றால் மிக விரைந்து பாட முடியும் என்றும்; சிவன் கொக் கிறகை அணிந்தான் என்றால் சிவவழிபாடு செய்பவன் ஒருவன் கொக்கிறகு போற் பூக்கும் பூவைச் சிவவுருவின் தலையிற் செருகினான் என்றும்; ஒருவன் மாறிப் பிறந்தாலொழிய வீடு பெற முடியாதெனின், மாறிப் பிறத்தல் என்பது மனமாற்றத்தையே குறிக்கும்' என் றும்;''

''தேங்காய் உடைத்துத் தெய்வ வழிபாடு செய்ய வேண்டும் எனின், தேங்காய் உடைந்து நீர் சிந்தி வெண்மையாய்த் தோன்றுவதுபோல, வழிபடுபவன் தான் செய்த தீவினை பற்றி உள்ளம் உளைந்து கண்ணீர் சிந்தித் தூய்மை யாக வேண்டும் என்றும்;''

இருட்டறை மூலையில் இருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி அவனை மணம்புரிந் தாளே

என்றால், தொடக்கமிலியாக அறிவுக் கண் இன்றி இருந்த ஆதன் (ஆத்மா), இறைவன் திருவருளால் கண் திறக்கப் பெற்றுப் பேரின்ப வீட்டின் மாண்பையும், பிறவித் துன்பத்தின் கொடுமையையும் உணர்ந்து, இரு வகைப் பற்றும் துறந்து, பிறப்பு நீங்கி இறைவன் திரு வடியை அடையும் என்றும்; உணர்தல்.''

பேரறிஞர் பெருந்தகை திரு. பாவாணர் அவர்களின் இவ்வுரை, செவ்விய நயம்பல செறிந்ததாய்ச் சிறந்து திகழ்வதுடன், அவர் களின் நுண்மாண் நுழைபுலம் மிக்க பன்மாண் குணங்களுக்குச் சிறந்ததொரு சான்றாகவும், விளங்குகின்றது.

## கவிதைகளில் பல பொருள்கள்

மேற்குறித்த பல்வேறு வகையான உரை களும் ஒவ்வொரு வகையில் சிறந்தனவேயாகும். ''கற்பனை வளஞ்சான்ற கவிதைகளில், சொற் கள், இதுவா அல்லது அதுவா என்னும் பொருள் களை உடையன அல்ல; அவைகள் இதுவும் அதுவும், பெரிதும் பொருந்தும் எதுவுமாகிய பொருள்களை உடையனவாகும். இந்நிலையில் தான், சிறந்த கவிதைகள் செயற்படும்''(1) என்பர் அறிஞர். ஆதலின் இத்திருக்குறளின் பொருளை மிகவும் எளிமையான முறையிலும், வேறு பிறிதொரு வகையிலும் சிந்தித்து உணர் தல் கூடும்.

''எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும்,
அப்பொருள்(கண்)
மெய்ப்பொருள் (ஐக்) காண்பது அறிவு''.

என்று ஏழன் உருபும், இரண்டன் உருபும் தொக்கு வந்தனவாகக் கொண்டும், இதன் பொருளை உய்த்துணர்ந்து கொள்ளலாம். 'மெய்ப்பொருள்' என்பதற்கு 'உண்மைப் பொருள்' என்றே பலரும் உரை வகுத்துள்ள னர். 'மெய்ப்பொருள்' ஆவது கடவுள். இங்ங னம் கொள்ளுவது ''மெய்யுணர்வு'' என்னும் அதிகாரத்திற்கு மிக மிகப் பொருந்துவதாகும் எனலாம். எனவே ''எந்தப் பொருள் எந்தத் தன்மை உடையதாக இருப்பினும், அந்தப் பொருளின்கண் கடவுளைக் காண்பது அறிவு (ஞானம்) ஆகும்'' என்று, இக்குறளுக்கு நேரிய முறையில் எளிதாகப் பொருள் கொள்ளலாம்.

## ஞானிகளின் காட்சி நலன்

''செயல் திறன் உள்ள மனிதன் நெருப் பிலும், உணர்ச்சித் திறன் மிக்க மனிதன் உள் ளத்திலும், அறிவுத் திறன் குறைந்த மனிதன் உருவப் படிமங்களிலும், ஆன்மிக ஞானத்திறன் மிக்க ஞானியானவன் எல்லா இடங்களிலும், எல்லாப் பொருள்களிலும், கடவுளைக் காண் கின்றான்'' (2) எனச் சமய தத்துவ ஞானநூல் கள் சாற்றுகின்றன. மெய்யுணர்வு பெற்ற மேலோர் ஆகிய ஞானிகள், எந்தப் பொருளை யும் கடவுளாகக் காண்பார்கள் ; எந்தப் பொரு ளிலும் அவர்களுக்குக் கடவுள் தன்மை நிறைந்து காணப்படும். 'எல்லாம் சிவம் என்ன நின்றாய் போற்றி' என்பது தேவாரம்.

''பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர்;
பதார்த்தங்கள் பாரார்'' (1)
''சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்'' (2)

என்பது சிவஞான சித்தியார். ஆனையநாயனர், கொன்றை மரத்தினை மரமாகக் காணாது, சிவ மாகவே கண்டுணர்ந்து வழிபட்டு உய்ந்தார்.

---

(1) "Words do not have either—or meanings in imaginative poetry : they have and—and—and meanings. That is how poetry works."

—HILARY CORKE.
"*Letter to the Listener.*"

(2) "The man of action finds his God in fire, the man of feeling in the heart, the feeble-minded in the idol, but the strong in spirit, finds God everywhere."

—DR. S. RADHAKRISHNAN

''அக்நௌ திஷ்டத் விப்ராணும்
ஹ்ருதி திஷ்டதி யோகிநாம்
ப்ரதிமாஸு அப்ரபுத்தாநாம்
ஸர்வத்ர ஸமதர்சிநாம''

''சென்றணைந்த ஆனயர்
செய்தவரைத் தாமம் என
மன்றல்மலர்த் துணர் தூக்கி
மருங்குதாழ் சடையார் போல்
நின்றதொரு கொன்றையினை
நேர்நோக்கி நின்றுருகி
ஒன்றியசிந் தையில் அன்பை
உடையவர்பால் மடைதிறந்தார்.''

இவ்வாறே, திருநாவுக்கரசர் பெருமானும் திருவையாற்றில் திருக்கயிலைக் காட்சி பெற்று, எல்லாரையும் எல்லாப் பொருள்களையும் சிவமும் சக்தியுமாகக் கண்டுணர்ந்தார்.

''வேத முதல்வர் ஐயாற்றில்
விரவும் சராசரம் எல்லாம்
காதற்றுணையொடும் கூடக்
கண்டேன் என்று பாடிநின்றார்.''

நமிநந்தியடிகள் என்னும் நாயனர், திருவாரூரில் தியாகேசர் திருவிழாவிற்கு வந்திருந்த மக்கள் அனைவரையும் சிவ கணங்களாகவே கண்டு மகிழும் பேறு பெற்றார். தாயுமான சுவாமிகள்

''பார்க்கின்ற மலரொடும்
நீயே இருத்தி
அப்பனிமலர் எடுக்க
மனமும் நண்ணேன்''

என்று அருளிச் செய்கின்றார். இவை போல்வன வெல்லாம், ஞானிகள் எல்லாப் பொருள்களிலும் கடவுளாகிய மெய்ப்பொருளைக் காண்பார்கள் என்றும், அங்ஙனம் காண்பதே மெய்யுணர்வாகிய ஞானம் என்றும், வலியுறுத்துதல் காணலாம். ஞானிகள் ஆகிய அருளாளர்கள் எல்லாப் பொருள்களிலும் கடவுளாகிய மெய்ப்பொருளைக் காண்பார்கள் என்பது, எல்லாச் சமய நூல்களும் ஏற்று உடன்பட்டுக் கூறும் அனுபவ நல முடிவேயாகும்.

**அரவிந்தர்**

அண்மைக் காலத்தில் வாழ்ந்திருந்த சான்றோராகிய அரவிந்தர், இத்தகைய மெய்ப்பொருட் காட்சியைப் பெற்றதன் விளைவே, தாம் மேற்கொண்டிருந்த தீவிரமான புரட்சி உணர்ச்சி அரசியல் நெறியினின்று அறவே விலகி அருளியல் நெறியில் முழுவதாகத் தலைப்படுவதற்கு ஏதுவாயிற்று, எனத் தெரிகின்றது. தமது அனுபவத்தை அரவிந்தர் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கின்றார்;

'' என்னைப் பொது மக்களிடமிருந்து பிரித்துத் தனியே அகப்படுத்தி வைத்திருந்த சிறையை நோக்கினேன்; இப்போதெல்லாம் அஃது என்னைப் பூட்டி வைத்திருக்கின்ற உயரிய மதில்களாகத் தெரியவில்லை. அது வாசுதேவன் என்னைச் சூழ்ந்திருந்ததாகவே தோன்றியது. நான் சிறையறையின் முன்னேயிருந்த மரத்தின் கிளைகளுக்கு அடியில் நடந்து சென்றேன். அது மரமாகத் தெரியவில்லை. அதனை வாசுதேவனாகவே யான் அறிந்தேன். கண்ணபிரான் அங்கு நின்றுகொண்டு நிழல் அளிப்பதாகவே எனக்குத் தோன்றியது. என் அறையின் இரும்புக் கம்பிகளை நோக்கினேன். மீண்டும் அவற்றிலும் வாசுதேவனைக் கண்டேன். அங்கு இருந்த காவலாளனும், நாராயணனாகவே எனக்குக் காட்சியளித்தான். படுக்கைக்காக எனக்குக் கொடுக்கப்பட்டிருந்த முரட்டுவிரிப்புகளிலும், போர்வைகளிலும், என் நண்பனும் காதலனுமாகிய கண்ணனின் அழகிய தோள்களையும், அரவணைப்பையுமே நான் கண்டுணர்ந்தேன். நீதி மன்றத்தில் எனக்கு எதிரில் இருந்த நீதிபதி, வழக்குத் தொடுப்பவர், அவருக்குத் துணை புரியும் வழக்குரைஞர் ஆகியோர்களை யான் காணவில்லை. அவர்களெல்லாம் எனக்குக் கண்ணனாகவே தோன்றினர். அங்கே கண்ணபிரானே அமர்ந்திருந்தார் ; எனக்குக் காட்சியளித்தார். அவரே என்னை நோக்கிப் புன்முறுவல் பூத்தார் . . .'' (3)

**முடிவுரை**

இவ்வாறு தாம் பெற்ற மெய்ப்பொருட் காட்சி அனுபவத்தினை, அரவிந்தர் விவரித்து விளக்கி உரைத்திருக்கக் காண்கின்றோம். அருளாளர்கள் அனைவரின் வாழ்க்கையிலும், வாய்மொழிகளிலும், இத்தகைய அருளனுபவ நிகழ்ச்சிச் செய்திகளை நாம் கற்றும் கேட்டும் அறிந்திருக்கின்றோம். ஆதலின்,

''எப்பொருள் எத்தன்மைத் தாயினும்,
அப்பொருள் (கண்)
மெய்ப்பொருள்(ஐ) காண்பது அறிவு''

என்று, ஏழன் உருபும், இரண்டன் உருபும் முறையே ஏற்ற பெற்றி விரித்தும், இக்குறளுக்குப் பொருள் கொள்ளலாம் ; அங்ஙனம் பொருள் கொள்ளுதலும், முன்னைய பல வகை உரைகள் போலப் பொருந்தும் எனலாம். ''எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதுஅறிவு''. ஆதலின், இப்பொருளின் பொருத்தமும் பொருத்தமின்மையும் பற்றியும், அறிஞர்கள் ஆய்ந்துணர்ந்து கொள்ளக் கடவர்.

(3) "I looked at the jail that secluded me from men and it was no longer by its high walls that I was imprisoned ; no, it was Vasudeva who surrounds me."

I walked under the branches of the tree in front of my cell, but it was not the tree, I knew it was VASUDEVA, it was Sri Krishna whom I saw standing there and holding over me His shade. I looked at the bars of my cell, the very grating that did duty for a door, and again I saw Vasudeva . . .

It was Narayana who was guarding and standing sentry over me. When I lay on the coarse blankets that were given to me for a couch, I felt the arm of Sri Krishna around me the arms of my Friend and Lover. I looked and it was not the Magistrate whom I saw . . it was not the Counsel for the prosecution that I saw ; it was Sri Krishna who sat there and smiled . . ."

—SRI AUROBINDO GOHSH,
**Uttarpara Speech**, Quoted by Dr. Karan Singh, in his book *Prophet of Indian Nationalism*, p. 156.

''இதுவா? அன்றி மற்று, அதுவா?
என்ப தில்லை; இயல்நலங்கள்
பொதுளும் சிறந்த கவிதையொன்றின்
பொருட்டி றனுக்கோர் எல்லையுண்டோ?
இதுவும் அதுவும் மட்டுமன்றி,
இயைந்த எதுவும் ஏற்கும்''என்றே,
மதிந லஞ்சால் அறிஞரெலாம்,
மன்ற உணர்ந்து மொழிகுவரே!

தமிழாக்கம்—ந. ரா. முருகவேள்

ஆணையர் அலுவலகம், அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600034

# சந்தாதாரர் விவரக் கேட்புத்தாள்

பொருள் : திருக்கோயில் சந்தா செலுத்திய விபரம் கோருதல்

திருக்கோயில் சந்தாதாரர்கள் திருக்கோயில் சந்தாவினைச் செலுத்திய விபரங்களைக் கீழேகண்டவாறு குறித்து அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

**விபரங்கள்**

| திருக்கோயில் சந்தா எண். | ஆண்டு | சந்தா செலுத்திய தொகை ரூபாய் | நிரந்தர ரசீது எண் மற்றும் தேதி | சந்தா செலுத்திய அலுவலகம் |
|---|---|---|---|---|
| | 1958—59 | | | |
| | 1959—60 | | | |
| | 1960—61 | | | |
| | 1961—62 | | | |
| | 1962—63 | | | |
| | 1963—64 | | | |
| | 1964—65 | | | |
| | 1965—66 | | | |
| | 1966—67 | | | |
| | 1967—68 | | | |
| | 1968—69 | | | |
| | 1969—70 | | | |
| | 1970—71 | | | |
| | 1971—72 | | | |
| | 1972—73 | | | |
| | 1973—74 | | | |
| | 1974—75 | | | |
| | 1975—76 | | | |

**சந்தாதாரரின் முழு முகவரி :**

சந்தாதாரரின் கையொப்பம்.

1. பெயர்..........................................................
2. வீட்டு எண்..........................................................
3. தெருப் பெயர்..........................................................
4. ஊர்ப் பெயர்..........................................................
5. அஞ்சலகப் பெயர்..........................................................
6. பின்கோட் எண்..........................................................
7. வட்டம்..........................................................
8. மாவட்டம்..........................................................



நூல் அஞ்சல்



பெறுநர்:

உயர்திரு. ஆணையர் அவர்கள்,

**இந்து சமய அறநிலையத் துறை.**

நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,

சென்னை - 34.

பின்கோட் எண். **600 034**

# பூம்புகார் கலைக்கூடம் காண வாரீர்!



நெடுங்கல் மன்றம்

- கல்லெல்லாம் கதை சொல்லும் சிலப்பதிகாரக் காட்சிகள் !
- புதையுண்ட பூம்புகார் புது வடிவம் பூண்டுள்ளது !
- சிந்தைக்கும் கண்ணுக்கும் தெவிட்டாத தமிழ் விருந்து !
- மனதைக் கவரும் மாதவியின் அழகுச் சிலை.

---

**இவற்றைக் காண பூம்புகார் சிலப்பதிகாரக் கலைக்கூடத்திற்கு வருகை தாரீர்!**

---

பூம்புகார் கலைக்கூடம், சீர்காழியிலிருந்து 21 கிலோ மீட்டர் தொலைவிலும், மாயவரத்திலிருந்து 29 கிலோ மீட்டர் தொலைவிலும் உள்ளது.

இயக்குநர்
**செய்தி, மக்கள் தொடர்புத் துறை, சென்னை-600009**



எழுநிலை மாடம்





சிக்கல் அருள்மிகு நவநீதேசுவரர் திருக்கோயில் கருணை இல்லத்தை அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்மன், B.A., B.L., I.A.S., அவர்கள் பார்வையிடுதல்.

வெளியிடுபவர்; ஆணையர், தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை, சென்னை-600034.
ஆசிரியர் : ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.
அச்சிடுவோர் : தமிழரசு அச்சகம், அரசினர் தோட்டம், சென்னை-600002.